# இறைவனின் தூதர்கள்

அருளியது
ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம்

டாக்டர் திரு. R.P. உருத்திரமணி, M.A., Ph.D.,
டாக்டர் G. சுந்தரி, M.A., B.T., M.Phil., Ph.D.,
பேராசிரியர் திரு. T.K. நாராயணன், M.Sc., M.Phil.,







வெளியிடுவோர்
தெய்வீக வாழ்க்கைச் சங்கம்
சிவானந்தா ஆஸ்ரமம்,
சுவாமி சிவானந்தா சாலை,
இராசிபுரம் : சேலம் மாவட்டம்

விலை] 1996 [ரூ. 25.00

தமிழ் வெளியீடு – 97


**The Divine Life Trust Society**
Sivananda Nagar - 249 192
(U.P.) Himalayas, India.

Translated into Tamil from
**"The Prophets"**
taken from **"Lives of Saints"**

Printed out of the magnanimous donation of
Rs. 5,000/- by
Selvi. **P.T. Devaki,** B.Litt., B.Ed.,
Retd. H.M., T.V. School,
Rasipuram.

Typeset by : Print Shop, Madurai -1. PH : 541885.
Printed at : The Orient Litho Press, Sivakasi.

# வெளியீட்டாளரின் குறிப்புரை

சுவாமி சிவானந்தர் எழுதிய "ஞானியர் வரலாறுகள்" என்ற நூல் முதலில் 1986ல் தமிழில் வெளியிடப்பட்டது. இதன் இரண்டாவது பதிப்பு 1996ல் இன்னும் சில ஞானியர்கள் வரலாறு சேர்த்து வெளிவந்துள்ளது. "அறுபத்து மூன்று நாயன்மார் வரலாறு" 1985ஆம் ஆண்டிலும் 1995ஆம் ஆண்டிலும் இருமுறையும் வெளிவந்துள்ளன. "ஆழ்வார்கள் வரலாறு" 1996ல் இந்நூல் முதல் பதிப்பாக வெளி வந்துள்ளது.

"Lives of Saints" என்ற ஆங்கில நூல் 1993ல் பெரிய நூலாக வெளிவந்துள்ளது."இறைவனின் தூதர்கள்" என்ற நூல் ஞானியர்களின் வரலாறுகளில், இடம் பெறாத அருள் ஞானியர்கள் வரலாறுகள் அனைத்தும் சேர்த்து, இந்நூல் "இறைவனின் தூதர்கள்" என்ற தலைப்பில் வெளிவருகின்றது என்பதை மிகவும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

இங்கு இரண்டு கருத்துக்கள் சிறப்பாக குறிப்பிட வேண்டியது அவசியம். முதலில் இது முற்றிலும் இனச் சார்பு அற்றது. எந்த வகுப்பாரின் மீதும் வெறுப்பற்றது.

இரண்டாவதாக ஆன்மீக ஆளுமை சிறந்த தவ சிரேஷ்டர் பேனாவிலிருந்து இந்த வரலாறுகள் வெளிவருதலால் அவை எல்லா ஞானியர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் தெளிவான ஆன்மீகக் காட்சிகளாக நமக்கு வழங்குகின்றன.

இந்த ஞானியரின் ஒளி படிப்பவர்களின் பாதையில் வழிகாட்டி வெளிச்சம் பரப்புவதாகுக. படிப்பவர்களின் மீதும் அனைத்து மனித குலத்தின் மீதும் அவர்களின் நல்லாசி பொழிவனவாகுக.

தெய்வீக வாழ்க்கைச் சங்கம்.

# பொருளடக்கம்

## இறைவனின் தூதர்கள்

பக்கம்


1. ஜொராஸ்தரர் 5
2. பார்ஸ்வநாதர் 15
3. மகாவீரர் 18
4. கன்பூசியஸ் 22


## அருள் ஞானியர்


5. அருளரசர் பிப்பா 43
6. தாது 48
7. பக்த ஹரிதாசர் 50
8. கனகதாசர் 62
9. நீலகண்ட தீட்சதர் 64
10. புரந்தர தாசர் 67
11. பத்ராசல ராமதாசர் 73
12. யோகி வேமனா 81
13. ஜய தேவர் 94
14. வித்யாரண்யர் 112
15. அப்பய்யாசார்யா 120
16. போதானா 121
17. முக்தாபாய் 125
18. ரபியா 127
19. ஆவுடையக்காள் 134
20. புல்லா ஷா 140
21. அஸிஸியின் புனித பிரான்ஸிஸ் 143
22. புனிதர் பிரான்ஸிஸ் சேவியர் 147
23. ஸ்ரீ ராகவேந்திர சுவாமி 153
24. சுவாமி தயானந்த சரஸ்வதி 159
25 ஸ்ரீ நாராயண குரு 160
26. ஸ்ரீ அரவிந்த கோஷ் 168
27. சுவாமி ஸ்வயம்பிரகாச பிரம்மேந்திர சரஸ்வதி 177
28. சுவாமி ராமதீர்த்தர் 181
29. ஸ்ரீ ரமண மகரிஷி 187
30. மகான் குடிடி பாபா 194

# 1. ஜொரோஸ்தரர்

ஜொரோஸ்தரர் வாழ்ந்த காலம் எது என்பதைப் பற்றி நிச்சயித்துக் கூற முடியவில்லை. அவர் வாழ்ந்த காலம் கி.மு. 6000 என்று சிலர் கூறுகின்றனர். கி.மு. ஏழாம் நூற்றாண்டின் மத்தியில் அவர் வாழ்ந்தார் என்ற கருத்துக்கு மற்றவர்கள் ஆதரவு தருகின்றனர்.

பழங்கால இராணியர்களிடையே அவர் பெருமையிற் சிறந்த கடவுளின் தூதுவராக இருந்தார். அகிலத்தின் பரம்பொருளாகிய அஹுராமஸ்தாவின் வழிபாட்டை நிலைநாட்டுவதன் பொருட்டும் தெய்வீகக் குறிக்கோளை நிறைவேற்றுவதன் பொருட்டும் அவர் பிறந்தார். அவெஸ்தா மொழியில் அவர் தாமே எழுதியுள்ள உயர்ந்த படையல்களாகிய "கதங்கள்", அவர் கடவுள் பக்தியாகிய போதை ஏறியவர் என்பதைக் காட்டுகின்றன.

அவருடைய வணக்கத்திற்குரிய தந்தையின் பெயர் போருஷஸ்போ; தாயாரின் பெயர் துக்த்வோ, ஈரானின் மேற்குப் பகுதியாகிய அஜர்பைஜான என்ற மாவட்டத்தில் உள்ள தக்த்இசுலேமான் என்ற இடத்தில் அவர் பிறந்தார். ஈரானின் பழங்கால மன்னராகிய மனுஷ்குஹார் என்பவரின் அரச பரம்பரையின் நேர் சந்ததியில் பிறந்தவர் அவர்.

ஈரானில் அவருடைய நெறியைப் பின்பற்றியவர்கள் அவரைப், புகழ் பெற்ற 'ஜரத் உஸ்ட்ரா' என்ற பெயரால் அழைத்தனர்; மஞ்சள் அல்லது பொன்னிறமுள்ள ஒட்டகங்களை உடையவர் என்பது அதன் பொருள். 'உஸ்ட்ரா' என்னும் சொல், ஒட்டகங்கள் என்று பொருள்படும்.

அவர் ஈரானில் பிறந்த போது இயற்கை களிப்படைந்தது. மரங்களும் ஆறுகளும் பூக்களும் தங்களின் ஆனந்த மகிழ்ச்சியைப் புலப்படுத்தின. பேய்கள் அச்சமடைந்தன;

உலகில் எல்லாக் குழந்தைகளும் பிறந்தவுடனே அழுவார்கள்; ஆனால் அவர் பிறந்தவுடனே, அழவில்லை. அவர் உரக்கச் சிரித்தார். தலைமைத் தேவதூதர்களும் ஏனைய பல தேவதூதர்களும் வருகை தந்து அவரைத் தொழுதனர்.

அவருடைய குடும்பத்தின் பெயர், 'ஸ்பிட்டமா'; இச்சொல்லின் பொருள்,'வெண்ணிறம்'. அவருக்கு இரண்டு அண்ணன்மார்களும் இரண்டு தம்பியரும் இருந்தனர்.

அவருடைய பிறப்பு அற்புத நிகழ்ச்சியாகும். அஹூரா மஸ்தாவின் மகத்துவம் விண்ணிலிருந்து இறங்கி வந்து இத்தூதுவரின் வருங்காலத் தாயாரின் வீட்டுக்குள் நுழைந்தது. அவள் கருவுற்ற போது தலைமைத் தேவதூதர்கள் அவளிடம் வந்து பிறக்காத குழந்தையைத் தொழுது புகழ்ந்து போற்றினர்.

ஜொரோஸ்தரர் மூன்று முறை திருமணம் செய்து கொண்டார்; அவருக்குப் பல குழந்தைகள் இருந்தார்கள். அவருடைய முதல் மனைவிக்கு ஒரு புதல்வனும் மூன்று புதல்விகளும் இருந்தனர். அவருடைய இளைய பெண்ணின் பெயர் பௌருசிஸ்டா; அவள் ஜமாஸ்பா என்பவரை மணந்து கொண்டாள்; இந்த மணமகன், ஜொரோஸ்தரரின் மூன்றாம் மனைவியின் மாமன் ஆவார். ஜொரோஸ்தரரின் இரண்டாம் மனைவிக்கு இரண்டு புதல்வர்கள் இருந்தனர்.

ஜொரோஸ்தரரின் ஆரம்பகால வாழ்வைப் பற்றி நமக்குச் சிறிதளவே தெரிந்துள்ளது. சிறுவனாக இருந்த காலத்திலிருந்தே அவர் மிகப்பெரிய ஞானத்தைப் புலப்படுத்தியுள்ளார். அவர் ஞானிகளுடன் வாக்குவாதம் செய்தார்; மாறுபட்ட கருத்துள்ளவர்களைக் கண்டனம் செய்தார்.

பேய்களும் தீய ஆவிகளும் அவரைக் கொல்ல முயன்றன. துரஸ்நோபோ என்ற துநானிய அரசரும் குழந்தையைக் கொல்ல முயன்றார்; ஆனால், கருணை மிகுந்த கடவுளால் இத்தூதுவரின் உயிர், ஆச்சரியமான முறையில் காப்பாற்றப்பட்டது.

அவர் பதினாறாம் வயதை அடைந்தபோது வைராக்கியத்தை வளர்த்துக் கொண்டார். உலகப் பொருள்கள் தம் எல்லாக் கவர்ச்சிகளையும் அவரிடம் இழந்து தோற்றுவிட்டன. நிலையாத உலக இன்பங்கள் எல்லாவற்றையும் அவர் வெறுத்தார். புலனின்ப ஏக்கங்கள் எல்லாவற்றையும் கடந்து மேலே அவர் உயர்ந்தார். எல்லா உயிரினங்களினிடத்தும் அவர் ஆழ்ந்த அன்பையும் இரக்கத்தையும் காட்டினார்.

இருபதாம் வயதில் அவர் தம் வீட்டைத் துறந்து வெளியே சென்றார்; பின் ஊரூராகத் திரிந்தார். அறம் சார்ந்த தூய வாழ்வை அவர் நடத்தினார். அவர் காடுகளில் அலைந்து திரிந்தார். மலைச் சிகரங்களிலும் குகைகளிலும் அவர் தனியாக வாழ்ந்தார். அவர் தம் நாவை அடக்கினார்; ஏனைய பொறிகளையும் தம் கட்டுப்பாட்டில் வைத்திருந்தார். தம் உணவில் அவர் மிகவும் மிதமாக இருந்தார். அமைதியான தியானத்தில் அவர் தம் காலத்தைக் கழித்தார்.

சபடம் என்ற மலையின் உச்சியில் அவர் சமாதி அனுபவத்தைப் பெற்றார்;அகிலத்தின்பரம்பொருளாகிய அஹுரமஸ்தாவுடன் தொடர்பு பெற்றார். வருங்கால நிகழ்ச்சிகளை முன்கூட்டி அறிவிக்கும் தெய்வீகக் காட்சிகளை அவர் கண்டார். அவர் அஹுராமஸ்தாவுடன் நேரடியாக உரையாடினார்; கடவுள் ஞானத்தைப் பெற்றார். அவர் அஹுராமஸ்தாவிடமிருந்து ஏழு புதிய உண்மைகளை அறிந்தார். முப்பதாம் வயதில் கடவுளின் தூதுவராக அவர் வெளியுலகுக்கு வந்தார். புதிய உண்மைகளாகிய தெய்வீக

ஒளியைப் பெற்றுக் கொண்ட பிறகு அஹுரா மஸ்தாவின் தூதுவராக அவர் புகழ்பெற்றவரானார்.

ஆன்மீகப் பாதையில் அவருக்குத் தலைமைத் தேவதூதர்கள் பலர் உதவி செய்தார்கள். தேவ தூதர்கள், மிகவும் உயர்ந்த வரிசையில் இடம் பெறும் தெய்வீகத் தூதுவர்கள். அவர்கள் அஹுரா மஸ்தாவின் பணியாட்கள். அவர்கள் சிவபெருமானுடைய சிவகணங்களையும், மகா விஷ்ணுவின் பணியாட்களாகிய ஜெய்ன், விஜயன், நந்தன், சுனந்தன் முதலியவர்களையும், போன்றவர்கள், அவர்கள் உலகின் காவல் தெய்வங்கள் அல்லது உலக பாலர்கள். ஜொரோஸ்தரர் இந்த தேவதூதர்களுடன் நேர்டியாக உரையாடி வந்தார்.

நல்லெண்ணத்தின் தலைமைத் தேவதூதரின் பெயர், ஓஹுமனா. வீட்டில் வளர்க்கப்படும் பிராணிகளின் அதிகார தேவதையும் அவரே ஜொரோஸ்தரரின் முன்னே அவர் தோன்றி ஜொரோஸ்தரர் தம் பூத உடலாகிய போர்வையைக் களைய உதவி செய்து அவருடைய உயிரைப் பரம்பொருளாகிய அஹுராமஸ்தாவின் பேரின்ப வீட்டிற்குச் செல்லுமாறு நெறிப்படுத்தினார். அஹுரா மஸ்தா தாமே அவருக்குப் போதனைகளைப் போதித்துத் தெய்வீக ஞானத்தை வழங்கினார். ஜொரோஸ்தரர் அஹுராமஸ் தாவின் கட்டளைகட்குப் பணிந்தார்.

அவர் அஹுரா மஸ்தாவின் விண்ணுலகப் பேரின்ப வீட்டிலிருந்து கீழே இறங்கி வரும் போது ஜொரோஸ்தரத்தத் துவத்தில் சாத்தானும் தீய சக்தியும் ஆகிய அஹீர்மானால் பயங்கரமாகத் தாக்கப்பட்டார். ஜொரோஸ்தரரைக் கொல்ல முயற்சி செய்தான். ஆனால் ஜொரோஸ்தரரின் ஆன்மீகச் சக்திகள் அவரைக் காப்பாற்றின. அஹிர்மானை வெற்றி கொண்ட பிறகு பேய்கள் எல்லாவற்றுக்கும் ஜொரோஸ்தரர் தலைவரானார், அவர் மீண்டும் போதிக்கத் தொடங்கினார்.

ஜொரோஸ்தரர் இரண்டாம் தெய்வீகக் காட்சி அனுபவத்தைப் பெற்றார். பிராணிகளை மிகுந்த கவனத்துடன் கண்காணிக்குமாறும் பாதுகாத்து வருமாறும் அதே தலைமைத் தேவ்தூதர் ஜொரோஸ்தரரைக் கேட்டுக் கொண்டார்.

பின்னர் ஜொரோஸ்தரர் மூன்றாம் தெய்வீகக் காட்சியில், தரும்த்தின் தலைமைத் தேவதூதராகிய ஆஷாவஹிஷ்டருடன் உரையாடினார்; இவர் வேள்வித் தீயின் அதிகார தேவதை. வேள்வித் தீயையும் மற்ற நெருப்புக்களையும் பாதுகாத்து வருமாறு அவர் ஜொரோஸ்தரருக்குக் கட்டளையிட்டார்.

நல்ல அரச பதவியின் தலைமைத் தேவதூதர் கேஹத்ரானவர்யா; இவல்லலாகங்களி அதிகார தேவதை; இவருடன் ஜொரோஸ்தர் உரையாடினார். உலோகங்களைப் பாதுகாத்து வருமாறு இவர் ஜொரோஸ்தர்ரைக் கேட்டுக் கொண்டார். அடக்கத்தின் தல்லைமைத் தேவ்தூதர்; ஸ்பென்டா அர்மைத்; இவர் நிலத்தின் அதிகார தேவதை இவருடனும் ஜொரோஸ்தரர் உரையாடினார். உடல் நலத்தின் தலைமைத் தேவதூதர் ஹௌரா வடட்; இவர் நீர் நிலைகளின் அதிகார தேவதை; இவ்ருடனும் ஜொரோஸ்தரர் உரையாடினார். முடிவில் அவர் அமரத்துவத்தின் தலைமைத் தேவதூதராகிய அமரேடட் என்பவருடன் உரையாடினார்; இவர் தாவரங்களின் அதிகார தேவதை.

இந்த தெய்வீகக் காட்சிகளின் வழியாக, சொர்க்கலோகத்தில் உள்ள அதிகார தேவதைகளைப் பற்றிய பரிபூரண அறிவை ஜொரோஸ்தரர் பெற்றார். பார்சி மக்களின் கீதை சாத்திரமாகவும் விவிலிய வேதமாகவும் உள்ள சமயநூல் ஜெண்ட் அவெஸ்தா; பரம்பொருளாகிய அஹுரா மஸ்தாவிடம் ஜொரோஸ்தரர் பெற்ற ஞானம் இந்நூலில் அடங்கியுள்ளது.

ஜொரோஸ்தரர் பெற்ற தெய்வீக அனுபவங்கள், சாந்தோக்கிய உபநிடதத்தின் சத்தியகாம ஜாபாலன் பெற்ற அனுபவங்களைப் போன்று இருக்கின்றன. வாயு பகவான், அக்கினிதேவன், சூரியபகவான், நீர்நிலைகளின் அதிகார தேவதையாகிய வருணபகவான் ஆகியோர் சத்திய காமனுக்குத் தெய்வீக ஞானத்தைப் போதித்தனர். வஹிஷ்டா என்ற தலைமைத் தேவதூதர் இந்துக்களின் அக்கினிதேவன், ஹௌராவடட், இந்துக்களில் வருணபகவான்.

பேய்களை வழிபடுவோருடைய தலைவர்களாகிய கவிஸ் என்பவர்களையும், கார்பன்ஸ் என்பவர்களையும் ஜொரோஸ்தரர் வெறுத்தார். இவர்கள் ஈமச் சடங்குகளையும், சம்பிரதாயச் சடங்குகளையும் செய்து வைக்கும் குருமார்கள். இவர்கள் ஹோமா என்ற போதை பானத்துக்கு அடிமையானவர்கள்; சமயச் சடங்குகளில் இதைப் பருகி வந்தனர். பேய் வழிபாட்டினரையும், தீய நடத்தையுள்ள ஆண்களையும் பெண்களையும் அவர்களின் தலைமைக் குருமார்களையும் ஆகிய அனைவரையும் திருத்துவதற்கு ஜொரோஸ்தரர் முயற்சி செய்தார். இந்த குருமார்கள் சடங்குகளை நடத்தும் புரோகிதர்கள். இயற்கையாகவே, வைதிக குருமார்கள் பரந்த மனப்பான்மைக்குரிய சீர்திருத்தங்களுக்கு எதிரிகளாக இருக்கின்றனர். ஜொரோஸ்தரர் தம் முயற்சியில் தோல்வியை அடைந்தார்.

ஜொரோஸ்தரர் ஊர் ஊராகப் பயணம் செய்தார். அவர் இந்தியாவுக்கும் சைனாவுக்கும் சென்றார்; ஆனால் தொடக்கத்தில் யாரும் அவருடைய செய்தியை ஏற்கவில்லை. முதலில் அவர் தம் மைத்துனராகிய மைத்யோயி - மைன்ஹா என்பவரை மதமாற்றம் செய்தார். இச்சீடர் தம் வாழ்நாள் முடியும் வரையில் ஜொரோஸ்தரரின் நம்பிக்கைக்குரியவராக இருந்தார்.

அரண்மனைப் புரோகிதர்களாகிய கவிசர்களும் கர்ப்பனர்களும் கல்வி கற்றவர்கள்;எனினும் ஈரான் அரசராகிய விஷ்டஸ்ப் என்பவரின் செவியில் கோள் மூட்டினர்;அவர்கள் ஜொரோஸ்தரருக்கு எதிராகச் சதி செய்தனர்; அவர் ஒரு சூனியக்காரர் என்று அரசர் முன்னிலையில் குற்றம் சாட்டினர். அவரைச் சிறையிலடைத்து வைத்துப் பட்டினி கிடந்து சாகச் செய்யவேண்டும் என்று அவர்கள் அரசரைத் தூண்டினர். ஜொரோஸ்தரர் சிறிது காலம் சிறையில் இருந்தார்; கடவுளால் காப்பாற்றப்பட்டார்.

அரசரின் பிரியத்துக்குரிய கரிய குதிரை நோய் வாய்பட்டது. அதன் நான்கு கால்களும் அதன் வயிற்றுக்குள் சென்றுவிட்டன. குதிரையைத் தம்மால் குணப்படுத்தமுடியும் என்று ஜொரோஸ்தரர் அரசருக்குச் சொல்லி அனுப்பினார். அவர் நான்கு நிபந்தனைகளை விதித்தார்; அவற்றை அரசர் உடனே ஒப்புக் கொண்டார். அரசர் புதிய மதத்தைத் தழுவவேண்டும். அரசகுமாரர் இஸ்பென்டியார் புதிய மதத்தை ஆதரிப்பதற்கு அரசர் ஒப்புக் கொள்ளவேண்டும். அரசி ஹுடௌசா மதம் மாற அனுமதிக்கப்பட வேண்டும். ஜொரோஸ்தரருக்கு எதிராகச் சதிசெய்தவர்கள் அனைவருடைய பெயர்களையும் அரசர் வெளியிட்டு அவர்களைத் தண்டிக்க வேண்டும். குதிரையின் ஒவ்வொரு காலும் வெளிவரும்போது நான்கு நிபந்தனைகளில் ஒவ்வொன்றும் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

பதிலுக்கு, அரசர் தம்முடைய நான்கு நிபந்தனைகளை ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று ஜொரோஸ்தரரை வேண்டினார். ஒன்று, அரசர் தம்முடைய முடிவான விதியையும், சொர்க்கத்தில் தாம் பெறும் இடத்தையும் அறிய விரும்பினார். இரண்டு, தம் உடம்பு எதனாலும் காயப்படுத்தப்படமுடியாததாக ஆகவேண்டும் என்று அரசர் விரும்பினார். மூன்று, பிரபஞ்ச ஞானத்தைப் பெற

வேண்டும் என்று அவர் விரும்பினார். கடைசியாக, உயிர்த்தெழும் வரையில், உடம்பினின்று தம் உயிர் பிரியாமல் இருக்க வேண்டும் என்று அரசர் விரும்பினார். அரசர், அரசி ஆகியோர் முன்னிலையில் தலைமைத் தேவதூதர்கள் மூவர் தோன்றித் தம் ஒளியால் அவர்களின் கண்கள் கூசச் செய்தனர். அரசரும் அரசியும் அவர்களைக் கண்டு நடுங்கினர். ஒளியிலிருந்து அவர்கள் குரலைக் கேட்டனர்; ஜொரோஸ்தரரின் மதத்தின் பெருமையை அவர்களுக்குக் காட்டுமாறு கடவுள் கட்டளையிட்டதன் பேரில் தாங்கள் வந்ததாக அது கூறியது.

அரசருக்கு நம்பிக்கை ஏற்பட்டது. ஜொரோஸ்தரரின் தெய்வீகச் சக்திகளின் மீதும் அவருக்கு நம்பிக்கை ஏற்பட்டது. ஜொரோஸ்தரரின் திருவடிகளில் அவர் வீழ்ந்து பணிந்து 'ஈரான் பெற்ற கடவுளின் தூதுவர் நீங்கள்" என்று சொல்லித் தொழுதார்;புதிய மதத்தைத் தழுவினார்' சொர்க்கலோகக் காட்சி ஒன்றும் அவருக்கு வாய்த்தது. தலைமைத் தேவதூதராகிய ஆஷா வஹிஷ்டா அரசர் பருகுவதற்கு அமிழ்தம் தந்தார். அரசியும், ஆட்சி அலுவலர்களும், கூடவே அரசரின் தம்பியும், ஜொரோஸ் தரரின் மாமனார் பிரஷவோஷ்ட்ராவும், ஜொரோஸ்த மதத்தின் பக்திசிரத்தையுள்ள சீடர்களானார்கள். அரச குடும்பத்தாரின் உதவியால், புதிய மதம் நாடெங்கும் பரவியது. மக்கட் கூட்டமும் புதிய மதத்தைத் தழுவியது. ஜொரோஸ்தர மதம் ஈரான் நாட்டின் மதமாக ஆகியது.

புதிய மதத்தின் வெற்றி துரானுக்கும் ஈரானுக்கும் இடையே கடுமையான மதப் போர்கள் இருமுறை நிகழக் காரணமாயிற்று. அரசரும், ஜரீர் என்ற அவருடைய் தம்பியும் பகைவர்கள் தோல்வியுறச் செய்தனர். ஜரீரின் பங்கு அற்புதமாக இருந்தது.போர்க்களத்தில் பகைவர்கள் அஞ்சத்தக்க வீரராக இருந்தார். அவர், அவருடைய வீரச்

செயல்கள் வர்ணனைக்கு அப்பாற்பட்டவை. ஆனால் அவருக்குப் பின்னாலிருந்து வித்ராஷ் என்ற பகைவன் வஞ்சகமாக வீசிய நஞ்சுதோய்ந்த ஈட்டியால் அவர் கொல்லப்பட்டார். அவமானம் மிகுந்த இந்தப் பயங்கரமான செயலைச் செய்ததற்காகத் துரானிய அரசர் ஆர்யஸ்ப் தம் மகளை வித்ராஷுக்கு மணம் செய்து தருவதாக வாக்குறுதி அளித்தார்.

ஜரீரின் இளையமகன் பாஸ்ட்வார் வலிமை வாய்ந்த சிறந்த வீரர்; மகாரதர் என்று அவரை அழைக்கலாம்; பீஷ்மருக்கு நிகரான ஆற்றல் படைத்தவர்; அவர் வித்ராஷைக் கொன்றார்; ஆர்யஸ்ப்பை வெற்றி கொண்டார்.

தோல்வியடைந்து பதினெட்டு ஆண்டுகளுக்குப் பிறகு ஆர்யஸ்ட் மீண்டும் ஈரான் மீது படையெடுத்தார். அவர் கோயில்களை இடித்தார். மதகுருமார்களைத் கொன்றார். ஜெண்ட் அவெஸ்தாவைத் தீயிட்டுக் கொளுத்தினார். இரண்டாம் போரில் அரசர் விஷ்டஸ்ப் பின் புதல்வர் இஸ்பெண்டியார் வீரத் தலைவராகத் திகழ்ந்தார்; அவர் ஆர்யஸ்ட்பை வெற்றி கொண்டு ஈரான் நாட்டுக்கு வெளியே விரட்டிச் சென்று கொன்றுவிட்டார்.

நுஷ்-ஆடர் என்ற இடத்தில் உள்ள கோயிலில் பலி பீடத்தில் முன்னால் அமர்ந்து ஜொரோஸ்தரர் கையில் ஜபமாலையுடன் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார். பிரட்ராக் - ரெஷ் என்ற பெயருள்ள துரானியன் அங்கே வந்து தன் வாளால் அவரை வெட்டிக் கொன்று விட்டான்.

ஜொரோஸ்தரர் தம் ஜபமாலையை அவன் மேல் வீசினார். ஒரு நெருப்பு ஜபமாலையிலிருந்து தோன்றி அவனை எரித்துவிட்டது. தம் எழுபத்தி ஏழாம் வயதில் ஜொரோஸ்தரர் இறந்தார். ஈரான் பெற்ற கடவுளின்

தூதுவரும் அஹூரா மஸ்தாவை வழிபடும் ஜொரோஸ்தர மதத்தை நிறுவியவரும் ஆகிய பெருமை மிகு அருளாளரின் வாழ்க்கை இவ்வாறு முடிவுற்றது.

அவர் பல அற்புதங்களைச் செய்தார். தேவ தூதர்களின் கட்டளைகளை அவர் நிறைவேற்றினார். ஆனிரைகளையும் அக்கினிச்சுடர்களையும் அவர் காத்து வந்தார். நோயுற்றவர்களை அவர் குணம் பெறச் செய்தார். ஒரு குருடருக்குக் கண்பார்வையைத் திரும்பவும் பெறச் செய்தார். அறிஞர் என்றும் மருத்துவர் என்றும் அவருக்குப் பெரும்புகழ் உண்டாயிற்று. அக்கினி வழிபாட்டுக் கோயில்கள் பலவற்றை அவர் தோற்றுவித்தார். நாடெங்கும் புதிய மதத்தை அவர் பரப்பினார். பேய் வழிபாட்டையும் சூனியம் செய்யும் வழிபாட்டையும், மாயமந்திர வழிபாட்டையும் அவர் ஒடுக்கினார். அவர் தொற்று நோய்களை விரட்டினார்; மக்கட் கூட்டத்தைப் பாதிக்கும் கொடிய நோய்களையும் கோரவிபத்துக்களையும் அகற்றினார். அவர் நோய்களைக் குணப்படுத்தினார்; கேடு பயக்கும் நச்சு உயிரினங்கள் நலிவுறச் செய்தார்; உலகுக்கு வளம் பெருக்கும் பெருமழை பெரும் அளவில் பெய்யச் செய்தார்.

அவர் பக்தியுள்ளவர்; பண்புள்ளவர்; பரிவு உள்ளவர். அவர் தந்த செய்தி உயர்ந்த நல்லொழுக்க வாழ்வுக்குரிய பண்புள்ள செய்தி; நிலைத்த பேரின்பத்தையும் அமரத்துவத்தையும் அடைவதற்கான வழியை அது வகுத்துத் தருகின்றது; அறக் கடவுளாகிய அஹூரா மஸ்தாவின் கொள்கையை அது போதிக்கின்றது. "அறத்தை நேசியுங்கள்; துன்புற்றோரிடம் இரக்கம் பாராட்டுங்கள்", - இவையே ஜொரோஸ்தரரின் முக்கியமான நீதி போதனைகளின் சாரம்.

# 2. பார்ஸ்வ நாதர்

பார்ஸ்வர், இந்திரனின் அவதாரம் என்று போற்றப்படுகிறார். அவர் காசி மன்னர் விஸ்வசேனரின் புதல்வர்; மன்னர் இக்ஷ்வாகு வம்சத்தில் உதித்தவர்; அரசி பாமாதேவி, மன்னர் மகிபாலரின் மகள். அவர் இருபத்தி மூன்றாம் தீர்த்தங்கரர். கி.மு. 872ல் பௌஷமாதம் கிருஷ்ணபக்ஷம் பதினோராம் நாள் அவர் பிறந்தார். தம் எட்டாம் வயதிலேயே பார்ஸ்வநாதர், இல்லறத்தானுக்கு உரிய பன்னிரண்டு விரதங்களைப் பின்பற்றியொழுகத் தொடங்கினார்.

இளவரசர் பார்ஸ்வர் தம் பதினாறாம் வயதை அடைந்தார். அவர் அரச பீடத்தில் அமர்ந்திருந்தார். அவருடைய தந்தை விஸ்வசேனர்", மகனே ! புகழ் பெற்ற நம் அரச வம்சம் தழைப்பதன் பொருட்டு நீ திருமணம் செய்து கொள்ள வேண்டும். இப்படித்தான் நபிராஜாவின் விருப்பத்தின்படி ரிஷபதேவர் திருமணம் செய்து கொண்டார்", என்று தெரிவித்தார்.

தம் தந்தையின் சொற்களைக் கேட்டதும் பார்ஸ்வநாதர் மிகவும் அச்சம் அடைந்தார். அவர், "ரிஷபதேவரைப் போல எனக்கு ஆயுட்காலம் அந்த அளவு நீடித்திருக்காது. என் ஆயுட்கால ஆண்டுகள் சில இருபதுகளாகத் தான் இருக்கும். ஏற்கனவே சிறு பருவ விளையாட்டுக்களில் பதினாறு ஆண்டுகளை வீணாகக் கழித்துவிட்டேன். என் முப்பத்தாம் வயதில் நான் துறவை மேற்கொள்ள வேண்டும். இந்தக் குறுகிய காலத்திற்காக நான் மணவாழ்க்கையை மேற்கொள்ள வேண்டுமா? அதுவும் நிறைவு பெறாத, நிலையாத, பொய்யான இன்பங்களை எதிர்பார்த்தா நான் மணந்து கொள்ள வேண்டும்?" என்று விடை கூறினார்.

பார்ஸ்வநாதரின் உள்ளம் துறவு ஆர்வத்தினால் நிரம்பியிருந்தது. அவர் தம்முள்," மிக நீண்டகாலமாக நான் இந்திர பதவிக்குரிய இன்பங்களை அனுபவித்தேன்; அப்படியிருந்தும் இன்பங்களைப் பற்றிய வேட்கை குறையவில்லை. எரியும் நெருப்பில் விறகுகளைச் சேர்த்தால் நெருப்பின் தீவிரம் மேலும் வளர்கிறது;அதைப் போல இன்பங்களை அனுபவிக்க அனுபவிக்க இன்பவேட்கை தான் மேலும் மேலும் வளர்ச்சி பெறுகிறது. அனுபவிக்கும் போது இன்பங்கள் இனிமையாகத் தான் இருக்கின்றன; ஆனால் அவற்றின் விளைவுகள் நிச்சயம் கேடு பயப்பனவாக இருக்கின்றன.

அநாதி காலந் தொட்டு உயிர், பிறப்பு, மூப்பு முதலிய துன்பங்களை அனுபவித்துக் கொண்டிருந்தது; உலகப் பொருள்களின் மீதுள்ள பற்றுதலே இதற்குக் காரணம். பொறிகளின் ஏக்கங்களைத் திருப்தி செய்வதற்காக மனிதன் துன்பநிலங்களில் அலைந்து திரிகிறான். புலன்களின் திருப்திக்காக அவன் நல்லொழுக்க விதிமுறைகளைப் பற்றிக் கவலைப்படுவதில்லை; எனவே மிக இழிவான குற்றங்களைப் புரிகின்றான். பொறிகளின் இன்ப அனுபவங்களுக்காக அவன் உயிர் வாழும் பிராணிகளைக் கொல்லுகின்றான்; திருட்டு, பேராசை, விபச்சாரம், பழிபாவங்கள், சட்ட விரோதமான குற்றங்கள் இவை எல்லாவற்றுக்கும் அடிப்படையாக இருப்பது காமமே.

" பாவச் செயல்களின் பயனாக ஆன்மா, இழிவான விலங்குகள் முதலிய உயிரினங்களின் உலகில் சென்று பிறந்து பிறந்து நரகத்தின் சித்திரவதைகளால் துன்புற வேண்டியுள்ளது. இந்த இன்ப வேட்கை சிறிதும் இரக்கமின்றி வெறுத்து ஒதுக்கப்பட வேண்டும். ஏற்கனவே என் வாழ்நாட்களை வீணாக்கிவிட்டேன்; பயனற்ற இன்பங்களின் பின்னால் சென்று இனி மேல் காலத்தைக்

கழிக்கமாட்டேன். அலட்சியமாக இராமல் நன்னடத்தையைப் பழகுவேன்", என்று சிந்தித்தார்.

இளவரசர் பார்ஸ்வர் பன்னிரண்டு அனுப்ரேட்சைகள் அல்லது தியானங்கள் செய்தார். உலக வாழ்வைத் துறக்க அவர் முடிவு செய்தார். பெற்றோரிடம் விடை பெற்ற பின் தம் வீட்டைவிட்டு வெளியே சென்றார். அவர் காட்டில் தங்கினார். அவர் முற்றிலும் ஆடையற்றவரானார். அவர் வடக்கு நோக்கித் தவமிருந்து, முக்தி பெற்ற பெரியோர்களாகிய சித்தர்களை வணங்கினார். அவர் தம் தலைமுடியிலிருந்து ஐந்து குடுமிகளைப் பறித்து எறிந்தார்; துறவி ஆனார்.

பார்ஸ்வர் உண்ணா நோன்பு இருந்தார். அவர் துறவிகளுக்குரிய இருபத்தி நான்கு முதன்மை விதிகளையும் தொண்ணூற்று நான்கு கிளை விதிகளையும் ஆழ்ந்த கவனத்துடன் பின்பற்றினார். மலையில் அவர் காணாமல் போய்விட்டார். அவர் தூய, எல்லாம் அறியும் பேரறிவைப் பெற்றார். சம்மேதா மலையில் அவர் முடிவான முக்தியை அடைந்தார்; அந்த மலை இப்போது பார்ஸ்வநாத மலை என்று புகழ் பெற்றுள்ளது.

பார்ஸ்வநாதர் காசி, கோசலம், பாஞ்சாலம், மகாராஷ்டிரம், மகதம், அவந்தி, மாளவம், அங்கம், வங்கம் ஆகிய இடங்களில் மதபோதனை செய்தார். பலர் ஜைன மதத்தில் சேர்ந்தனர். பார்ஸ்வநாதர் எழுபது ஆண்டுகள் மதபோதனை செய்தார்.

மகாவீரர், பார்ஸ்வநாதர் ஏற்கனவே போதித்தவற்றைச் செப்பம் செய்து விரிவுபடுத்தினார். முற்றிலும் புதிதான எதையும் அவர் போதிக்க வில்லை.

பார்ஸ்வநாதர் நூறாண்டுகள் வாழ்ந்தார். தமது முப்பதாம் வயதில் அவர் தம் வீட்டைத் துறந்தார். அவர் கி.மு. 842ல்

வீட்டை விட்டு வெளியேறினார்; கி.மு. 772ல் மகாநிர்வாணத்தை அடைந்தார்.

இருபத்தி மூன்றாம் தீர்த்தங்கராகிய பார்ஸ்வநாதரின் பெருமை ஓங்குக!

## 3. மகாவீரர்

மகாவீரர் கி.மு. 599ல் பிறந்தார். அவர் 72 ஆண்டுகள் வாழ்ந்தார். அவர் கி.மு. 569ல் வீட்டைத் துறந்தார். அவர் கி.மு. 557ல் மெய்ஞ்ஞானம் பெற்றார்; கி.மு. 527ல் நிர்வாண முக்தியை அடைந்தார், அவரே கடைசி தீர்த்தங்கரர்.

அவர் முற்றிலும் வாய்மை நிறைந்த, நேர்மை நிறைந்த, பிரம்மச்சரிய வாழ்வை வாழ்ந்தார். தமக்கெனச் சொத்து ஏதையும் வைத்துக் கொள்ளாமல் அவர் வாழ்ந்தார். குண்டலபுர அரசராகிய சிர்தத்தாவுக்கும், பிரியகாரணி என்று புகழ்பெற்ற அரசி திரிசலாவுக்கும் மகாவீரர் பிறந்தார். 'மகா' என்னும் சொல் பெரிய என்றும்'வீரர்'என்னும் சொல் வீரம் நிறைந்தவர் என்றும் பொருள்படும். 'தீர்த்த' என்ற சொல்லின் வாசகப் பொருள், ஆற்றைக் கடக்கும் துறை என்பதாகும். உருவகப் பொருளில் அது, இவ்வுலகில் தொடர்ந்து வரும் பிறவிக் கடலைக் கடப்பதற்குத் துணை செய்யும் ஆன்மீக வழி காட்டி அல்லது தத்துவத்தைக் குறிக்கின்றது."கரர்"என்னும் சொல் செய்பவர் என்று பொருள்படும். 'தீர்த்தங்கரர்' என்ற முழுமையான சொல் ஜைன மதப்புனித குருவைக் குறிக்கும்.

மகாவீரர் ஜைன மதத்தை நிறுவியர் அல்ல. அவர் ஜைன மதக் கொள்கைகளைத் திருத்தி அமைத்தார். மதத்தை நிறுவியர் என்பதைக் காட்டிலும் சீர்திருத்தம் செய்தவர் என்பதே பொருந்தும். ஜைனமதத் தத்துவத்தின்படி "காலம்" பல பருவங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது; ஒவ்வொரு

பருவத்தின் பாதியிலும் இருபத்தி நான்கு தீர்த்தங்கரர்கள் நீண்ட இடைவெளிகளில் புதுப்பித்த கொள்கைகளைப் போதிப்பார்கள். மகாவீரர் இருபத்தி நான்காம் தீர்த்தங்கரர்; மற்றவர்களைப் போலவே அவர் மெய்ஞ்ஞானம் பெற்றவரென்று உரிமை கொண்டாடப்படுகின்றார்.

மகாவீரருக்கு வர்த்தமானர், சன்மதி என்ற பெயர்களும் உண்டு. வர்த்தமானர் என்றால் எப்போதும் முன்னேறிக் கொண்டிருப்பவர் என்று பொருள். தமது எட்டாம் வயதில் அவர் அகிம்சை முதலிய பன்னிரண்டு விரதங்களைப் பின்பற்றினார். அவர் தம் பெற்றோருக்கு அடங்கி நடந்து அவர்களுக்கு மிகுந்த சிரத்தையோடும், பக்தியோடும் பணி விடைகள் செய்தார். அவர் திறமை மிகுந்த ஆட்சி நிபுணர். அவர் திருமணம் செய்து கொள்ளவில்லை.

மகாவீரர் ஆத்மதியானத்தில் மூழ்கி இருந்தார். உலக இன்பங்கள் நிலையாதவை என்றும், கர்மத்தின் தளைகளை அவை வலுப்படுத்துகின்றன என்றும் அவர் அறிந்திருந்தார். நிலையான பேரின்பத்தை அடைவதற்குத் துறவு தான் வழிவகுத்துத் தரும் என்று அவர் அறிந்திருந்தார்.

இவ்வளவு இளம் வயதில் மகாவீரரிடம் இருந்த நற்குண இயல்பைக் கண்டு மக்கள் மிகுந்த ஆச்சரியம் அடைந்தனர். தியானத்தில் அவருக்கு மிகுந்த ஈடுபாடு இருந்தது. இசை, இலக்கியம் ஆகிய கலைகளை அவர் வளர்த்தார், இளவரசர் வர்த்தமானரின் முப்பதாண்டுகள் இவ்வாறு கழிந்தன.

தாம் கணக்கற்ற பிறவிகளைக் கடந்து சென்று கொண்டிருப்பதாக வர்த்தமானர் தம் ஞானக் கண்ணால் கண்டார். அவர், "எவ்வளவு பிறவிகள் பயனின்றிக் கழிந்துவிட்டன! கர்மப் பொருளிலிருந்து ஆன்மா தவிர்க்கமுடியாதபடி வேறுபட்டுள்ளது என்பதைத் தெளிவாகக் காண்கிறேன். இன்னும் என் வாழ்வில் முப்பது

ஆண்டுகளை வீணாக்கிவிட்டேன். எந்த ஒரு தவத்தையும் நான் பயிலவில்லை. தூய பேரறிவை அடைவதன் பொருட்டு நான் உலகத்தை துறக்கவில்லை. எல்லாக் கேடுகளுக்கும் வேராக உள்ள மோகத்தை நான் இன்னும் அழிக்கவில்லை"; என்று சிந்தித்தார்.

இளவரசர் வர்த்தமானர் இவற்றையெல்லாம் குறித்து அளவற்ற மனவருத்தம் அடைந்தார். உலகப் பொருள்கள் எல்லாவற்றையும் துறக்க அவர் முடிவு செய்தார். பெற்றோர்களிடமும் நண்பர்களிடமும் உறவினர்களிடமும் தாம் கொண்டிருந்த பாசத்தை அவர் துறந்துவிட்டார். ஜைனமத நூல்களின்படி பன்னிரண்டு அனுப்ரேக்ஷைகள் அல்லது ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய கருத்துக்களைப் பற்றி அவர் சிந்தனை செய்தார் :

1. உலகியல் பொருள்கள் எல்லாம் நிலையற்றவை.
2. ஆத்மா தான் ஒரே புகலிடம்.
3. உலகம் ஆதியில்லாதது; கோணலானது.
4. ஆத்மாவுக்குத் துணை எதுவுமில்லை; ஆத்மாவுக்கு ஆத்மாவே துணை.
5. சரீரம், மனம் முதலியவை ஆத்மாவிலிருந்து தவிர்க்கமுடியாதபடி வேறாக இருக்கின்றன.
6. ஆத்மா, தூய்மையை அடிப்படையாகக் கொண்டது; சரீரம், மனம் ஆகியவைகள் தூய்மையை அடிப்படையாகக் கொண்டது அல்ல.
7. ஆன்மாவின் பந்தத்துக் காரணம், வினை அதனுள்ளே பாய்வது தான்.
8. ஒவ்வோருயிரும் இந்த வினையின் உள் நுழைவைத் தடுத்தாக வேண்டும்.

9. வினையை முற்றிலும் நீக்கிய பிறகு முக்தி வாய்க்கிறது.

10. நிறைவு பெற்ற ஆகாயங்களின் மிக உயர்ந்த உச்சியில், முக்தி பெற்ற ஆத்மாக்கள் தங்குகின்றன.

11. இவ்வுலகில் மனிதப் பிறப்பும், ஆத்மாவின் இயல்பைப் பற்றித் தியானம் செய்வதும் மிகப் பெரிய வரப்பிரசாதங்கள்.

12. நிறை ஞானம் பெற்றவரால் விளக்கிக் கூறப்பட்டுள்ள மும்மணிகளை உடையவராக இருப்பதே நல்லொழுக்கம் ஆகும்.

மகாவீரர் இந்தப் பன்னிரண்டு கருத்துக்களைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்த பிறகு இறுதியில் வீட்டைத் துறக்க வேண்டும் என்று முடிவு செய்தார்.

மகாவீரரின் அன்னை, "என் அன்புள்ள மகனே! விரதங்களின் கடுமையை உன்னால் தாங்கிக்கொள்ள முடியாது. அதற்கு இன்னும் காலம் இருக்கிறது. நாட்டை ஆட்சி செய்வதில் நீ உன் தந்தைக்கு உதவி செய்ய வேண்டும். இன்னும் சில காலம் கழிந்த பிறகு நீ துறவியாக ஆகலாம்" என்று வேண்டினார்.

மகாவீரர், "வணக்கத்திற்குரிய தாயே! உலகப் பொருள்கள் எல்லாம் நீர்க் குமிழிகளைப் போல மறையக் கூடியவை. நோய், துன்பம், வேதனை, மரணம் ஆகியவற்றின் உறைவிடமாகிய உலகத்தில் மகிழ்ச்சியை எப்படிப் பெறமுடியும்? நான் இந்த உலகத்தை விட்டுச் செல்ல வேண்டும்" என்று விடை கூறினார்.

மகாவீரர் தம் செல்வங்களையெல்லாம் ஏழை மக்களுக்குத் தம் கைகளாலேயே வாரி வழங்கினார். அவர் காட்டுக்குச் சென்றார். அவர் தாம் அணிந்திருந்த உடையைக் கூடக் களைந்தெறிந்து முற்றிலும் நிர்வாண நிலையை அடைந்தார்.

அவர் வடக்கு நோக்கி, "சித்தர்களுக்கு வணக்கம்!" என்று கூறினார். தம் தலைமுடியிலிருந்து ஐந்து குடுமிகளைத் தம் கைகளால் பறித்தெறிந்து துறவி ஆனார்.

மகாவீரர் கடுமையான விரதங்களைப் பழகினார், பல நாட்கள் அவர் உண்ணா நோன்பு இருந்தார். ஆத்மாவின் தூய நிலையைப் பற்றித் தியானம் செய்தார்.

சொர்க்கலோகப் பெண்களால் மகாவீரருக்குச் சோதனை ஏற்பட்டது. அழகான மகளிர் கூட்டம் அவரைச் சுற்றி வளைத்துக் கொண்டது. ஆனால் மகாவீரர் அசைவற்றுச் சலனமற்று இருந்தார். நிறைஞானத்தை அவர் அடைந்தார். நிறைஞானத்தைப் பெற்ற பிறகு முப்பது ஆண்டுகள் அவர் அமைதி பெறும் தம் கொள்கையைப் போதித்தார். மகதம் மிதிலை முதலிய இடங்களுக்கு அவர் சென்றார். அரசர்கள் பலரும் அவருடைய சீடர்கள் ஆயினர்.

## 4. கன்பூசியஸ்

கன்பூசியஸ் கி.மு. 551ல் நிலப்பிரபுத்துவ ஆட்சிமுறை நிலவி லு என்ற தனியரசு நாட்டில் பிறந்தார். இந்த நாடு சைனாவின் வடகிழக்குக் கடற்கரை நிலப்பரப்பில் இன்றைய ஷாங்டங் மாநிலத்தின் ஒரு பகுதியாக உள்ளது. சீன மொழியில் கன்பூசியஸ்ஸின் பெயர், குங்-பூ-ட்சே என்பதாகும்; இதன் பொருள், "ஆட்சி நிபுணரும் தத்துவஞானியும் ஆகிய குங்" என்பதாகும். சைனாவுக்கு முதல் முறை வந்த ஐரோப்பிய அறிஞர்கள் இந்தப் பெயரை உச்சரிப்பதற்குக் கடினமாக இருப்பதைக் கண்டனர். எனவே அவர்கள் அதை இலத்தீன் மொழிக்கு மாற்றி அவரைக்'கன்பூசியஸ்' என்று அழைத்தனர்.

சைனாவில் மூன்று மதங்கள் உள்ளன; அவையாவன : கன்பூசியமதம், தாவோமதம், புத்தமதம். தாவோ மதத்தை நிறுவிய லாவோ - ட்சே என்பவரும் கன்பூசியஸ்ஸும் சம

காலத்தவர். அவர்கள் முனிவர்கள்; தத்துவஞானிகள். அவர்கள் இரட்சிக்க வந்தவர்களாகக் கருதப்படவில்லை. கன்பூசியஸ்ஸைக் காட்டிலும் லாவோ-ட்சே ஐம்பத்தி மூன்று ஆண்டுகள் மூத்தவர். அவர்கள் ஒருவரையொருவர் சந்தித்தனர். அப்போது லாவோ - ட்சேயின் வயது 83; இது கன்பூசியஸ்ஸின் வயதைப் போல இரண்டு மடங்கு அதிகமாகும். வயதுகளில் மிகுந்த வித்தியாசம் இருந்ததைப் போலவே அந்த இருவருடைய கருத்துக்களுக்கும், நம்பிக்கைகளுக்கும் இடையே மிகுந்த வேறுபாடு இருந்தது. அவர்களுடைய உரையாடலின் சாராம்சம்; சீனவரலாற்றா சிரியர்களால் எழுதப்பட்டு நமக்குக் கிடைத்துள்ளது. சாக்ரடீசும் புத்தரும் கூட கன்பூசியஸ்ஸின் காலத்தில் வாழ்ந்தவர்கள்.

வழக்கமான பொருளில் கன்பூசிய மதம் ஒரு மதம் அல்ல. அதில் புரோகித முறையோ துறவு நெறியோ இல்லை. கன்பூசியஸ்ஸின் காலத்திற்கு நெடுங்காலம் முன்பே சைனாவில் அது நிலவி வந்தது. எழுதப்பட்டுள்ள அவருடைய அருள்மொழிகள் ஒன்றில் அவர் தம்மை உருவாக்கியவரோ, தொடங்கியவரோ அல்ல என்றும் 'பரப்புகின்றவன்' என்றும், தம்மைப் பற்றிக் கூறுகின்றார். உலகத்திற்கு ஒரு புதிய மதத்தையோ அல்லது ஒரு நீதி நெறியையோ அவர் தரவில்லை. பழைய நெறியின் புதிதாகத் திருத்தப்பட்ட பதிப்பையே அவர் வழங்கினார். மனித இனத்திற்கு உரிய நீதி நெறி அல்லது நல்லொழுக்க நெறியின் அடிப்படைக் கொள்கைகளை ஆற்றலுடன் மீண்டும் கூறும் கருத்துக்களையே அவர் உலகத்திற்குத் தந்தார். அவர் அமைத்த நல்லொழுக்கநெறி மிகவும் போற்றத்தக்கது. மகத்தான நீதிநெறி உண்மைகள் அதில் அடங்கியுள்ளன.

சிலர், "கன்பூசிய மதம், உண்மையில் ஒரு மதம் அல்ல; ஏனெனில் அவர் ஒரு தத்துவஞானி; நீதிமான்; ஆட்சி நிபுணர்; கல்வி அறிஞர்; ஆனால் மதவாதி அல்ல" என்று கூறுகின்றனர். கன்பூசியஸ்ஸின் சிந்தனைகளும் போதனைகளும் நீதித் தத்துவங்கள், அரசியல் கருத்துக்கள், கல்விக் கொள்கைகள் என்றும், மததத்துவம் அன்று என்றும் அவர்கள் கூறுகின்றனர்.

## கன்பூசியஸ்ஸின் வாழ்க்கை வரலாறு

கன்பூசியஸ் குங் வம்சத்தில் பிறந்தார். அவருடைய தந்தையின் பெயர் ஷு- லியாங். அவர் மரியாதைக்குரிய பதவியை வகித்த ஓர் அதிகாரியாகத் திகழ்ந்தார். அவர் அபூர்வமான உடற்கட்டும் அதிசயிக்கத்தக்க வலிமையும் துணிச்சலும் வாய்ந்தவர்.

கன்பூசியஸ் மூன்று வயதை அடைந்த போது அவருடைய தந்தை இறந்தார். தம் அன்னையாரின் கவனிப்பாலும், அன்பான வழி காட்டுதலாலும் கன்பூசியஸ் உடல் வலிமையிலும் அறிவிலும் வளர்ச்சி பெற்றார். நாட்டு வரலாறு, செய்யுள், தத்துவம், இசை ஆகியவற்றை அக்காலத்தில் எந்த அளவு போதிக்க முடியுமோ அந்த அளவுக்கு அந்த அம்மையார் அவருக்கு நன்கு கற்பித்தார்.

கன்பூசியஸ் லோகாங் என்ற இடத்திற்குச் சென்றார். அங்கே அவர் தொல்பொருள் ஆராய்ச்சி, இசை, சமய சம்பிரதாயச் சடங்குகள், ஈமச் சடங்குகள் ஆகியவற்றைப் பற்றிப் பயின்றார். இங்கு அவர் லாவோ - ட்ருசயைச் சந்தித்தார். தலைநகரத்திலிருந்து லு என்ற இடத்திற்கு அவர் திரும்பி வந்த போது அவர் நாட்டின் மிகச் சிறந்த அறிஞர் என்று அனைவராலும் போற்றப்பட்டார்.

கன்பூசியஸ்ஸின் தாயார் அவருக்கு ஒரு மனைவியைத் தேர்ந்தெடுத்தார். கன்பூசியஸ் மணந்து கொண்ட பெண் கங்

மாநிலத்தைச் சேர்ந்தவள். அவருக்கு ஒரு புதல்வரும் இரண்டு புதல்விகளும் இருந்தனர். அவருடைய புதல்வரின் பெயர் போ-யு. இவருடைய மகனுக்கு நாம் மிகவும் நன்றிக் கடன்பட்டிருக்கிறோம்; ஏனெனில், கன்பூசியஸ்ஸின் தத்துவ போதனைகளை முழு நிறைவாக அவர் நமக்குத் தந்துள்ளார்.

கன்பூசியஸ் தமது 17-ம் வயதில், அடக்கமான, ஒரு சிறிய ஊரில் இருந்த பள்ளியில் தம் கல்வியை முடித்தார். லு என்ற பிரபுத்துவ மாநிலத்தில் ஷு என்ற குடும்பத்தாரின் பண்டகசாலையில் கணக்குகள் எழுதும் வேலையாகிய தமது முதல் பணியை அவர் பெற்றார். அவர் மிகுந்த நேர்மையும் கடும் உழைப்பும் உள்ளவராக இருந்தார். ஒழிந்த நேரங்களைப் படிப்பதிலும் சிறுவர்களுக்குப் பாடங் கற்பிப்பதிலும் அவர் செலவிட்டார்; அச்சிறுவர்கள் அங்குள்ள புல்வெளிகளில் மாடுகளை மேய்க்க வந்து விளையாடிக் கொண்டிருப்பார்கள். தற்செயலாக நிகழ்ந்த இந்தமுறையால் சீடர் கூட்டம் ஒன்று வளரலாயிற்று; கன்பூசியஸ்ஸின் ஆயுட்காலம் முழுவதும் அவர்கள் மிகுந்த பக்தி சிரத்தையுடன் அவரைப் பின்பற்றினார்கள்; அவருடைய போதனைகளை அவர்கள் எழுதி வைத்து அவருடைய புகழை அமரத்துவம் உடையதாக ஆக்கினார்கள். கன்பூசியஸ் இலக்கியத் திறனிலும் ஒழுங்கு முறையிலும் நிதானமான ஊக்கம் கொண்டிருந்தார்; பழமையைப் பற்றி மிகவும் பெருமையுடன் புகழ்வார். இவ்வாறு தான் அவருடைய எச்சரிக்கைகளும் போதனைகளும் மதசம்பந்தமாக இருப்பதைக் காட்டிலும் நீதி நெறி சம்பந்தமாக அமையலாயின.

கன்பூசியஸ் உயரமாக இருந்தார். அவர் திட்டமிட்டபடி, செய்வார். செய்ய வேண்டியதை அவர் காலம் அறிந்து, இடம் அறிந்து, ஒழுங்கான முறையில் செய்வார்.

கன்பூசியஸ் அரசியல் நோக்குடன் நீதிபோதனை செய்யும் புகழ்மிக்க ஆசானாக விளங்கினார். பழங்காலந்தொட்டு நிலவிவரும் நல்லொழுக்கக் கொள்கைகளின் வாயிலாக நாட்டைச் சீர்திருத்த வேண்டும் என்பது அவருடைய பெரிய நோக்கமாக இருந்தது.

"தேர்ந்தெடுத்த கருத்துரைகள்" என்பது அவருடைய பொன் மொழிகளின் தொகுப்பு நூல்; அதில் அவர் தம் வாழ்வின் பல்வேறு படிநிலைகளைப் பற்றிப் பேசுகின்றார்: "பதினைந்தில் என் மனம் கல்வி கற்பதைச் சார்ந்திருந்தது; முப்பதில் நான் உறுதியாக நின்றேன். நாற்பதில் நான் ஐயங்களிலிருந்தும், மாயங்களிலிருந்தும் நீங்கினேன். ஐம்பதில் நான் ஆண்டவனுடைய விருப்பத்தைப் புரிந்து கொண்டேன்; விண்ணுலக விதிகளை அறிந்து கொண்டேன். அறுபதில் என் செவிகள் வாய்மையைக் கேட்டன. எழுபதில், நீதியின் எல்லைகளை மீறாமல், என் இதயத்தின் தூண்டுதல்களைப் பின்பற்றினேன்". கன்பூசியஸ் தாம் பிறந்த மாநிலத்தில் மிகப் பெரிய பதவிகளில் பணியாற்றினார்;பொதுப்பணித்துறை அமைச்சராகவும், குற்றவியல் அமைச்சர் அல்லது தலைமை நீதிபதியாகவும் பணியாற்றினார். கி.மு. 501ல் தம் ஐம்பதாம் வயதில் சுங்-டு மாவட்டத்தின் ஆளுநராக நியமிக்கப்பட்டார். அவருடைய ஆட்சி நிர்வாகம் வெற்றிகரமாக இருந்தது. ஐம்பத்தொன்றாம் வயதில் அவர் பிரதம மந்திரியாக இருந்தார்.

கன்பூசியஸ், நன்மை விளைவதற்காகவே ஓர் அதிசயமான மாறுதலை உருவாக்கினார். தெருக்களில் தவறி விழுந்த பொருளை யாரும் தமக்கென எடுத்துக் கொள்ளவில்லை. மக்கள் மிகுந்த நம்பிக்கைக்கு உரியவர்களாகவும் தேச பக்தியுள்ளவர்களாகவும் இருந்தார்கள். பெண்கள் கற்புள்ளவர்களாக இருந்தார்கள்.

கன்பூசியஸ், சைனாவில் அனைவருக்கும் நல்லொழுக்க ஆர்வத்தை ஊட்டுபவராக இருந்தார். மக்கள் அவரை வந்தனை செய்தனர்.

கன்பூசியஸ்ஸின் அற்புதமான சாதனைகளைக் கண்டு அருகில் இருந்த ஷி என்ற இடத்து நிலப்பிரபு அச்சமும் பொறாமையும் கொண்டார். கன்பூசியஸ் லூ நாட்டைவிட்டுச் செல்லுமாறு கட்டாயப்படுத்தப்பட்டார். மாநிலந்தோறும் அவர் அலைந்து திரிந்தார். தாம் சந்தித்த இளவரசர்களில் யாரேனும் ஒருவர் தம் ஆட்சிக் கொள்கைகளை நடைமுறைப் பழக்கத்திற்குக் கொண்டுவருவார் என்று அவர் நினைத்தார். தம் நம்பிக்கைக்குரிய சில சீடர்களுடன் தலைமறைவாக வாழும் நிலைக்கு அவர் விரட்டப்பட்டார். இக்காலத்தில் அவர் போதித்து வந்தார். நாளடைவில் எண்ணற்ற சீடர்கள் அவர் பால் கவர்ந்து இழுக்கப்பட்டார்கள்.

தம் பிறந்த மாநிலத்துக்கு அவர் திரும்பவும் அழைக்கப்பட்டார்; ஆனால் அவர் மறுத்துவிட்டார், தம் 73-ம் வயதில் அவர் இறந்தார்.

கன்பூசியஸ் தம் நாட்டின் இலக்கியங்களையும் வரலாற்றையும் ஆழ்ந்து ஆராய்ந்தார். நீதியும் நேர்மையும் உள்ள அரசர்களே மாநிலத்தைக் காக்க முடியும் என்றும், மக்களை நற்குணமுள்ளவர்களாக ஆக்கமுடியும் என்றும் அவர் அசைக்கமுடியாத நம்பிக்கை கொண்டிருந்தார். ஜனகமன்னர் போன்ற ஞான அரசர்களின் பரம்பரையை உருவாக்கவேண்டும் என்பது அவரது இலட்சியமாக இருந்தது. இந்தக் கண்ணோட்டத்துடன் அவர் மாநிலத்திற்கு மாநிலம் நல்ல அரசரைத் தேடி அலைந்து திரிந்தார்.

கன்பூசியஸ்ஸின் சீடர்கள் அவர், முன் கூட்டியே செய்யும் முடிவுகள், தன்னிச்சையாகச் செய்யும் தீர்மானங்கள், பிடிவாதம், அகந்தை ஆகியவை இல்லாதவராகக் கண்டனர்.

கன்பூசியஸ் தம் சீடர்களிடம் அபூர்வ நிகழ்ச்சிகள், வீரச் செயல்கள், கலகங்களால் விளையும் சீர்கேடுகள், ஆன்மீக நிலை ஆகியவற்றைப் பற்றிப் பேசமாட்டார். அவர் அவர்களிடம் அடிக்கடி இலக்கியம், வரலாறு ஒழுக்க முறை விதிகள் ஆகியவற்றின் நூல்களைப் பற்றி உரையாடினார். தியாகம் செய்வதற்கு முன்னோடியாக உபவாசம் இருப்பது, போருக்குச் செல்வது, நோய்க்குச் சிகிச்சை தருவது ஆகிய மூன்றையும் பற்றி மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்று அவர்களிடம் அவர் கூறினார். நீதி நெறி, தேச பக்தி, உண்மை என்னும் பண்புகளை வளர்க்க வேண்டும் என்று அவர் மக்களை வற்புறுத்தினார். இலாபம் தருவது, நிறைநிலை பெறுவது, விண்ணுலகச் சட்டங்கள் என்பவற்றைப் பற்றி அவர் மிகவும் அரிதாகவே பேசினார்.

கன்பூசியஸ், மனிதத் தொடர்புள்ள பொருள்களை ஆராய்வதற்கே தம்மை மிகுதியாக ஒப்படைத்துக் கொண்டார். நடைமுறை வாழ்க்கையைப் பற்றித்தான் அவர் பெரிதும் கவனம் செலுத்தினார். விண்ணுலகம், இயற்கை அற்புதங்கள், தெய்வங்கள் முதலியவற்றைப் பற்றி அவர் ஒரு போதும் பேசவில்லை. அவருடைய சீடர்களில் ஒருவராகிய ஷிலு 'வணக்கத்திற்குரிய குருநாதரே! நான் தெய்வங்களுக்கு எவ்வாறு சேவை செய்ய வேண்டும்?" என்று வினவினார். கன்பூசியஸ், "மனிதனுக்கு எவ்வாறு சேவை செய்ய வேண்டும் என்பதை நீ அறியாய்; அப்படி இருக்கும்போது, தெய்வங்களுக்குச் சேவை செய்வதைப் பற்றி நீ எப்படிக் கேட்கலாம்?" என்று விடையிறுத்தார். சீடர் மறுபடியும், "தொழுவதற்குரிய ஆசானே! அப்படி இருக்கும்போது, மரணத்தைப் பற்றி அறிந்து கொள்ள நீ எப்படி எதிர்பார்க்கலாம்?" என்று பதில் கூறினார். ஆனால், கன்பூசியஸ், விண்ணுலகமும் தெய்வங்களும் உண்டு என்பதை ஒரு போதும் மறுத்ததில்லை.

சமுதாய முன்னேற்றத்திற்காக, கன்பூசியஸ் தம்மை ஒப்படைத்துக் கொண்டார். சமுதாய நலத்தைப் பற்றி அவர் எப்போதும் சிந்தித்தார். தம்மால் முடிந்த அளவில் மிகுதியாக அவர் சமுதாய நன்மைக்கே பெரும் பங்கு வழங்கினார். "தேர்ந்தெடுத்த கருத்துரைகள்" என்ற அவருடைய பொன்மொழிகளின் தொகுப்பு நூல்", சமுதாய நலம், சமுதாய அமைதி, ஒற்றுமை, நல்லிணக்கம் ஆகியவற்றைப் பற்றியே மிகவும் முக்கியமாக விவரிக்கின்றது.

மக்களுக்கு நல்லொழுக்கப் பயிற்சியை வழங்குவதற்கே, கன்பூசியஸ் தமது சக்தி முழுவதையும் பயன்படுத்தினார். நீதிநெறி நற்குணங்களை வளர்ப்பது பற்றி அவர் பெரிதும் வலியுறுத்தியுள்ளார். சமுதாயத்தில் நிலவும் வேற்றுமைகளையும் பூசல்களையும் நீக்குவதற்கு அவர் முயற்சி செய்தார். பெரியவர்களும், முதியவர்களும் களங்கமில்லாத நல்லொழுக்கம் உள்ளவர்களாக இருந்தால், மற்றவர்கள் அவர்களைப் பின்பற்றி நடப்பார்கள் என்றும், இதனால் அன்பும், உலக அமைதியும் எல்லா இடங்களிலும் நிலவும் என்றும் அவர் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருந்தார். இத்தகைய சமுதாய எண்ணங்களே அவர் மனத்தில் எப்போதும் நிரம்பி இருந்தமையால், தெய்வங்களைப் பற்றியும், மரணத்திற்குப் பின் உள்ள வாழ்வைப் பற்றியும் பேச அவருக்கு நேரம் இருக்கவில்லை. எல்லாவற்றுக்கும் மேல், இவற்றைக் குறித்துப் பேச வேண்டிய அவசியம் இருப்பதாகக் கூட அவர் கருதவில்லை.

## நூல்கள்

"தேர்ந்தெடுத்த கருத்துரைகள்" என்ற நூல் கன்பூசியஸ்ஸின் உரையாடல்களாகும். அவர் தம் சீடர்களுக்கு விளக்கிக் கூறியனவும், தம்மைச் சந்திக்க வந்தவர்களின் ஐயங்களைத் தெளிவித்தனவும் ஆகும்

அவை. இந்த நூலுக்குப் பல, விளக்க உரை நூல்கள் எழுந்துள்ளன; உரையாளர் ஒவ்வொருவரும் தத்தம் கொள்கையை விளக்கியுள்ளார்.

முதியோர்க்கான பெருங்கல்வியை விளக்கும் "தா-ஸ்வே' என்ற நூலும், மியான் என்பவரின் கொள்கையை விளக்கும் 'சங்-யங்' என்ற நூலும் இருபது தொகுதிகளைக் கொண்ட கன்பூசியஸ்ஸின் 'தேர்ந்தெடுத்த கருத்துரைகள்' ஆகிய 'லன்-யு" என்ற நூலும் மென்சியஸ் என்பவரின் தத்துவமாகிய "மென்-ட்சே" என்ற நூலும் கன்பூசியஸ் மதக் கொள்கைகளைப் பற்றியவையாகும்.

"தா - ஸ்வே: என்ற நூல் அரசியல் நீதிமுறைகளைப் பற்றியதாகும். கன்பூசியஸ்ஸின் பேரராகிய மன்னர் ஷி என்பவரால் "சங்-யங்' என்ற நூல் எழுதப்பட்டது. அது தத்துவத்தை மட்டுமே பொருளாகக் கொண்டது. அது மனிதனுடைய இயல்பைப் பற்றியும் நேர்மையான நல்லொழுக்கத்தைப் பற்றியும் உள்ள சில பொதுவான கொள்கைகளைப் பற்றிப் பேசுகின்றது. கன்பூசியஸ்ஸின் "தேர்ந்தெடுத்த கருத்துரைகள்" ஆகிய "லன்-யு" என்ற நூலில் குருவுக்கும் சீடர்களுக்கும் இடையே நடைபெற்ற உரையாடல்களும் பொன் மொழிகளும் அடங்கியுள்ளன. மென்சியல் என்பவரின் தத்துவமாகிய "மென்-ட்சே" என்ற நூல் கன்பூசிய மதத்தைச் சேர்ந்த ஆர்வம் மிகுந்த ஒருவரால் எழுதப்பட்டது. சீடர்கள் எழுப்பிய பல்வேறு வகையான வினாக்களைப் பற்றியது அந்த நூல். பிரபுத்துவ ஆட்சி நிலவும் மாநில மன்னர்களுக்கு அந்த நூல் அறிவுரை கூறுகின்றது. உளநூல் கருத்துக்களையும், அரசியல், பொருளாதாரக் கருத்துக்களையும் அந்த நூல் விளக்குகின்றது.

## கன்பூசியஸ்ஸின் பொன்மொழிகள்

கன்பூசியஸ்ஸின் சுருக்கமான பொன்மொழிகள் பலவும் அவற்றின் சுருக்கம் கருதியும் அறிவு நுட்பம்கருதியும் போற்றத்தக்கனவாக உள்ளன. இவற்றைக் காட்டிலும் நல்லதுவாக எது இருக்கமுடியும்? "சிந்தனையற்ற கல்வி, பயனில்லாத உழைப்பு;கல்வியற்ற சிந்தனை ஆபத்து".

"உண்மையான நற்குணவான்களே மற்றவர்களை நேசிக்கவோ அல்லது வெறுக்கவோ முடியும்".

"முணுமுணுக்காமல் ஏழையாக இருப்பது கடினம்; தற்பெருமை கொள்ளாமல் செல்வந்தனாக இருப்பது சுலபம்".கன்பூசியஸ்ஸின் பொன்மொழிகளில் சில உண்மையில் ஏதோ புரியாத புதிர்களாக உள்ளன. சான்றாக, "ஒரு நல்ல மனிதர் மக்களுக்கு ஏழாண்டுகள் கற்பிக்கட்டும்; பிறகு அவர்களை அப்படியே போரில் ஈடுபடுத்தலாம்." மீண்டும், "கல்வி புகட்டப்படாத மக்களைப் போருக்கு அழைத்துச் செல்வது அவர்களை அழித்து விடும் செயலாகும்"."உயர் பண்புள்ளவன் தன்னுள் எதைத் தேடுகின்றானோ, அதையே கீழான பண்பு உள்ளவன் மற்றவர்களிடம் தேடுகின்றான். உயர் பண்புள்ளவன் கண்ணியவான், வாய்ச் சண்டை போடமாட்டான்; நல்லிணக்கமாக இருப்பான்; ஓரம்சாரான். அவன் ஒரு மனிதனை அவனுடைய வெறும் பேச்சின் காரணமாக ஆதரிக்கமாட்டான்; ஆனாலும் அவனுடைய நல்ல சொற்களைப் புறக்கணிக்கமாட்டான்"."உள்ளத்தின் ஆழத்தி லிருந்து எழும் உணர்வுடன் அழகை நேசிப்பது போலவே நல்லொழுக்கத்தை நேசிக்க வேண்டும்". "மற்றவர்களை உன்னுடன் ஒப்பிட்டுச் சீர்தூக்கிப் பார்க்கும் போது கூட உனக்குத் தன்னடக்கம் வேண்டும்; அவர்கள் உன்னிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று நீ விரும்புகிறாயோ அப்படியே நீயும் அவர்களிடம் நடந்து

கொள்ள வேண்டும். இதை "மனிதப் பண்பாட்டுக் கொள்கை" என்று கூறலாம்; இதனினும் மேலானது வேறு எதுவும் இல்லை". "உயர் பண்பு உள்ளவனாக ஆவதற்கு வழி, நேர்மையின் மீது தன் விருப்பங்களைப் பதிய வைக்க வேண்டும்; கல்வியை நேசிக்க வேண்டும், அதுவே நல்லொழுக்கத்திற்கும் அறிவு மேம்பாட்டிற்கும் வாயில்; இக்கல்விக்கு நிகராக எதையும் ஒப்பிடமுடியாது. நேர்மையை உண்மையாகவும், தன்னைத்தான் ஏமாற்றிக் கொள்ளாத மனத்தோடும் பின்பற்றினால் இதயம் மலம் நீங்கித் தூய்மை பெறுகிறது".

"இந்த நிலை வரைக்கும் தனிப்பட்ட ஒருவன் தனது முன்னேற்றத்தைப் பற்றி மட்டுமே கருத்தாக இருந்துள்ளான்; ஆனால் அவனுடைய வளர்ச்சி தொடக்கத்தில் அவனைச் சுற்றிலும் உள்ளவர்களின் மீது தன் செல்வாக்கைச் செலுத்துகின்றது;முடிவில் நாடு முழுவதின் மீதும் தன் செல்வாக்கைச் செலுத்துகின்றது. ஆதலால் ஒவ்வொருவரும் மற்றவர்களையும், கூடவே தம்மையும் நன்கு மதித்துத் தம் பண்பாட்டு வளர்ச்சியை வளர்த்துக் கொள்ள வேண்டும். ஒவ்வொருவரும் தம் நாவைக் காக்கவேண்டும்; தம் நன்னடத்தையைக் கண்காணிக்க வேண்டும். அவர் அமைதியைக் குலைக்கின்றவையும் கீழானவையும் ஆன எல்லாவற்றையும் விட்டுப் பறந்து அப்பால் சென்றுவிட வேண்டும்; அவர் தயாள குணத்தைத் தம் உறைவிடமாகவும், நேர்மையைத் தம் பாதையாகவும், ஒழுங்கைத் தம் உடையாகவும், அறிவுடைமையைத் தம் விளக்காகவும், நம்பிக்கையைத் தம் வசீகரமாகவும் கொள்ள வேண்டும். கண்ணியம், மரியாதை, நாட்டுப்பற்று, நம்பிக்கை ஆகியவை பண்பட்ட மனிதனின் குணங்களை மேம்படுத்துகின்றன. கண்ணியம், கூட்டத்திலிருந்து அவனைப் பிரித்துக் காட்டுகிறது; மரியாதையுடன் இருப்பதால் அவன் நேசிக்கப்படுகிறான்; நாட்டுப் பற்றால்

அவனைப் பணிகின்றனர். நம்பிக்கையால் அவன் மற்றவர்களின் நம்பிக்கைக்கு உரியவன் ஆகின்றான்".

கன்பூசியஸ்ஸின் பொன் மொழிகள் உயர் பண்புள்ள மனிதனின் இயல்புகளைத் தெளிவாக அறிவித்துள்ளன. உயர் பண்புள்ள மனிதனைப் போற்றி அவனைப் பின்பற்றுமாறு அவர் தம் சீடர்களைக் கேட்டுக் கொண்டார். ஒவ்வொருவரும் உயர் பண்புள்ள மனிதராக, தம் தோழர்களைக் காட்டிலும் உயர் பண்புள்ள மனிதராக, தாமே தம் கடந்த கால நிலையைக் காட்டிலும் உயர்மனிதராக, தாமே தற்போதுள்ள நிலையைக் காட்டிலும் உயர் பண்புள்ள மனிதராக ஆகவேண்டும் என்ற ஆர்வத்தைத் தத்தம் மனத்தில் போற்றி வருகின்றனர் என்றும் அவர் கூறினார்.

கன்பூசியஸ் அறிவித்துள்ள, உயர் பண்புள்ள மனிதனின் இயல்புகளில் சில கீழே தரப்பட்டுள்ளன.

நோக்கம் - "உயர் பண்புள்ள மனிதன் தன் கொள்கைகளின் முழுமையான பலனை அடைவதன் பொருட்டுக் கல்வி கற்கின்றான்."

நிதானம் - "உயர் பண்புள்ள மனிதன் தன் எண்ணங்களில் தனக்குரிய நிலைக்கு மாறாகச் செல்வதில்லை"

தன்னிறைவு-உயர் பண்புள்ள மனிதன் தனக்குள் எதைத் தேடுகிறானோ அதைப் பாமரன் பிறரிடம் தேடுகின்றான்.

கண்ணும் கருத்தும் உடைமை : "உயர் பண்புள்ளவன் ஒவ்வொன்றிலும் தன் முயற்சிகள் முழுவதையும் செலுத்துகின்றான்".

செம்மை - "உயர் பண்புள்ளவன் செப்பமானது எது என்பதைப் பற்றித் தன் கவனத்தைக் கூர்மையாகச் செலுத்துகின்றான். அதை நிலை நாட்டிய பிறகு, தொடர வேண்டிய நடைமுறைகள் தாமாகத் துலங்குகின்றன".

நேர்மை - "உயர் பண்புள்ளவனைத் தெளிவாக விளக்கிக் காட்டுவது நேர்மை அல்லவா?"

உண்மை - "உயர் பண்புள்ளவன் விரும்புவது யாதெனில் அவனது பேச்சில் தவறு ஏதும் இருக்கக் கூடாது என்பதாம்".

எண்ணத்திலும் செயலிலும் தூய்மை - "உயர் பண்புள்ளவன் தனித்திருக்கும் போது தன்னை எச்சரிக்கையுடன் கண்காணிக்க வேண்டும்."

உண்மையின் பால் அன்பு - "உயர் பண்புள்ளவன் உண்மையை அடையாவிடின் வறுமை வந்துற்றாலும் சிறிதும் கவலைப்படமாட்டான்".

நன்னடத்தை :- "உயர் பண்புள்ளவன் நன்னடத்தையைப் பற்றிச் சிந்திக்கிறான்; பாமரன் வசதியைப் பற்றிச் சிந்திக்கிறான்".

முன் எச்சரிக்கை - "உயர் பண்புள்ளவன் தன் பேச்சில் நிதானமாக இருக்கவும், நன்னடத்தையில் ஆர்வமாகவும் இருக்க விரும்புகின்றான்".

மன அமைதி - " உயர் பண்புள்ளவன் தனக்கு விருப்பம் ஏற்படும்போது உண்மையில் பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டியுள்ளது; ஆனால் பாமரன் தனக்கு விருப்பம் ஏற்படும் போது , வரம்பற்ற அனுமதிக்கு இடம் கொடுக்கிறான்".

அச்சமின்மை - உயர் பண்புள்ளவனுக்கு ஏக்கமும் இல்லை; அச்சமும் இல்லை.

சௌக்கியமும் பெருந்தன்மையும் - " உயர் பண்புள்ளவன் தற்பெருமை இல்லாமல் பெருந்தன்மையான சௌக்கியத் துடன் இருக்கிறான்; பாமரன் பெருந்தன்மையான சௌக்கியம் இல்லாமல், தற்பெருமையுடன் இருக்கிறான்".

உறுதி - "தூரத்திலிருந்து பார்க்கும்போது, உயர் பண்புள்ளவன், கண்டிப்புள்ளவனாகத் தென்படுகிறான்; பக்கத்தில் சென்றால் சாந்தமாக இருக்கிறான்; அவன் பேசுவதைக் கேட்கும் போது அவனுடைய பேச்சில் உறுதியும் தீர்மானமும் உள்ளன".

திறமை - " உயர் பண்புள்ளவனை எளிமையான வேலைகளால் தெரிந்து கொள்ளமுடியாது; ஆனால் மிகப்பெரிய நிர்வாகங்களை அவனிடம் ஒப்படைக்கலாம்.

பகிரங்கமாக உள்ள தன்மை - உயர் பண்புள்ளவனின் குற்றங்கள் கதிரவனையும் திங்களையும் போன்றவை. அனைவரும் அவற்றைப் பார்க்கின்றனர். அவன் மீண்டும் திருந்துகிறான், அனைவரும் அவனை ஏறிட்டுப் பார்க்கின்றனர்.

தயாள குணம் - உயர் பண்புள்ளவன் மக்களின் போற்றத்தக்க குணங்களை வளர்க்க முயல்கிறான்; தீய குணங்களை வளர்க்க முயல்வதில்லை, பாமரன் இதற்கு நேர் மாறாகச் செய்கிறான்".

பரந்த மனப்பான்மை - "உயர் பண்புள்ளவன் திறமைகளையும் நற்குணத்தையும் மதிக்கிறான்; அனைவருடனும் பொறுமையாக இருக்கிறான். நல்லவர்களைப் புகழ்கிறான்; நல்லவற்றைச் செய்ய முடியாதவர்களிடம் இரக்கம் கொள்கிறான்".

மிதமாக இருத்தல் - உயர் பண்புள்ளவன் நடுநிலை வழியைப் பின்பற்றுகிறான்.

தனித்திருக்கும் சக்தி - உயர் பண்புள்ளவனுக்கு யாரும் இந்தப் பண்பில் நிகராக முடியாது; மற்றவர்கள் அவனுடைய இந்தச் சிறப்பை அறிந்து கொள்ளமுடியாது.

உயர் பண்புள்ள இலட்சிய மனிதனைப் பற்றிக் கன்பூசியஸ் பின்வருமாறு கூறுகின்றார். "உயர் பண்புள்ளவன் தாராள மனம் படைத்தவன்; ஒரம்சாரான். தனது நிலைக்குப் பொருத்தமானதை அவன் செய்கிறான். அதைக் கடந்து செல்ல அவன் விரும்புவதில்லை. தான் தானாக இருக்க முடியாத நிலை என ஒன்று இருந்தால் அதை அவன் தனது நிலையாகக் காண்பதில்லை".' 'அறிஞன் நேர்மையையும் நல்ல நம்பிக்கையையும் தன்னுடைய கவசமாகவும் கேடயமாகவும் கருதுகிறான்; தகுதியுடைமையையும் தூய்மையையும் இடைக்கச்சாகவும் அதன் கொக்கியாகவும் கருதுகிறான், தயாள குணத்தைத் தலையில் சுமந்துகொண்டு அவன் நடக்கிறான். தன் கைகளில் தூய்மையை ஏந்திப் பேசுகின்றான். அரசாங்கம் மூர்க்கத்தனமாக அடக்கலாம்; ஆனால் அவன் தன் வழியை மாற்றிக் கொள்ளமாட்டான்; அவன் தன்னை நிர்வகிக்கும் முறை, இப்படிப்பட்டதாகும்".

## போதனைகள்

கன்பூசியஸ், கல்வி கற்பதற்கும், அறிவு பெறுவதற்கும், நேர்மையான நல்லொழுக்க விதிகளைப் பயில்வதற்கும் மிகப் பெரும் தூண்டும் சக்தியாக விளங்கினார். இத்தகைய பயிற்சியின் நோக்கம் நடைமுறை வாழ்வில் பின்பற்றுவதாகும். அவருடைய போதனையின்படி, மனிதனுடைய மிக முக்கியமான இலட்சியம், சமூகத்தின் உறுப்பினராகத் தன்னைத் தெரிந்து கொள்வதும், தன் பெரும்பங்கை அதற்கு வழங்குவதும் ஆகும். சமூக நல வாழ்வு, சமூக நல்லிணக்கம் பற்றிய விதிகளை அவர் மக்களுக்கும் தம் சீடர்களுக்கும் போதித்தார்.

கன்பூசியஸ்ஸின் போதனை, நல்லதோர் அரசாங்கத்தின் சிக்கல்களைப் பற்றியதாகவே பெரும்பகுதி அமைந்திருந்தது. கன்பூசியஸ், "அரசன் தானாகவே நற்குணம், நேர்மை,

கண்ணியம், கடமையுணர்வு வாய்ந்தவனாக இருக்க வேண்டும். துருவ நட்சத்திரம் தனது இடத்தில் தான் இருந்து கொண்டு மற்ற எல்லா நட்சத்திரங்களையும் தன்னைச் சுற்றி வரச் செய்கிறது; அதைப் போன்றவன் நற்குணம் உள்ள அரசன். மன்னவன் எப்படி, மக்களும் அப்படி" என்று கூறினார்.

நற்குணத்தைப் பற்றி அவருடைய கருத்து என்ன? அதைக் குறிக்க அவர் பயன்படுத்திய சொல்", "ஜென்" என்பது. அவருடைய நீதி நெறிக் கொள்கையைச் சரியாகப் புரிந்து கொள்வதற்கு 'ஜென்' என்ற சொல்லின் உட்கருத்துக்களை முக்கியமாகத் தெரிந்து கொள்ள வேண்டும். இச்சொல்லில் மறைந்துள்ள எல்லாக் கருத்துக்களையும் விளக்குவதற்குரிய தனிச் சொல் எதுவும் ஆங்கில மொழியில் இல்லை. கன்பூசியஸ்ஸின் போதனைகள் எல்லாவற்றின் சாரம் இந்த ஒரு சொல்லில் அடங்கியுள்ளது. கடினமான சொல்லுக்கு ஓரளவு நிகரான சொல்லாகச், "சமுதாய நற்குணம்" என்று கூறலாம். சமுதாய நல்லிணக்கத்தையும் அமைதியையும் நிலைநாட்டத் துணை செய்யும் நற்குணங்கள் எல்லாவற்றி னுடைய கூட்டு ஆகும். இச்சொல்; தயாளம்; ஈகை, பெருந் தன்மை, நேர்மை, மரியாதை, பிறர் நலம்பேணல், சிரத்தை, நேசிக்கும் அன்பு, தாராள மனம் போன்ற நல்லகுணங்கள் பலவற்றின் கூட்டாகும் இச்சொல்.

அவருடைய சீடர்களில் ஒருவர் அவரிடம், "வணக்கத்திற்குரிய குருவே! சமூக நற்குணத்தை உருவாக்குவது எது என்பதை அருள் கூர்ந்து தெரிவியுங்கள்", என்று கேட்டார். "மற்றவர்களை நேசித்தல்" என்று அவர் பதில் கூறினார். மற்றொரு சீடர்" ஆயுட்காலம் முழுதும் செயலில் பின்பற்ற வேண்டிய கொள்கை ஏதேனும் உண்டா?"என்று கேட்டார். அவர், " உனக்கு மற்றவர்கள் எதைச் செய்யக்கூடாது என்று நீ விரும்புகிறாயோ அதை நீயும் மற்றவர்களுக்குச் செய்யாதே",

என்று தெரிவித்தார். அவருடைய முதன்மையான சீடர் ஒருவர்", என் குருநாதரின் போதனைகள் எல்லாவற்றுள்ளும் ஊடுருவிச் செல்லும் ஒரு ஒற்றைக் கொள்கை என்னவெனில் அது தன்னிடம் ஒருவன் உண்மையான பற்றுடன் இருப்பதும், அடுத்தவருக்கு ஈகை புரிவதும் ஆகும்", என்று கூறினார்.

கன்பூசியஸ், "நற்குணம் உள்ளவனுக்குப் பணிவு கலந்த அச்சங்கள் மூன்று இருத்தல் வேண்டும். விண்ணுலகக் கட்டளை, சான்றோர்கள், அருளாளர்கள் வழங்கியுள்ள அருள் மொழிகள் ஆகியவை பற்றியவை அவை. இறைவனை வணங்கும்போது அவர் நம் கண்முன் காட்சி தருவதாக உணரவேண்டும்", என்று கூறினார்.

முழு உலகமும், உலகில் உள்ள ஒவ்வோருயிரும் எப்போதும் மாறிக் கொண்டே இருக்கின்றன; மனித வாழ்வின் முக்கியமான பகுதி இப்போது உள்ள உண்மைதான் என்றும் அவர் போதித்தார்.

சமுதாயம் ஐவகை உறவுகளால் உருவாக்கப்பட்டுள்ளது என்பது அவருடைய கருத்து. அவையாவன ! கணவன் மனைவி உறவு; பெற்றோர்க்கும் குழந்தைக்கும் உள்ள உறவு;அண்ணனுக்கும் தம்பிக்கும் உள்ள உறவு; அல்லது பொதுவாக மூத்தவர்கட்கும் இளையவர்கட்கும் உள்ள உறவு; ஆளும் அரசனுக்கும் ஆளப்படும் மக்களுக்கும் உள்ள உறவு; நண்பனுக்கும் நண்பனுக்கும் உள்ள உறவு. இவர்கள் அனைவரும் ஒருவரோடொருவர் நேர்மையான இந்த உறவுகளைக் கொண்டிருந்தால் நாடு நல்ல முறையில் ஆளப்படும் என்றும் அவர் கூறினார். "பெற்றோர் பெற்றோர்களாக இருந்தால் தான் புதல்வர்கள் புதல்வர்களாக இருந்தால் தான், ஆள்வோர் ஆள்வோராக இருந்தால் தான் அமைச்சர்கள் அமைச்சர்களாக இருந்தால் தான் நற்குணத்திற்குரிய பாதை அமையும்", என்று அவர் தெரிவித்தார்.

நன்னடத்தை, நல்லொழுக்கம், இதயத் தூய்மை ஆகியவற்றைப் பண்படுத்தி வளர்ப்பதை அவர் மிகவும் வலியுறுத்தியுள்ளார். முதலில் நன்னடத்தையை வளர்த்துக் கொள்ளுமாறு அவர் மக்களை எச்சரித்தார்; ஏனெனில் அது விலைமதிக்க முடியாத மாணிக்கம்; நற்குணங்கள் எல்லாவற்றுள்ளும் அதுவே தலைசிறந்தது.

கன்பூசியஸ்ஸின் கருத்தின்படி, மனிதனது இயல்பு, அடிப்படையாகவே நல்லது, நல்லதன் பால் சார்ந்திருப்பது. அருளாளர்கள், ஞானிகளிடம் தான் நல்ல பண்பின் நிறை நிலையைக் காணமுடியும். ஒவ்வொருவரும் இந்த இலட்சியத்தை அடைய முயற்சி செய்ய வேண்டும்; அதற்குரிய வழி, நற்குண வாழ்வு, மிகவும் நல்ல நன்னடத்தை, கடமையை உண்மையாகவும், நேர்மையாகவும், தன்னலமில்லாமலும் நிறைவேற்றுவது என்பனவாம். நல்லொழுக்கமும் தெய்வீக நற்குணங்களும் உள்ளவன் ஷன்-ட்சு அல்லது மனிதருள் இளவரசனைப் போன்றவன். அவன் நற்குணத்தில் உறுதியாக நிற்கிறான்; தாழ்ந்த பண்புள்ளவன் பொருள் வசதியுடன் ஒட்டிக் கொள்கிறான். நற்குணமுள்ளவன் நேர்மையாக இருக்கிறான்; தாழ்ந்த பண்புள்ளவன் பரிசுகளையும் சலுகைகளையும் எதிர்பார்க்கிறான். நற்குணமுள்ளவன் கண்ணியமாகவும், புனிதமாகவும், பெருந்தன்மையாகவும், பணிவாகவும் இருக்கின்றான்; தாழ்ந்த பண்புள்ளவன் இழிவாகவும், கர்வமாகவும், குறுகிய மனப்பான்மையோடும், தருக்கோடும் இருக்கின்றான்.

"பெருங்கல்வி" என்ற தம் நூலில் ஒருவன் படிப்படியாகத் தன்னை வளர்த்துக் கொள்ளும் முறையைப் பற்றிக் கன்பூசியஸ் விளக்குகின்றார்; இவ்வளர்ச்சி பொது வாழ்வில் பாய்ந்து நாட்டுக்குச் சேவை செய்ய வைக்கும்;

மனித இனத்துக்கு வரப்பிரசாதமாக அமையும். அவர் அமைத்துத் தந்த வளர்ச்சியின் ஒழுங்குமுறை பின்வருமாறு :-

காட்சிகளை ஆராய்தல்
கற்றுக் கொள்ளுதல்
நேர்மை
நோக்கத்தை நிறைவேற்றுவதில் உண்மையுள்ளவராதல்
தன்னை முன்னேற்றம் பெறச் செய்தல்.
குடும்ப நல்லொழுக்கம்
உள் நாட்டுத் தன்னாட்சி
உலகத் தன்னாட்சி

கன்பூசியஸ், "முன்னோர்கள் நாடு முழுவதும் நற்குணத்திற்கு விளக்கமாகவும் எடுத்துக்காட்டாக இருப்பதற்கும் முதலில் தங்கள் மாநிலங்களில் நல்லாட்சி நிலவச் செய்ய விரும்பினார்கள். நல்லாட்சி, நிலவச் செய்ய விரும்பி தங்கள் குடும்பங்களில் ஒழுங்குமுறை நிலவச் செய்தார்கள். தங்களை முன்னேற்றம் பெறப் பண்படுத்த விரும்பி முதலில் தங்கள் நோக்கத்தில் உண்மையுள்ள வர்களாக இருந்தார்கள். நோக்கத்தில் உண்மையுள்ள வர்களாக இருக்க விரும்புகிறவர் முதலில் நேர்மையுடன் சிந்திப்பதை நாடினார்கள், நேர்மையுடன் சிந்திக்க விரும்பி அவர்கள் முதலில் தங்கள் அறிவை முடிந்த அளவில் அகலமாகப் பெருக்கினார்கள். பொருள்களை ஆராய்வ தனால் தங்கள் அறிவை வளர்த்துக் கொண்டார்கள்.

பொருள்களை ஆராய்வதனால் அவர்கள் பரந்த அறிவைப் பெற்றார்கள். பரந்த அறிவின் காரணமாக அவர்களின் சிந்தனைகள் நேர்மையாக இருந்தன. சிந்தனைகளில் நேர்மை இருந்ததனால் அவர்கள், நோக்கத்தில் உண்மையுள்ளவர்கள் ஆனார்கள். நோக்கங்களில் உண்மையாக இருந்ததனால் அவர்கள் தங்களைப் பண்படுத்தி வளர்த்துக் கொண்டார்கள். பண்பட்ட வளர்ச்சியினால் அவர்களின் குடும்பங்களில்

நல்லொழுக்கம் நிலவியது. குடும்பங்கள் நல்லொழுக்கம் பெற்று விளங்கியதனால் அவர்களின் மாநிலங்களில் நல்ல நேர்மையான ஆட்சி நிலவியது. மாநிலங்களில் நல்ல நேர்மையான ஆட்சி நிலவியதனால் நாடு முழுவதும் அமைதியும் செல்வச் செழிப்பும் விளங்கின.

வாழ்வின் பணி நிறைவு பெறுவதற்கு, முழு வாழ்வும் தேவைப்படுகிறது;நற்குணத்திலிருந்து விலகும் ஒவ்வொரு திருப்பமும் முழுமையின் நிறைவைப் பெரும் அளவில் பழுதாக்கி விடுகிறது. அருளுடைமை என்பது தூய்மையில் மாத்திரம் நிலவுவதன்று; ஆனால் நன்கு திட்டமிட்டு நன்கு வாழும் வாழ்வின் முழு நிறைவில் அமைவது; அப்போது வாழ்க்கை முதுமை வரையில் நீளுமாயினும் மிகவும் அழகுள்ள பொருளாக ஆகின்றது" என்று கூறியுள்ளார்.

## முடிவுரை

கன்பூசியஸ் கி.மு. ஆறாம் நூற்றாண்டை அமரத்துவம் உள்ளதாகச்செய்துள்ளார். பிறப்பால் அவர் மக்களை ஆளும் உரிமையைப் பெற்றவர். சூழ்நிலைகள் சாதகமாக அமைந்திருந்தால் அவர் உலகின் மிகப் பெரிய அரசராகப் புகழ் பெற்று விளங்கியிருப்பார். நல்லொழுக்க உணர்வில் அவர் மிகவும் பண்பட்ட வளர்ச்சியைப் பெற்றிருந்தார்; மனித வாழ்வில் நல்லொழுக்கப் பண்புகளுக்கே மிகவும் அதிகமான முக்கியத்துவம் உள்ளது என்பதை ஆழமாக அவர் உணர்ந்திருந்தார். பல நூற்றாண்டுகளாக உலகம் முழுவதும் அவருடைய பெருமையை நன்கு அறிந்து போற்றி வந்துள்ளது. உலகில் வாழும் மக்களில் இன்றும் கோடிக்கணக்கானவர்கள் அவரை மிகவும் உயர்வாகக் கருதி மரியாதை செலுத்தி வருகின்றனர்.

கன்பூசியஸ் சீனாவின் பெருமை மிகு போதகர்; சமூக சீர்திருத்தவாதி. கலகமும், குழப்பமும், வேறுபாடுகளும்,

மாறுபாடுகளும், பிரபுத்துவப் போராட்டங்களும் நிலவிய காலத்தில் அவர் வாழ்ந்தார். சீனக் கலை, பண்பாட்டின் தந்தை என்று அவர் போற்றப்படுகின்றார். சீன வரலாற்றை உருவாக்குவதில் அவர் பெரும் பங்கு வகித்தார். இன்றும் அவருடைய செல்வாக்கு, நாட்டின் தனி நபர் வாழ்விலும் பொது வாழ்விலும் மிகவும் முக்கியமான ஆதிக்கத்தைச் செலுத்தி வருகின்றது.

கன்பூசியஸ் பண்டைய பழக்கவழக்கங்களை ஆராயும் சிரத்தையுள்ள மாணவராக இருப்பதில் மிகுந்த உயர்வைப் பெற்றார். தாம் பிறந்த போது தமக்கிருந்த அறிவு முளைக்காத நிலையை மாற்றி அறிவு முளைக்கவும் செழித்து வளரவும் தாம் பழமையுடன் ஆர்வம் மிகுந்த தொடர்பைக் கொள்ள வேண்டியதாக இருந்தது என்று அவர் விளக்கியுள்ளார்.

மற்றவர்கள் தம் சொல்லைக் கேட்டுக் கொள்ளக் கூடிய திறனையும் அனைவராலும் நேசிக்கப்படுகின்ற ஆளுமை யையும் கன்பூசியஸ் பெற்றிருந்தார்.

2400 ஆண்டுகளாகத் தம் நாட்டின் சிந்தனையாளர்கட்கும் அறிஞர்கட்கும் ஆர்வம் ஊட்டுகின்ற ஓர் முன் மாதிரியாக அவர் விளங்கி வருகின்றார். அவருடைய திருவுருவச் சிலையின் பீடத்தின் மேல், "பத்தாயிரம் தலைமுறை மக்களின் ஆசிரியர்" என்று காணப்படும் புகழ் மொழிக்கு அவர் மிகவும் தகுதியுள்ளவர் ஆவார்.

அனைவரும் அறிந்த கன்பூசியஸ்ஸின் ஒரு வரலாற்றின் இறுதியில் பின்வரும் வரிகள் இடம் பெற்றுள்ளன :-

"கன்பூசியஸ்! கன்பூசியஸ்! ஓ! கன்பூசியஸ் எவ்வளவு பெரியவராக இருந்தார்.

அவருக்குமுன்பு கன்பூசியஸ் யாரும் இருக்கவில்லை.

கன்பூசியஸ்! கன்பூசியஸ்! ஓ! கன்பூசியஸ் எவ்வளவு பெரியவராக இருந்தார்" கன்பூசியஸ் கோடிக்கணக்கான மக்களால் இன்றும் நன்கு மதித்துப் போற்றப்படுகின்றார். சீனாவின் நாற்பது கோடி மக்களில் பெரும்பாலோர் தங்கள் இதயத்தில் கன்பூசிய மதத்தவராக இன்னும் இருக்கிறார்கள்.

சீனாவின் சமூகச் சீர்திருத்தவாதியும், அரசியல் அறிஞரும், நல்லொழுக்கச் சிலரும் ஆகிய பெருமை மிகு கன்பூசியஸ்ஸின் புகழ் ஓங்குக!

## 5. அருள் ஞானியர் — அருளரசர் பிப்பா

கி.மு. 1525-ல் பிப்பா பிறந்தார். ககரௌஸ்ரா நாட்டின் அரசர் அவர். அவர் அறநெறி அரசர். நீதியோடும் விவேகத்தோடும் அவர் நாட்டை ஆண்டார். அவர் துறவிகளுக்கும், அந்தணர்களுக்கும் பணி விடை செய்தார். அவர் அவர்களிடத்தில் ஆழ்ந்த பக்தி பூண்டிருந்தார். அரசராக இருந்தும் அவர் மிகவும் எளிய வாழ்க்கையே வாழ்ந்து வந்தார். சுக போகங்களை அவர் அறியார். அவர் முறையாகத் தியானம் செய்தார்; சமய நூல்களைப் படித்தார். பிப்பா ஓர் அருள் ஞானியாக ஆகவேண்டும் என்று சாதுக்களும் துறவிகளும் இறைவனிடம் வேண்டினர்.

பிப்பாவுக்கு ஒரு காட்சி மனத்தில் தெரிந்தது. அதில் ஒரு ஞானி தோன்றி,"அன்புள்ள பிப்பா! வாரணாசிக்குச் செல்; சுவாமி இராமானந்த குருவுக்குப் பணிவிடை செய்", என்று கூறினார். பிப்பா உடனே வாரணாசிக்குப் புறப்பட்டார். ஸ்ரீ இராமானந்தாவுக்குத் தாம் தம் வணக்கங்களைச் செலுத்த விரும்புவதாக அவருக்கு ஒரு தகவலை அனுப்பினார். இராமானந்தா", ஓர் அரசருக்கு இங்கே வேலை இல்லை. வறுமையைத் தழுவிக் கொண்டு ஓரிடத்திலும் தங்காமல்

அலைந்து திரியும் சாதுக்களுக்கும், துறவிகளுக்கும் தான் என் உறைவிடம் உரியது", என்ற பதிலை அனுப்பினார்.

பின்னர் பிப்பா தம் தலைநகருக்குத் திரும்பினார். தம்முடைய செல்வங்கள் எல்லாவற்றையும் ஏழை மக்களுக்கு வாரி வழங்கினார். மீண்டும் இராமானந்தாவைப் பார்ப்பதற்காக அவர் வாராணாசிக்குச் சென்றார். பிப்பாவின் நேர்மையைப் பரிசோதனை செய்ய இராமானந்தா விரும்பினார். குருவினிடம் பக்தி செலுத்தும் குருபக்தி, பிப்பாவினிடம் உள்ளதா என்று கண்டறிய இராமானந்தர் விரும்பினார்.'இராமானந்தர்," பிப்பா! நீ உன் செல்வத்தை ஏழை மக்களுக்கு வழங்கி விட்டு வறுமையை ஏற்றுக் கொண்டாய் என்பதைக் கேட்டு மகிழ்ச்சியடை கின்றேன்'உன்னுடைய விவேகத்தையும் வைராக்கியத் தையும் இது காட்டுகிறது. இப்போது கிணற்றில் நீ குதித்துவிடு"; என்று பணித்தார்.

பிப்பா உடனே அருகில் இருந்த கிணற்றில் குதிக்கச் சென்றார். இராமானந்தாவின் சீடர்கள் அவரைத் தடுத்தார்கள். பிப்பாவின் நேர்மையையும் பக்தியையும் கண்டு இராமானந்தர் மிகுந்த மகிழ்ச்சியடைந்தார். தம் சீடராக அவரை ஏற்றுக் கொண்டு அவருக்குத் தீட்சை தந்தார்.

இக்காலத்தில் சீடரைச் சோதிப்பதற்காகக் குரு ஒரு கடுஞ்சொல்லைப் பேசினால் கூடச் சீடர் உடனே குருவை விட்டுப் பிரிந்து விடுவார். ஆன்மீக நெறியில் இந்தக் காலத்துச் சீடர்கள் வளர்ச்சி பெறாமல் இருப்பதற்கு இதுவே காரணம்.

பிப்பா, தம் குருநாதரின் இசைவு பெற்றுத் தம் தலைநகருக்குத் திரும்பினார். அவர் பக்தர்களுக்கும் துறவிகளுக்கும் சேவை செய்து வந்தார்; தம் குருநாதரின் போதனைகளின் படித் தியானத்தைப் பயின்று வந்தார்.

தம் இருப்பிடத்திற்கு வருமாறு அவர், தம் குருநாதருக்கு அழைப்பு விடுத்தார். இராமானந்தர் அவருடைய அழைப்பை ஏற்றுக் கொண்டார். அவர் தம் சீடர்களுடன் தலைநகருக்குச் சென்றார். பிப்பா, தம் குருநாதரை வரவேற்பதற்காக வெறுங்காலுடன் ஓடினார். சீடர்களுக்கும் அவர் பணிவான வணக்கங்களைச் செலுத்தினார். மிகச் சிறந்த முறையில், அவர், ஏழைகளுக்கு அன்னதானம் செய்தார். தம் அரண்மனையில் அவர் சங்கீர்த்தன நிகழ்ச்சியை நடத்தினார்.

இராமானந்தர் துவாரகைக்குச் செல்ல விரும்பினார். தம் குருநாதரின் புனிதமிகு கூட்டுறவை இழக்க நேரிடுமே என்றெண்ணிப் பிப்பா பெரிதும் மனக் கலக்கம் அடைந்தார். இராமானந்தர்'', பிப்பா! நீங்கள் துறவறத்தை மேற் கொண்டால், நீங்களும் என்னுடன் வரலாம் என்று தெரிவித்தார். பிப்பா, தம் மகன் பொருட்டு அரியாசனத்தைத் துறந்தார்; துறவியார் இராமானந்தரைப் பின் தொடர்ந்து சென்றார். பிப்பாவின் மனைவி சீதையும் துறவியானார். அவர்கள் அனைவரும் துவாரகை நோக்கிப் புறப்பட்டனர்.

புத்தர் பிரான் தம் அரசைத் துறந்தார். கோபிசந்த் அரசரும் அவ்வாறே செய்தார். மன்னர் பர்த்ருஹரி தம் அரசைப் புல்லெனக் கருதி உதறித் தள்ளினார். தெய்வீக மெய்யுணர்வுடன், உண்டாகும் மகிழ்ச்சியுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது ஓர் அரசனுடைய மகிழ்ச்சி ஒரு பொருளும் அன்று. அருள்நெறிச் செல்வமே உண்மையான வற்றாத செல்வமாகும். பிப்பா இதை உணர்ந்து கொண்டதனால் அவரும் தம் அரசைத் துறந்தார்.

கண்ணபிரானுடைய கோயிலைக் காண்பதற்காகப் பிப்பா, துவாரகையில் கடலுக்குள் மூழ்கிச் சென்றார். இறைவன் மிகுந்த அன்புடன் அவரை வரவேற்றார். இறைவனோடு சில நாட்களைக் கழித்த பிறகு அவர்

திரும்பினார். இப்போது பிப்பாவின் புகழ் எங்கும் பரவியது. அவரைக் காண்பதற்காக மக்கள் பெருந்திரளாக வந்தனர். பிப்பாவின் பக்தி வழிபாடுகளுக்கு இது பெருத்த இடைஞ்சலாக இருந்தது. இரகசியமாக அவர் துவாரகையை விட்டுப் புறப்பட்டார். வழியில் சில பட்டாணியர்கள் அவருடைய மனைவியைத் தூக்கிக் கொண்டு ஓடினார்கள். ஆனால் இராமபிரான் நேரில் தோன்றி அவளைக் காப்பாற்றி அக்கொடியவர்களைக் கொன்றுவிட்டார்.

காட்டில் சீற்றம் மிகுந்த ஒரு சிங்கத்தைப் பிப்பா சந்திக்க நேர்ந்தது. அவர் தம் கழுத்தில் ஜபமாலையை அணிந்து கொண்டு இராமமந்திரத்தை உச்சரித்து அந்தச் சிங்கத்தை ஒரே கணத்தில் அமைதியடையச் செய்தார். பிறகு அவர், மக்களை விழுங்கும் கொடிய செயலைத் தவிர்க்குமாறு அறிவுரை கூறினார். அந்தச் சிங்கம் தன் கொடிய செயல்களுக்காக மிகுந்த மன வருத்தத்தை அடைந்து இனிமேல் அவ்வாறு செய்வதில்லை என்ற தன் உறுதியைத் தெரிவித்து அவரிடமிருந்து விடைபெற்றுச் சென்றது.

ஒரு நாள் பிப்பா ஆற்றில் நீராட நேர்ந்தது. தங்க நாணயங்கள் நிறைந்த ஒரு கலசத்தை அவர் கண்டார். ஆனால் அவர் அதைத் தொடவில்லை. இதை ஒட்டுக் கேட்ட சில திருடர்கள் தங்கத்தைத் தேடி எடுப்பதற்காக அந்த இடத்துக்குச் சென்றனர். அவர்கள் தங்க நாணயங்களைக் காணவில்லை; ஆனால் கலசத்தில் சுருண்டு படுத்திருந்த ஒரு நச்சுப் பாம்பைக் கண்டனர். தங்களைக் கொள்வதற்கு அந்த ஞானி திட்டமிட்டதாக அவர்கள் நினைத்தார்கள். அவர்கள் அந்தக் கலசத்தை அப்படியே கொண்டுவந்து பிப்பாவின் வீட்டுக்குள் வீசி எறிந்தார்கள். பிப்பா, தாம் முன்பு பார்த்தது போலவே, தங்க நாணயங்கள் நிறைந்த கலசத்தைப் பார்த்தார். ஏழைகளுக்கும், சாதுகளுக்கும் அன்னதானம் செய்வதற்கு அவர் அத்தங்கத்தைச் செலவு செய்தார்.

துறவிகளுக்குப் பால் வழங்குவதற்காகப் பிப்பா ஒரு பசுவை வைத்திருந்தார். ஒரு நாள் சில திருடர்கள் அப்பசுவைத் திருடிக் கொண்டு போய்விட்டார்கள். பிப்பா இளங்கன்றை உடன் அழைத்துக் கொண்டு, திருடர்களைப் பின் தொடர்ந்து சென்று,"தயவு செய்து இந்த இளங்கன்றையும் கொண்டு போவீர்களாக. இல்லையேல் உங்களுக்குப் பால் சிறிதளவும் கிடைக்காது'', என்று சொல்லி அழுதார். இது திருடர்களின் இதயத்தைத் தொட்டது. அவர்கள் தங்களின் தவறான செயலுக்காக மனம் வருந்தி அந்தப் பசுவைப் பிப்பாவுக்கே திருப்பித் தந்துவிட்டனர்.

ஒரு முறை பிப்பாவும் அவருடைய மனைவி சீதையும் ஸ்ரீதரன் என்ற பெயருள்ள பக்தரைச் சந்திக்கச் சென்றார்கள். ஸ்ரீதரன் மிகவும் ஏழை. அவர் தம்மிடம் வந்த விருந்தினர்களுக்கு விருந்து படைப்பதற்காகத் தம் மனைவியின் சேலையை விற்றார். உணவை அருந்த அவர்கள் அனைவரும் அமர்ந்தனர். சீதை, "புனிதம் மிகுந்த பக்தரே!தங்களின் துணைவியார் எங்கே?" என்று வினவினர்! ஸ்ரீதரன் குழப்பத்தை அடைந்தார். அரை ஆடையை அணிந்திருந்தமையால் அவருடைய துணைவி யால் வெளியில் வர முடியவில்லை. சீதை உண்மையை அறிந்து கொண்டாள். அவளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது தன்னுடைய பக்தியும் சேவையும் ஒரு சிறிதும் ஈடாகாது என்று சீதை கருதினாள். சீதை தன்னுடைய ஆடையில் பாதியை அவளுக்குத் தந்து அவளை வெளியில் அழைத்து வந்தாள்.

துறவிகளுக்கும் பக்தர்களுக்கும் சேவை புரிவதிலும், அருள் நூல்களையும் சமய நூல்களையும் படிப்பதிலும், ஜபம், கீர்த்தனை, தியானம் செய்வதிலும் பிப்பாவும் அவருடைய மனைவியும் மீதியுள்ள தம் வாழ்நாட்களைக் கழித்தார்கள்.

பிப்பாவும் சீதாவும் தூய்மைக்கும் பக்திக்கும் சேவைக்கும் வழிகாட்டிகள். அவர்களைப் போன்ற இலட்சிய வாழ்வை வாழ்வதற்கு வேண்டிய ஊக்கத்தை அவர்களிடமிருந்து இன்றைய அரசர்களும் அரசிகளும் பெறவேண்டும்.

பிப்பாவின் புகழும், சீதையின் புகழும், அவர்களுடைய கனவு என்ற ஞானம் என்னும் அஞ்சனக் கோலால் திறந்துவிட்ட அவர்களின் குருநாதர் இராமானந்தரின் புகழும் ஓங்குக!

## 6. தாது

தாது பருத்தியைச் சுத்திகரிப்புச் செய்யும் தொழிலாளி. அவர் ஆமதாபாத்தில் பிறந்தார். அவர் வாழ்ந்த காலம் கி.பி. 1544 - 1603 ஆகும். அப்போது அக்பரின் ஆட்சி முடிந்து ஜஹாங்கிரின் ஆட்சி தொடங்கியிருந்தது. தாது, தம் பன்னிரண்டாம் வயதில் ஆஜ்மீரில் உள்ள சம்பூர் என்ற இடத்திற்குச் செல்ல நேர்ந்தது. பிறகு அவர் கல்யாண்பூர் என்ற இடத்திற்குச் சென்றார். பின்னர் அவர் தம் முப்பத்தேழாம் வயதில் நாரையணா என்ற இடத்திற்குச் சென்றார்; அது சம்பூரிலிருந்து எட்டு மைல்தூரத்தில் உள்ளது; ஜெய்ப்பூரிலிருந்து அது இருபது மைல் தூரத்தில் உள்ளது. அங்கு அவர் சமய வாழ்வை மேற்கொள்ள வேண்டும் என்று விண்ணில் எழுந்த ஓர் அசரீரி அறிவித்தது. ஆதலால் அவர் நாரையணாவிலிருந்து பத்து மைல் தொலைவில் உள்ள வாஹிராணா என்ற மலையில் தங்கி வாழ்ந்தார். சிலகாலங்கடந்த பிறகு காணாமல் போய்விட்டார்; அவருடைய அடையாளங்கள் எவையும் கிடைக்கவில்லை. அவர் இறைவனோடு ஐக்கியமாகிவிட்டார் என்று அவருடைய சீடர்கள் நம்புகின்றனர்.

தாதுவின் சீடர்கள் நெற்றியல் எந்தச் சின்னத்தையும் அணிவதில்லை; கழுத்தில் ஜபமாலையையும் அணிவ

தில்லை; அவர்கள் ஜபமாலையைத் தம்முடன் எடுத்துச் செல்கின்றனர்; நான்கு முனைகள் கொண்ட வெண்ணிறக் குல்லாயை அணிகின்றனர், அதன் பின்புறம் ஒரு மடிப்பு தொங்குகின்றது.

தாது அணியினர் மூவகையினராக உள்ளனர்; விரக்தர்கள் — இவர்கள் தலைமழித்துக் கொண்டவர் களாகவும் ஒருடை உடையவர்களாகவும் ஒரு கமண்டலம் ஏந்தியவர்களாகவும் இருப்பார்கள்; நாகர்கள் — இவர்கள் படைக்கலம் ஏந்தியவர்களாகவும், சிறந்த போர் வீரர்களாகவும் இருப்பவர்கள்; விஸ்தாரதாரிகள் — இவர்கள் வழக்கமான வாழ்வுக்குரிய தொழில்களைச் செய்வார்கள்.

மார்வார், அஜ்மீர் ஆகிய இடங்களில் உள்ள தாது அணியினர், எண்ணில் அடங்காதவர்கள். அவர்களுடைய தலைமை வழிபாட்டுத்தலம் நாரையணா என்ற இடத்தில் உள்ளது. இங்கு இந்த இனத்தாருடைய சமய நூல்கள் பாதுகாக்கப்பட்டும், வழிபாடு செய்து வணங்கப்பட்டும் வருகின்றன. பிப்ரவரி மாதத்தில் இங்கு பெருங்கூட்டம் திரளும் திருவிழா நடைபெறுகின்றது. இங்குள்ள மலையின் மீது காணப்படும் சிறிய குடில், தாது பிறர் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்துபோன இடத்தின் சின்னம் ஆகும். தாது அணியினரின் சமயக் கொள்கைகள் இந்திமொழி நூல்கள் பலவற்றில் அடங்கியுள்ளன. கபீரின் நூல்களில் காணப்படும் பகுதிகள் பலவும் இந்த நூல்களில் இடம் பெற்றுள்ளன. தாது அணியினரின் புனித நூல்களில் காணப்படும் பொதுவான இயல்புகளும், கபீர் எழுதிய நூல்களில் காணப்படும் பொதுவான இயல்புகளும் ஒன்றாகவே உள்ளன. தாது அணியினர், கபீரின் சீடர்களுடன் நட்புறவு பாராட்டி வருகின்றனர்.

தாது, லோடி ராம் என்பவரின் புதல்வர். கரீப்தார்கள் என்ற பெயருள்ளவர்களும், பிஸ்கந்தர்கள் என்ற பெயர்

கொண்டவர்களும் அவருடைய சீடர்கள். தாது, தம் ஐம்பத்தொன்பதாம் வயதில் காலமடைந்தார். அவர் நெசவுத்தொழிலைச் செய்து வந்தார். கபீர் வகுத்த வைணவக் கொள்கையைச் சார்ந்தவர் அவர். இராமானந்த சீட பரம்பரையில் தாது ஆறாவது இடத்தைப் பெற்றிருந்தார்; இராமானந்தர், கபீர், கமால், ஜமால், விமல், புதன், தாது. புதன் அவருடைய குரு.

தாதுவின் பாடல்களும் பாணிகளும் நூல்வடிவில் தொகுக்கப்பட்டுள்ளன. இந்த நூலில் ஐயாயிரம் கவிதைகள் உள்ளன. பாணிகள் என்பவை நல்லொழுக்கப் பேருரைகள், பாடல்கள், துதிகளாக உள்ளன. பொங்கி வழிந்த பக்திப் பேரானந்தங்களே தாதுவின் பாடல்களாக உள்ளன. வையக மனித நேயத்தையும், வையக அமைதியையும் தாது உபதேசம் செய்தார்.

தாதுவின் மொழி எளிமை வாய்ந்தது; அவருடைய நடை எல்லோருக்கும் புரியக் கூடியது. அவருடைய சொற்களில் இனிய இசை உள்ளது. அது அனைவருடைய இதயங்களையும் ஊடுருவிச் செல்லுகின்றது.

தாது, தெய்வீக வாழ்வின் ஒற்றுமையை வலியுறுத்தினார். அவருடைய தத்துவம் நடைமுறை வாழ்வுக்கு மிகவும் உகந்தது. விவாதங்களுக்குரிய எல்லாக் கொள்கைகளையும், புரியாத தத்துவவாதங்களையும் அவர் தவிர்த்தார்.

## 7. பக்த ஹரிதாசர்

ஓர் உண்மையான பக்தரின் வாழ்க்கை, உள்ளபடியே சமய உண்மைகளை எல்லோரும் காணும்படி வாழ்ந்து காட்டும் காட்சியாகவே உள்ளது. அது ஆன்மீக வாழ்வின் கண் கண்ட உண்மைகளுக்கு உயிருள்ள நிரூபணம் ஆகும். பக்தர்கள் தங்களின் ஒவ்வொரு செயலின் வாயிலாகவும் சமய நூல்கள் வலியுறுத்தி முழங்கும் முழக்கங்களை

உறுதிப்படுத்தி நிலை நாட்டுகின்றனர். மற்றவர்களும் தங்களைப் பின்பற்றி வாழ ஊக்கம் கொள்ளத்தக்க வகையில் அவர்கள் மாபெரும் உண்மைகளைப் பெருமைப்படுத்தியுள்ளனர்.

ஹரிதாசரின் வாழ்க்கை இத்தகைய தனிச் சிறப்பை உடையது; மற்றவர்களுக்கு முன்மாதிரியாக அமைந்தது. அவர் நாமநிஷ்டையின் உருவகமாகவே திகழ்ந்தார். அவர் தெய்வத் திருநாமத்தின் பால் கொண்டிருந்த நம்பிக்கை அதிசயிக்கத்தக்கது;அதன் பால் அவர் கொண்டிருந்த அசைக்க முடியாத பற்று, அற்புத நிகழ்ச்சிக்குச் சிறிதும் குறைந்ததன்று. இந்து மதத்தில் உள்ள புனிதமான சமய நூல்கள் எல்லாம் இறைவனுடைய திருநாமத்தின் சக்தியைப் பற்றியும், உயர் நலம் பற்றியும் கூறியுள்ளவை. அவருடைய புண்ணிய அருள் வாழ்வில் விளக்கமாயின. உண்மையில், பக்தர்களுக்கெல்லாம் மாணிக்கம் போன்ற இவர், உணவினால் தான் மனிதன் வாழமுடியும் என்பதில்லை, இறைவன் திருநாமத்தினாலும் வாழமுடியும் என்று உலகம் அறியச் செய்தார்.

வங்காளத்தில், ஜெசூர் மாவட்டத்தில் உள்ள பர்ஹான் என்ற சிற்றூரில் மகாத்மா ஹரிதாசர் பிறந்தார். பிறப்பால் அவர் ஒரு முகம்மதியர். அவர் தம் குழந்தைப் பருவத்திலேயே தம் பெற்றோர்களை இழந்துவிட்டார். அநாதையாக இருந்தமையால் ஊரில் உள்ள தெருக்கள் தோறும் சுற்றி அலைவது அவருக்கு வழக்கமாயிற்று, அப்படிச் செல்லும்போது இறைவனுடைய திருநாமத்தைப் பாடிக்கொண்டே திரிவார். உண்மையைச் சொன்னால், தண்ணீர் பருக ஒரு கமண்டலம் கூட அவரிடம் இருக்கவில்லை. இடத்திற்கு இடம் பிச்சை ஏற்று உண்டு அவர் வாழ்ந்தார். நாளெல்லாம் ஹரிநாமத்தைப் பாடியவாறே அவர் தம் பொழுதைக் கழித்தார்.

இரகசியமான குரலில் அல்லாமல் உரத்த குரலில்தான், அவர் மூன்று லட்சம் தடவை இருபத்தி நான்கு மணி நேரத்தில் குருநாமஜெபம் செய்து முடிப்பது அவருடைய வழக்கமாக இருந்தது.

நாளடைவில் மக்கள் இந்த மகாபக்தர் இருப்பதையும், அவர் காட்டில் தனித்து வாழ்வதையும், நாள்தோறும் மூன்று இலட்சம் தடவைகள் இறைவனுடைய திருநாமத்தை உரத்த குரலில் இனிய இசையுடன் சொல்லி முடிப்பதையும் பற்றித் தெரிந்து கொண்டார்கள். தொலை தூரங்களில் இருந்த மக்களும் இப்புனித மகானின் தரிசனத்தைப் பெற விரும்பி வந்தனர்; ஆனால் இவருடைய புகழைப் பொறுத்துக் கொள்ளத் தீயவர்களால் முடியவில்லை. காரணம் எதுவும் இல்லாமலே அவர்கள் இவர்மீது பொறாமை கொண்டனர்.

அவர்களில் ஒருவன் இராமச்சந்திராக்கன் என்பவன்; அவன் பக்கத்து ஊரில் ஒரு நிலப்பிரபு; ஹரிதாசருக்கு அவமானத்தை உண்டாக்கவேண்டும் என்று அவன் விரும்பினான். அந்த பக்தரைக் கீழ்த்தரமான நடத்தையில் இறக்கிவிட அவன் பல்வேறு கவர்ச்சிகளைக் காட்டி முயற்சி செய்தான். ஆனால், ஹரிதாசரைக் காப்பாற்ற இறைவன் எப்போதும் அவருடைய பக்கத்தில் இருந்தமையால், அவனுடைய முயற்சிகள் யாவும் பயனில்லாது போயின. இறைவனுடைய பக்தர்களுக்குத் தீங்கிழைக்க யாருக்குத் துணிவும் சக்தியும் உள்ளன? ஹரிதாசரை அவமதிக்கப் பல்வேறு கவர்ச்சி வழிகளும் பயனற்றுப் போனதைக் கண்ட இராமச்சந்திராக்கன், அவருடைய பஜனை நிகழ்ச்சிகளுக்குக் குந்தகம் விளைவிக்க, பல வழிகளிலும் மயக்கவல்ல ஒரு வேசியை நியமித்தான். இறைவனுடைய திருநாமங்களின் இனிமையில் மூழ்கியுள்ள ஒருவருக்கு உலகியல் அழகுகள் அற்பமானவையாகவும் வெறுப்பூட்டுவனவாகவும் இருக்கும் என்பது அவனுக்குத் தெரியவில்லை.

ஹரிதாசர் காட்டில் தனிமையில் இருந்தபோதிலும் வேசியின் முன்னிலையில் சிறிதும் சலனமற்று இருந்தார். எந்த வழியாலும் அவரை மயக்க அவளால் முடியவில்லை. உறுதியான பக்தியிலிருந்தும் இறைவழிபாட்டிலிருந்தும் அவரைத் திசை திருப்பிவிட அவளால் முடியவில்லை. ஹரிதாசருடைய துறவும் வைராக்கியமும் அற்புதமானவை! அவருடைய புலனடக்கம் போற்றத்தக்கது! அருள் நாட்டம் கொண்ட பக்தனுடைய பார்வையில் காமினி ஒரு பெரிய தடை என்று கூறப்படுகிறது. ஆனால், ஹரிதாசருக்கோ தம் அன்புக்குரிய ஆண்டவனைத் தவிரப் பொருட்படுத்தத்தக்க பொருள் வேறு எதுவும் இல்லை. அவர் இறைவனுடைய இனிய திருநாமத்தை

> **"ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே**
> **ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண**
> **ஹரே ஹரே"**

என்று உச்சரித்தவாறே இருந்தார்.

நான்கு நாட்கள் கழிந்தன. நாள்தோறும் அந்தப் பெண் வந்து வெற்றி பெறமுடியாமல் திரும்பினாள். அவள் ஏதேனும் கேட்க விரும்பியபோதெல்லாம், ஹரிதாசர், "சிறிது நேரம் பொறுத்திரு. குறிப்பிட்ட எண்ணிக்கை வரை ஜெபம் செய்ய என்னை விட்டு விடு. பிறகு நான் உன்னுடன் பேசுவேன்" என்று பதில் கூறுவது வழக்கம். இவ்வாறு அவள் நாள்தோறும் அதிகாலையில் வந்து நண்பகல் வரை காத்திருப்பாள். நாம சங்கீர்த்தனம் செய்வதில் ஹரிதாசர் எப்போதும் மிகவும் மும்முரமாக இருந்தார். இழி செயல் செய்யும் அந்தப் பெண் நாள்தோறும் வருவதும் மணிக்கணக்கில் அதே மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு அமர்ந்திருப்பதும் வழக்கமாகிவிட்டது. மாலை நேரத்திலும் வந்து பின்னிரவு நேரம் வரையில் தொடர்ந்து ஜெபம் செய்வது அவளுக்கு வழக்கமாகிவிட்டது.

ஹரிதாசருடைய ஜெபம் இடையூறு ஏற்படாமல் எந்நேரமும் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டே இருந்தது.

நான்கு நாட்களாக வாய்த்த தெய்வீக ஜெபமும் பக்தருடைய நட்பும் அந்தப் பெண்ணைப் பாவகுணத்திலிருந்து புண்ணியகுணத்திற்கு மாற்றிவிட்டது. துயரத்தால் அவளுடைய நெஞ்சு பிளந்தது. மனம் திருந்தி வருந்திய அவள் பக்தருடைய பாதங்களில் வீழ்ந்து பணிந்து தன்னை மன்னிக்குமாறு மன்றாடிக் கேட்டுக் கொண்டாள்.

அவளைக் கண்டு மனம் இரங்கிய பக்த ஹரிதாசர் அவளுக்கு ஆறுதல் கூறித் தேற்றினார். நம்பிக்கையூட்டும் வார்த்தைகளைக் கூறினார்; தெய்வத் திருநாம தீட்சை செய்தார். அவர் அவளுக்கு 'ஹரிதாசி' என்று பெயரிட்டார்; இதன் பின்னர் அவளுக்கு இந்தப் பெயரே வழங்கலாயிற்று.

ஹரிதாசி தன்னுடைய சொத்துக்களை எல்லாம் ஏழை மக்களுக்குப் பகிர்ந்து வழங்கிவிட்டு, ஹரிதாசருடைய எளிய குடிசைக்கு வந்து அங்கேயே தங்கி வாழ்ந்து வந்தாள்; அப்போது ஹரிதாசர் சாந்திபுரம் என்ற ஊருக்குச் சென்றிருந்தார். அங்கே பக்கத்தில் இருந்த பூலியா என்ற சிற்றூரில் தமக்கென ஒரு குடிசையைக் கட்டிக்கொண்டு அவர் இறைவனுடைய திருநாமத்தைப் பாடி மகிழ்வதில் ஈடுபட்டிருந்தார். உண்மையில் ஹரிபக்தராகிய அவர் எங்கு சென்றாலும் செல்லும்போதெல்லாம் தம்முடன் மகிழ்ச்சி என்னும் மலர்களைத் தம்முடன் கொண்டு சென்றார். ஆழம் காணமுடியாத பக்தி என்னும் கடலில் எப்போதும் மூழ்கி இருந்த காரணத்தால் அவருக்குத் துயரம் என்ற நிலை ஏற்பட்டதே இல்லை.

ஹரிதாசருடைய பெருமையும் செல்வாக்கும் உள்ளூரில் இருந்த கோரையன் என்ற காஜிக்குத் தெரியவந்தன. அவனுடைய பொறாமைக்கு ஓர் எல்லை இல்லாது

போயிற்று. நீண்ட சதியாலோசனைக்குப்பிறகு கோரையன் ஹரிதாசரைப் பற்றிய ஒரு புகாரை அரச நீதி மன்றத்துக்கு எடுத்துச்சென்று அவரைக் கைது செய்ய வைத்தான். வழக்கை விசாரித்தபிறகு, பூலியா ஊரின் தெருக்களில் ஹரிதா சருக்குப் பிரம்படி கொடுக்கப்படவேண்டும் என்று தீர்ப்பு கூறப்பட்டது. வழக்கு மன்றத்தின் தண்டனையாளர்கள் ஹரிதாசரைக் கட்டி இழுத்துக் கொண்டு சந்தை கூடும் இடத்திற்குப் பிரம்புகளால் அடித்தவாறே சென்றனர். இரக்கமற்ற தண்டனையாளர்களின் கொடிய அடிகளால் ஹரிதாசருடைய முதுகிலிருந்து இரத்த ஆறுகள் பீறிட்டெழுந்தன. ஆனால் பாருங்கள்! தண்டனைக்கு ஆளாகிய ஹரிதாசருடைய உதடுகளிலிருந்து அன்புக்குரிய ஆண்டவனது இனிய திருநாமம் மீண்டும் மீண்டும் ஊற்றைப் போல் பொங்கி எழுந்தது. கொடிய அடிகளால் தொடப்படும் உணர்வு சிறிதும் இன்றி அவர் ஆனந்தமாக இருந்தார்.

இவ்வாறு, கனவில் இரத்த வெள்ளத்தில் குளித்த ஒருவனைப் போல் ஹரிதாசர், அரசின் ஏவலாட்களால் இழுத்துச் செல்லப்படுவதற்குத் தம்மை அனுமதித்தவாறே சென்று மூர்ச்சித்து நினைவை இழந்தவராய்த் தெருவின் ஓரத்தில் விழுந்து விட்டார். அவர் இறந்து விட்டார் என்று கருதிய அரசனின் ஏவலாட்கள் அவருடைய உடம்பைக் கொண்டு சென்று கோரையன் முன்னால் வைத்தனர். சுடுகாட்டில் அடக்கம் செய்யத் தகுதி அற்றதென்று அந்த உடம்பை ஆற்றில் வீசி எறியும்படி அவன் கட்டளை இட்டான்.

புனித ஆற்றின் குளிர்ந்த நீர் நினைவை இழந்த பக்தருக்குப் புத்துயிர் ஊட்டியது; வேகமாகப் பாய்ந்தோடும் ஆற்று வெள்ளம் அவரை நீராட்டிப் பூலியா ஊரின் ஆற்றங்கரைப் படிகளில் கிடத்தி விட்டுச் சென்றது. இச்செய்தி எங்கும் பரவியது. ஹரிதாசரைக் காண்பதற்காக மக்கள்

கூட்டம் கூட்டமாகத் திரண்டனர் இந்தத் தகவல் கோரையனுடைய செவிகளையும் எட்டியது. தன்னுடைய கொடூரமான செயல்களைக் குறித்து அவனுடைய உள்ளம் ஆழ்ந்தவருத்தத்தில் மூழ்கியது. மனம் திருந்தியவனாக அவன் அந்த இடத்திற்கு விரைந்து சென்று ஹரிதாசருடைய திருவடிகளில் பணிந்து தன்னை மன்னித்தருளுமாறு இறைஞ்சினான்.

உண்மையான பக்தரின் பெருமை நிச்சயம் இவ்வாறு எவ்வளவு பேராற்றல் வாய்ந்ததாக உள்ளது! அவருடைய சத்சங்கம் அவரை நேசித்துப் போற்றுபவர்களுடைய மனங்களை மாத்திரம் அல்லாமல், அவருடைய பகைவர்களைக் கூடப் பெரும் அளவில் மாற்றம் பெறச் செய்து விடுகிறது. பக்தருக்குத் தீங்கிழைக்க விரும்புகின்றவர்களைக் கூட அவருடைய கூட்டுறவினால் மனமாற்றம் பெற்றுத் தூயவர்களாகி முற்றிலும் மாறி விடுகிறார்கள். இறைவன் திருநாமத்திற்குரிய கடைத் தேற்றும் சக்தியின் உருவமாகவே பக்தர் ஆகிவிடுகிறார். இவ்வாறு தான் பக்த துகாராமைத் துன்புறுத்தியவர்கள், இறுதியில் அவர் பால் மிகுந்த பணிவைப் பாராட்டும் சீடர்களாக ஆனார்கள். இத்தகைய வரலாறுகள் எல்லாவற்றிலும், "நிந்திக்க வந்தவன் வந்தனை செய்பவனாக நின்றான்," என்ற உண்மை தடையின்றி நிரூபிக்கப்பட்டுள்ளது.

இறைவன் திருநாமத்தின் சக்தியையும் பெருமையையும் சொற்களால் விளக்க என்றேனும் முடிந்துள்ளதா இறைவன் திருநாமத்தின் பால் அசைக்கமுடியாத சரணாகதியை அடைந்த ஒருவனுக்குத் தீங்கிழைக்க உலகத்தில் உள்ள சக்தி ஏதேனும் உண்டா? உண்மையில் இறைவன் திருநாமம், ஊடுருவிச் செல்ல முடியாத, பிளக்க முடியாத மார்புக் கவசமாக இருந்து பக்தரை எப்போதும் தீய பகைச்

சக்திகளிலிருந்து காப்பாற்றி வருகின்றது. புன்னகை பூத்த முகத்துடன் கொடூரமான சித்ரவதைகளைப் பொறுத்துக் கொள்ளும் உள்ளுறை வலிமையை அது தருகிறது; அந்த வலிமையை யாரும் புரிந்து கொள்ளமுடியாது. அது துன்பத்தைச் சாந்தமாகவும் இன்பமாகவும் மாற்றுகிறது; பகைமையை நேசமாக மாற்றுகிறது; பாவத்தைப் புண்ணியமாக மாற்றுகிறது.

தற்போது, பக்த ஹரிதாசர் பூலியா ஊருக்கு அருகில் இருந்த ஒரு குகையில் வாழ்ந்து வந்தார். அவர் அங்கிருந்த போது கூட, இரவில் முழு நிலா நிறைவான தண்ணொளி வீசுவது போல, எல்லாத் திசைகளிலும் அவருடைய சாந்தமான பக்தியின் குணப் புகழ் வெள்ளம் போல் பரவிற்று. நாள் தோறும் யாத்திரிகர்களின் பெருங்கூட்டம் அவருடைய தரிசனத்தைப் பெறுவதற்காக அவருடைய ஆசிரமத்திற்கு வந்தது. அவரைக் காண வந்த ஒவ்வொருவருக்கும் எரியும் உணர்வும் கடுமையான வேதனையும் உடனே ஏற்பட்டன. குகையில் ஹரிதாசரைக் காணவந்த அனைவருக்கும் இது ஒரு பெரிய சோதனையாக இருந்தது. முடிவில், இதற்குரிய காரணம் அந்த குகையில் இருந்த ஒரு நச்சுப் பாம்புதான் என்று கண்டறியப்பட்டது. அதனிடத்திலிருந்து வெளிப்படும் மூச்சுக் காற்றில் உள்ள நச்சுப் புகையே எரியும் உணர்வை விளைவித்தது. எனவே மக்கள் அனைவரும் ஒன்று திரண்டு ஹரிதாசரை அணுகி அந்த இடத்தை விட்டு வந்து விடுமாறு மிகவும் வற்புறுத்தினார்கள். அந்தப் பாம்பு ஹரிதாசருக்கு எந்த விதமான தீங்கையும் செய்யாததால் அவர் அவர்களுடைய வேண்டுகோளை நிறைவேற்ற விரும்பவில்லை. மக்களின் நலத்துக்காக அவர் இணங்க வேண்டும் என்று அவர்கள் அவரிடம் மன்றாடிக் கேட்டுக் கொண்டனர்.

எனவே, இந்த அல்லல் யாவும் நீங்குவதற்காக இறைவனுடைய சக்தி மிகுந்த திருநாமத்தின் பால் அடைக்கலம் புகுவதென்று ஹரிதாசர் முடிவு செய்தார்.

இதன் பயனாக அவர் ஒரு சங்கீர்த்தன நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்தார். உணர்ச்சி மிக்க பாவனையோடும் தீவிரமான உற்சாகத்தோடும் சங்கீர்த்தன நிகழ்ச்சி தொடங்கியது. மெய்சிலிர்க்க வைக்கும் கீர்த்தனங்களின் வெற்றி மிகுந்த இசை ஓசை குகை எங்கும் நிறைந்து அதிரத் தொடங்கியவுடனே, அந்தோ, காண்போரை நடுங்க வைக்கும் ஒரு பெரிய பாம்பு 'புஸ்' என்ற சீற்றத்துடன் அஞ்சத் தக்க ஒலியுடன் வெளிப்பட்டது. மக்கட் கூட்டம் அதைப் பார்த்துக் கொண்டிருந்தபோதே அது ஊர்ந்து சென்று மறைந்து விட்டது; பிறகு அது ஒருபோதும் திரும்பி வரவில்லை. இவ்வாறு, தெய்வீகச் சக்தி வாய்ந்த கீர்த்தன நிகழ்ச்சியின் வாயிலாக, அந்த நாள் முதல் மக்கள் அனைவரும் வருந்தும் வேதனையிலிருந்து முற்றிலும் ஒரேயடியாக விடுவிக்கப்பட்டார்கள்.

இறைவனுடைய பக்தருக்கு உள்ள செல்வாக்கு இத்தகையது. நீலகண்டராகிய சிவபெருமான் கூடப் பக்தருக்கு அஞ்சுகிறார். பக்தருடைய திருநாம சாதனையின் பெருமை இத்தகையது. ஸ்ரீமத் பாகவதத்தில் கூறப்பட்டுள்ள தேவர்களின் கருத்தைக் கவனமாகக் கேளுங்கள்.

"இறைவனுடைய இனிய திருநாமத்தைப்பாடுகின்றவர், இறைவனுடைய பக்தர்களுக்கெல்லாம் பிரியமானவர், தேவலோகத்தில் உள்ள தேவர்களுக்கும், அந்தணர்களுக்கும், குருவுக்கும், ஞானிகளுக்கும் சேவை செய்பவர் ஆகிய அந்த உண்மையான பக்தர் நம்மால் பூஜிக்கத்தக்கவர். அதாவது, மூன்று உலகங்களிலும் உள்ளவர்களால் நாம் வணங்கப்படுகிறோம்; ஆனால் இத்தகைய பக்தரோ,

தேவர்களாகிய நம்மால் பூஜிக்கத்தக்க களஞ்சியமாக இருக்கிறார்."

'ஆதி புராணம்' என்னும் நூலில் அர்ச்சுனனுக்குக் கண்ணபிரான் கூறிய விளக்கம் :-

"என்பால் பக்தி செலுத்துவோரை என்னுடைய பரிபூரணமான பக்தர்கள் என்று கருதமாட்டேன். என்னுடைய பக்தர்களுக்கு அடியார்களாக இருப்பவர் களையே என் உண்மையான பக்தர்கள் என்று போற்றுகிறேன்." பாருங்கள்! ஹரிதாசர் ஏகாந்தமான ஒரு தனி இடத்தில் தங்கி இருந்து தமது சாதனையைத் தீவிரமாகச் செய்து கொண்டிருக்க வேண்டியவர். ஆனால், அவர் மக்கள் அனைவருடைய வேதனையைப் பற்றிக் கவலை கொண்டார்; தற்காலத்தில் உள்ள போலி வேதாந்திகள் பலரைப் போன்றவர் அல்லர் அவர். இறைவனுடைய பக்தர்களுக்கெல்லாம் அவர் அடியவராக இருந்தமையால், அவர் இறைவனுடைய மிகவும் உண்மையான பக்தராவார்.

ஹரிதாசர் அனைவரிடமும் பக்தியாக இருந்தமை பற்றிய இன்னொரு நிகழ்ச்சி மானசீக ஜெபத்தைக் காட்டிலும் உரக்கப் பாடுவது தாழ்ந்ததென்று கருதப்பட்டாலும், ஹரிதாசர் இறைவனுடைய திருநாமங்களை உரத்த குரலில் பாடிக் கொண்டிருந்தார். உரத்த குரலில் பாடுவது தாழ்ந்தது என்பதைப் பற்றி ஹரிதாசர் அவ்வளவாகக் கவலைப் படவில்லை. அனைவருக்கும் அவர் கூறிய பதில், மானசீக ஜெபத்தைச் செய்தால் அது அவருக்கு மட்டும் நலன் தரும், பயன் தரும்; ஆனால் உரத்த குரலில் அவர் பாடும்போது அது எல்லா உயிரினங்களின் செவிகளையும் தாக்கும்; தமக்கு நன்மைதருவதோடு அது ஆயிரக்கணக்கான வர்களுக்கும் உள்ளத்தில் உயர்வைத் தந்து காப்பாற்றும். ஹரிதாசருடைய பக்தி ஒவ்வொன்றின பின்னாலும் இத்தகைய தெய்வீகமான, மனிதாபிமான நோக்கங்கள் இருந்தன.

இறைவனுடைய திருநாமத்தின் பெருமையை இவ்வாறு நிலைநாட்டிய பக்த ஹரிதாசர், ஆழங்காணமுடியாத தீவிரமான கடவுள் பக்தி என்னும் கடலில் முற்றிலும் மூழ்கி இருந்தார். அப்போது, நவத்வீபத்தில் அவதாரம் செய்துள்ள கௌரங்கரைப் பற்றியும், அவர் பக்தர்கள் அனைவருடைய உள்ளங்களிலும் பக்தி என்னும் அமிழ்த மழையைப் பொழிந்து கொண்டிருக்கிறார் என்பதைப் பற்றியும் கேள்வியுற்றார். மகா பிரபுவுடன் தங்கி இருக்க வேண்டும் என்று ஹரிதாசரும் விரும்பினார். இறைவனுடைய இனிய திருநாமத்தைப் பாடியவாறும், பரவசத்தோடும் களிப்போடும் ஆடியவாறும் அவர் கௌராங்கரின் கமலபாதங்களில் சரண் புகுந்தார். பகலையோ இரவையோ அல்லது காலம் கழிவதையோ அவர் அறிந்தாரில்லை. ஆயிரம் சூரியர் களுக்கும் ஆயிரம் சந்திரர்களுக்கும் நிகரான அவருடைய தீவிரமான பக்தியின் புகழ் ஒளி, மெய்யுணர்வின் சாரத்தை அடைவதற்குப் பெருமை மிக்க ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தது; நம்மிடம் நல்ல சம்ஸ்காரங்கள் இல்லாத காரணத்தால் நம்மால் அதைக் கண்டு கொள்ள முடியவில்லை. இன்றைய பொழுது நமக்குத் தெளிவாக இருப்பதைப் போல், ஹரிதாசருடைய வாழ்வில் நடைபெற்ற ஒவ்வொரு நிகழ்ச்சியும் கடவுளைப் பற்றிய மெய்யுணர்வின் எல்லைகளுக்கு நம்மை அழைத்துச் செல்வதுடன், நம் பாதையில் நமக்குத் துணையாக வந்து, தூய்மை, பக்தி என்னும் ஒளியைக் காட்டி, வழியில் உள்ள தடைகளை அகற்றி, மறைந்துள்ள வலைகளிலிருந்தும், படுகுழிகளி லிருந்தும் நம்மைக் காப்பாற்றுகிறது.

யாருடைய நாவில் இறைவனுடைய புனிதமான திருநாமம் எந்நேரமும் ஒலித்துக் கொண்டிருக்கிறதோ அவர், மிகமிகத்தாழ்ந்த குலத்தில் பிறந்தவராயினும் அவரே தூயவர்; உயர்ந்த குலத்தில் பிறந்தவரைக் காட்டிலும் உண்மையில் அவரே மிக மிக உயர்ந்தவர். இறைவனுடைய

பெருமைமிக்க திருநாமத்தைத் தொடர்ந்து பாடுபவர், தவ விரதங்கள், அருள்நூல்களை ஓதுதல், வேள்விகள், தியானங்கள் புண்ணியச் செயல்கள் ஆகிய எல்லாவற்றி னுடைய பலன்களையும் ஒருங்கே உடனே பெறுகின்றார்.

ஹரிதாசர் முகம்மதியப் பெற்றோர்களுக்குப் பிறந்தவராயினும், உண்மையில் வைணவர்களிடையே ஒரு மாணிக்கம் என்று கருதப்படவேண்டியவர்; நம் புண்ணிய பாரத நாட்டின் ஹரி பக்தர்கள் என்னும் வானத்தில் ஒளி மிக்க நட்சத்திரமாகப் போற்றப்பட வேண்டியவர். ஒருவரை அவருடைய பிறப்பை மட்டும் கொண்டு அன்று, அவர் வாழும் வாழ்வைக் கொண்டே அவருடைய உண்மையான மதிப்பை மதிப்பிடவேண்டும். ஒருவர் இறைவனுடைய திருநாமத்துடன் ஒட்டிக் கொண்டிருக்கக் கற்றுக் கொண்டார் எனில், பிறகு அவருடைய பார்வையில் மற்றவை எல்லாம் அர்த்தமற்றவைகளாக ஆகிவிடுகின்றன. வேள்விகள், சடங்குகள், கருமங்கள், தியானம் முதலியவை யாவும் இறைவனை மகிழ்விக்க மட்டுமே முடியும்; ஆனால், அவனுடைய திருநாமமோ அந்த இறைவனையே நம்மிடம் இழுத்துக்கொண்டுவரவல்லது. பெயரும், பெயரையுடைய இறைவனும் சமமே, ஏனெனில், நாமி (பெயரையுடையவர்) யும், நாமமும் (பெயரும்) ஒன்றே. திருநாமம் நம்மிடமிருந்தால் இறைவனும் நம்மிடம் இருக்கிறார்.

இறைவனுடைய தெய்வீகமான திருவடிகளுக்கே தங்களை ஆளாக்கிக் கொண்ட பக்தர்களின் புகழ் ஓங்குக! அவர்களுடைய பாதையையும் இலக்கினையும் நாமும் உணர்ந்து கொள்ள அவர்களுடைய நல்வாழ்த்துக்கள் என்றென்றும் நம்மீது பொழிவனவாக!

## ৪. கனகதாசர்

இறைவன் பக்தருடைய சாதியையோ, மதத்தையோ, நிறத்தையோ பார்ப்பதில்லை. பக்தருடைய இதயத்தை மட்டுமே அவர் பார்க்கிறார். இறைவன் ஒரு மனிதனை அவன் வெளியில் நடந்து கொள்ளும் நடத்தையைக் கொண்டு அல்ல; அவனுடைய இதய எண்ணங்களையும், இரகசியமான நோக்கங்களையும் ஆர்வங்களையும் கொண்டு தான் முடிவு செய்கிறார். இந்தியாவின் சமய வரலாற்றில் ஹரிஜன சமுதாயம் கொண்டுள்ள பங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

தென் இந்தியாவில் தென் கனரா மாவட்டத்தில் உள்ள உடுப்பியில் கோயில் கொண்டுள்ள கண்ணபிரானுடைய பெருமை மிகு பக்தர், கனகதாசர். அவர் தாழ்ந்த குலத்தில் பிறந்த காரணத்தால் கோயிலுக்குள் நுழைய அவர் அனுமதிக்கப்படவில்லை. வழிபாடு செய்வதன் பொருட்டுக் கோயிலின் பிரதான வாசலுக்கு அருகே வருவதற்குக் கூட அவரைக் கோயிலின் அர்ச்சகர்கள் அனுமதிக்கவில்லை.

கனகதாசர் கோயிலைச் சுற்றி வலம் வந்து கொண்டிருந்த பொழுது, கோயிலுக்குப் பின்புறம் ஒரு சிறிய ஜன்னல் இருப்பதைக் கண்டார். ஜன்னலுக்கு முன்னால் அவர் அமர்ந்தார். கண்ணபிரானின் புகழ் பற்றிய பாடல்களைப் பாடத் தொடங்கி விரைவில் அவர் தம்மையே மறந்து விட்டார். மக்கள் பலர் அவரைச் சூழ்ந்து கொண்டனர். மனத்தை உருக்கும் அவருடைய இனிய இசையினாலும், பக்தியின் ஆழத்தினாலும் அவர்கள் மிகவும் கவரப்பட்டனர். கண்ணபிரான் கனகதாசர் தம்மைத் தரிசனம் செய்வதற்காகப் பின்புறம் திரும்பினார். அர்ச்சகர்களை ஆச்சரியம் தாக்கியது. இன்றும் கூட அங்கு வரும் யாத்திரிகர்களுக்கு அந்த ஜன்னலும், கனகதாசர் அமர்ந்து பாடிய இடமும் காட்டப்படுகின்றன. தென் கனரா

மாவட்டத்தில் உள்ள மக்கள் பலர் இன்னும் கனகதாசருடைய உள்ளத்தை உயர்த்தும் பாடல்களைப் பாடி மனோதிடத்தையும் மகிழ்ச்சியையும் அமைதியையும் பெறுகின்றனர்.

சிதம்பரத்தில் உள்ள நடராசப் பெருமானின் சிறந்தபக்தர் நந்தனார்; அவர் அங்கு தோன்றிய தெய்வீக ஜோதியில் கலந்து கரைந்து மறைந்தார்; அவர் ஒரு ஹரிஜனர். கம்ம குலத்தைச் சேர்ந்த ராய்தாசர் ஒரு சிறந்த ஞானி. அவர் சித்தூர் மகாராணி மீராபாயின் குரு. வாரணாசியில் இருந்த பண்டிதர்கள் தாழ்ந்த குலத்தில் பிறந்தவர் ராய்தாசர் என்ற காரணத்தால் அவர் மீது அளவு கடந்த வெறுப்பைக் காட்டினர். ராய்தாசர் தம் மேனியைக் காட்டினார். மனித அறிவுக்குப் புலப்படாத ஒளியுடன் கூடிய பூணூல் அவருடைய உடம்பில் இருப்பதை அவர்கள் பார்த்தனர்.

ஆளவந்தாரின் சீடர் மாறனார், புகழ் மிக்க திருக்குறளை இயற்றிய திருவள்ளுவர், திருப்பாணாழ்வார், சோகாமேளர் முதலிய அனைவரும் ஹரிஜன ஞானியர். அவர்களுடைய போதனைகள் மனிதகுலம் அனைத்துக்கும் உரியன. அவர்கள் இறையுணர்வில் வாழ்ந்தனர்.

ஞானிகளின் வாழ்க்கை வரலாறுகளைக் கூறும் பக்த மாலை என்ற நூலை இயற்றிய நாபா என்பவர் சமுதாயத்தின் அடிமட்ட நிலைகளில் இருந்த ஒரு தாழ்ந்த குலத்தில் தான் உதித்தார்.

மனித சமுதாயத்தின் மகிழ்ச்சி மேம்பட அரும்பாடு பட்டு வாழ்ந்தவர்களும், நிலையான உண்மைகளைப் புரிய வைத்தவர்களும் பெருமை மிக்க இந்தியாவின் அவ்வக்காலச் சமய வரலாறுகளை வளப்படுத்தியவர்களும், தங்களின் போதனைகளாலும் அவற்றை வாழ்ந்து காட்டிய வகையாலும் நம்மை வழி நடத்திச் செல்பவர்களும், நம்

இதயங்களில் வாழ்ந்து வருபவர்களும் ஆகிய ஹரிஜன ஞானியர்களின் புகழ் ஓங்குக! அவர்கள் தங்களுடைய ஆயுட்காலத்தில் செய்த சாதனையில் ஒரு சிறிய பங்கையாவது நீங்கள் உங்களுடைய அன்றாட வாழ்வில் பயிற்சி செய்து வந்தால், நீங்கள் விரைவில் தேவர்களாக அல்லது அதிமனித சக்தியுள்ளவர்களாக அல்லது ஞானியர்களாக மாறுவீர்கள்.

கனகதாசர் வாழ்க! நந்தனார் வாழ்க! ராய்தாசர் வாழ்க!.

## 9. நீலகண்ட தீட்சிதர்

மதி நுட்பம் வாய்ந்தவரும், அனைவராலும் மேன்மையாக மதிக்கப்பட்டவரும் ஆகிய புகழ்மிகுந்த நீலகண்ட தீட்சிதர், தென் இந்தியாவில் முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தார். அவர் பிறவி மேதை; பிறவிக் கவிஞர்; தத்துவஞானத்தின் சித்திரம்; தன்னிகரற்ற தெய்வ பக்தர். உயர்வான, தனிச் சிறப்புள்ள ராஜ தந்திரி; காட்சிக்கு எளியவர்; பொறுப்புணர்ச்சி மிகுந்தவர். நுண்ணிய ஊடுருவிச் செல்லக் கூடிய அறிவுக் கூர்மை பெற்றவர். ஒரு முறை படித்தாலும் கூட, அதை மறவாத நினைவாற்றல் உள்ளவர்.

தெய்வீக மெய்யுணர்வு, அறிவுக்கூர்மையின் சீரிய நிலை ஆகியவற்றின் சிகரத்தை எய்தியிருந்த அப்பைய தீட்சிதரின் தம்பி நீலகண்ட தீட்சிதர். ஆன்மீகம் பற்றியும், தத்துவ ஞானத்தைப் பற்றியும் பல நூல்களைத் தொகுதி தொகுதிகளாக அப்பையர் எழுதினார்; சிவபெருமானுடைய அவதாரம் என்று கூட அவர் கருதப்பட்டார்.

குடும்பத்தில் பாகப்பிரிவினை செய்யப்பட வேண்டிய நேரம் வந்தது. நீலகண்ட தீட்சிதருக்குச் சேரவேண்டிய பங்குகளைப் பற்றிய அவர் அறிவிக்க வேண்டுமென்று வணக்கத்திற்குரிய அப்பைய தீட்சிதர் கேட்டுக் கொண்டார்.

விவேகமும் அறிவு நுட்பமும் வாய்ந்த நீலகண்டர் தாம் ஞானத்தைப் பெறுவதன் பொருட்டு அப்பையரின் அருளாசிகளைத் தவிரத் தமக்கு வேறெதுவும் வேண்டாம் என்று தொழுது வேண்டினார். அதனால் பெரு மகிழ்ச்சியுற்ற அப்பையர் அவருக்கு ஞானமாகிய அருட் செல்வத்தை நிச்சயம் பெறுமாறும் கூடவே ஐயமின்றிப் பொருட் செல்வமும் தொடருமாறும் நல்லாசிகளைப் பொழிந்தார்.

ஒரு நாள் நீலகண்டர் தேவி மகாத்மியம் பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்த்திக் கொண்டிருந்தார்; அவை முற்கால அறிஞர்களைப் போலவே வேத நெறியிலமைந் தனவும் உள்ளக்கிளர்ச்சியை ஊட்டுவனவும் ஆக இருந்தன. அப்போது பாண்டிய நாட்டின் வலிமை மிக்க அரசராக இருந்த திருமலை நாயக்கர், சிறுவரின் சொற்பொழிவில் திகழ்ந்த பொலிவும், உயர்வும், ஆழ்ந்த ஞானமும் கண்டு சொக்கிப் போனார். ஒப்புயர்வற்ற இளைஞரைத் தம் முதலமைச்சராகவும் ஆஸ்தான பண்டிதராகவும் நியமிக்க முடிவு செய்தார்.

முதலமைச்சர் என்னும் பதவியைப் பெறுவதற்கு அக்காலத்தில் ஒரு நிபந்தனை இருந்தது; அது சுலபமானது; ஆனால் எளிதில் விடைகாண முடியாத ஒரு புதிராக இருந்தது. பேரறிவு வாய்ந்தோர்க்கும் அது புரிந்து கொள்ள முடியாதபடி இருந்தது. எனினும் நீலகண்டருக்கு அது முற்றிலும் எளிதாக இருந்தது. அவர் அதற்கு விடை கண்டு கூறினார்.

அரச ஆடம்பரங்களுக்கும் பல்வேறு சுகபோகங்களுக்கும் நடுவே நீலகண்டர் எளிய பக்தி வாழ்க்கையை, தத்துவ ஞானிக்கு உரிய அமைதியான வாழ்க்கையை, துறவிக்கு உரிய வைராக்கியமான வாழ்க்கையை, யோகிக்கு உரிய தீவிரமான தியான வாழ்க்கையை நடத்தி வந்தார்.

சிற்பக் கலையில் உச்ச நிலைப் புகழை எய்தியிருந்த சுந்தர மூர்த்தி ஆசாரி, நீலகண்டருடைய நேரடியான மேற் பார்வையில் திருமலை நாயக்கருடைய ராணியின் சிலையைச் செதுக்கிக் கொண்டிருந்தார்; அது அப்போது கட்டப்பட்டுக் கொண்டிருந்த பாண்டு மண்டபத்தில் வைக்கப்பட வேண்டியிருந்தது. ஆனால், அவருடைய துரதிர்ஷ்டவசத்தால் விரும்பத்தகாத ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது. ராணியின் சிலையில் வலது தொடையிலிருந்து ஒரு லேசான சில் சிதறிப் பறந்து சென்று அப்பால் விழுந்தது. இதனால், கண்ணுக்குப் புலனாகக் கூடிய தெளிவான ஓர் இடைவெளி சிறிய அளவில் ஏற்பட்டது. மீண்டும் சிற்பி முயன்றார்; ஆனால் பயன் தரவில்லை. தெளிவான ஞானக் கண்ணைப் பெற்றவராகிய நீலகண்டர் ராணியின் தொடையில் இருந்த மச்சத்தைப் பற்றித் தெரிந்து கொண்டு, அதைச் சிற்பியிடம் தெரிவித்தார். பெரும் குழப்பத்தை அடைந்த சிற்பி அந்தச் சிலையை அப்படியே விட்டுவிட்டார்.

இவ்வாறு நிகழ்ந்தவற்றை எல்லாம் அரசர் அறியலானார். சந்தேக மேகங்களால் சூழப்பட்டுத் தவறாகப் புரிந்து கொண்டமையாலும், சினம் மிகுந்தமையாலும் அறிவு குழம்பிய அரசர், நீலகண்டரைக் கைது செய்யுமாறு கட்டளை இட்டார்.

அகிலாண்டநாயகியான மீனாட்சி அம்மையின் திடபக்தி மிகுந்த உபாசகராக இருந்த நீலகண்டர், அப்போது அந்த உலக அன்னைக்கு வழிபாடு சமயத்தில் கற்பூர ஆரத்தி காட்டிக் கொண்டிருந்தார். மீனாட்சி அம்மையின் திருவருளாலும், தம்முடைய உள்ளுணர்வு ஞானக் கண்ணாலும் அவர் மன்னருடைய மனத்தில் வீசிய புயலையும், அவர் இட்ட கட்டளையையும் அறிந்தவராய், மேலும் சில கற்பூர கட்டிகளை ஆரத்தியில் சேர்த்து மேலே உயர்த்தி தம் முகத்துடன் இணைத்து எரியும் கற்பூரச்சுடரால் தம் கண்களைக் குருடாக்கிக் கொண்டார்.

இத்துயர நிகழ்ச்சியைக் கேள்வியுற்ற அரசர் தம் அறிவில் தெளிவு பெற்றார். தம் பிழைக்கு இரங்கி, மனம் திருந்தி வருத்தக் கடலில் மூழ்கிய அரசர் பளிங்கு போல் தூய்மை மிகுந்த நீலகண்டருடைய மன்னிப்பை வேண்டி மன்றாடுவதன் பொருட்டு அவரிடம் ஓடிவந்தார். நிறை கருணை, இளகிய மனம், இணையற்ற பக்தி ஆகியவற்றின் உருவமாகிய நீலகண்டர், மீனாட்சி அம்மையிடம் தம் இதய உணர்வுகளைப் பொழிந்து, தாம் தம்முடைய பார்வையைப் பெறவும், அரசர் துயரத்திலிருந்து மீளச்செய்யவும் வேண்டித் தொழுது நூற்றைந்து பாடல்களைப் பாடினார்.

அன்று முதல் நீலகண்டர், அரசர் அவையுடன் தமக்கிருந்த பந்தங்களை அறுத்துக் கொண்டார். திருநெல்வேலியிலிருந்து நான்கு மைல் தூரத்தில் உள்ள பாலாமடை என்ற ஜாகிரைத் திருமலை நாயக்க மன்னர் நீலகண்டருக்குப் பரிசாக வழங்கி அவரைக் கௌரவித்தார்.

பெரும் பக்தராகவும் ஞானியாகவும் இருந்த நீலகண்டர் தமது இறுதி நாட்களில் பக்தி என்னும் போதை மிகுந்தவராய் ஊக்குவிக்கும் எண்ணற்ற நூல்களை இயற்றினார். அவை இயல்பாக அவருடைய உள்ளத்தில் சுரந்தன; அவை பண்படுத்தி உள்ளத்தை உயர்த்துவன அவை உணர்வு அலைகள் அதிர்வன்வாய் அவருடைய ஆழ்ந்த புலமையைப் புலப்படுத்தின. அவர் துறவு பூண்டு சமாதியில் நுழைந்தார்.

## 10: புரந்தர தாசர்

புரந்தர தாசர் கர்நாடகத்தின் பெருமைமிகு கவிஞர், ஞானி. அவ்வாறே அவர் ஒரு சிறந்த இசைவாணர். அவர் தம் அந்தராத்மாவின் இசையைச் செவிமடுத்து, உணர்ச்சியூட்டும் அந்த இசையை அப்படியே வெளி உலகத்துக்கு வழங்கினார்.

புரந்தரதாசர் இந்தியா முழுமைக்கும் உரிய ஞானி. அவர் மற்ற மாநிலங்களில் தோன்றிய கபீர்தாசர், சூர்தாசர், கௌரங்கர், துகாராம், தியாகராசர் போன்ற பக்தர்களுக்கு இணையாக விளங்குகிறார்.

புரந்தரதாசர் பதினாறாம் நூற்றாண்டில் விஜயநகர ஆட்சியில் அமைந்த கர்நாடக சாம்ராஜ்ஜியத்தின் புகழ் மிகுந்திருந்த நாட்களில் வாழ்ந்தார். வங்க மாநிலத்துக்குக் கௌராங்கரும், மராட்டிய மாநிலத்துக்குத் துகாராமும், மார்வார் மாநிலத்துக்கு மீராபாயும், உத்தரப் பிரதேச மாநிலத்துக்குத் துளசிதாசரும், தமிழ்நாட்டுக்குத் தியாகராசரும் போலக் கர்நாடக மாநிலத்துக்குப் புரந்தர தாசர் அமைந்தார்.

கௌராங்கரும், வல்லபாச்சாரியாரும், புரந்தர தாசரும் சமகாலத்தில் வாழ்ந்தவர்கள். மராட்டிய மாநிலத்தில் புகழ்மிக்கு விளங்கிய யாத்திரைத் தலம் பண்டரிபுரம். அங்கு கோயில் கொண்டு எழுந்தருளியிருந்த மூலவராகிய விஷ்ணுபகவானைப் புரந்தரதாசர் வழிபட்டு வந்தார்.

புரந்தரதாசர் செல்வச் செழிப்பு மிக்க அந்தணர் குடும்பத்தில் கி.பி. 1484ல் புரந்தர ஊரில் பிறந்தார். அவ்வூர் தற்போது உள்ள புனே நகருக்குப் பதினைந்து மைல் தொலைவில் உள்ளது. கண்ணபிரானுடைய பக்தராக அவர் ஆவதற்கு முன்பு அவர் சீனிவாச நாயகர் என்ற பெயரால் வழங்கப்பட்டு வந்தார். அருட்செல்வமும் பொருட் செல்வமும் வாய்ந்த சரஸ்வதி பாய் என்ற பெண்ணை அவர் மணந்தார். அவருக்கு இசையின் பால் தீவிரமான காதல் இருந்தது; பெரும் தேர்ச்சி பெறும் அளவுக்கு அவர் அதை வளர்த்துக் கொண்டார். அவர் ஆடம்பரம் மிகுந்த சுகபோகியாக வாழ்ந்தார். அவர் நகை வியாபாரம் செய்து வந்தார்; வட்டிக்குக் கடன் கொடுக்கும் தொழிலையும் செய்து வந்தார். அவர் ஈட்டிய அளவற்ற செல்வத்தின் காரணமாக எல்லோரும் அவரை, "நவகோடி நாராயணர்" என்று அழைத்தார்கள்.

சீனிவாச நாயகர் செல்வந்தராக இருந்தபோதிலும் அவர் ஒரு பெரிய கருமியாக இருந்தார். அவர் ஒரு காசு கூடத் தருமம் செய்ததில்லை. அந்தணர்களுக்கோ, துறவிகளுக்கோ, ஏழை மக்களுக்கோ அவர் ஒரு போதும் அன்னதானம் செய்யமாட்டார். அவருடைய மனைவி சரஸ்வதி, புண்ணிய குணமும், தெய்வத்தினிடம் பய பக்தியும் கொண்டவள்; அவள் தன் கணவனின் உலகாயத நோக்கையும் புண்ணிய குணமற்ற போக்கையும் கண்டு நெஞ்சில் மிகுந்த கவலை கொண்டாள்.

ஒரு நாள் ஒரு முதிய அந்தணர் தம் மகனுடைய பூணூல் கல்யாண நிகழ்ச்சிக்காகப் புரந்தரதாசரை அணுகிச் செலவுக்குப் பொருள் தருமாறு யாசிக்க வந்தார். அப்போது புரந்தரதாசர் வீட்டில் இருக்கவில்லை. அவருடைய மனைவி சரஸ்வதி, தன்னிடம் தனக்கென்று உரிய தொகை ஏதும் இல்லை என்று கூறினாள். ஆனால் அந்த முதிய அந்தணர் அவள் அணிந்திருந்த வைர மூக்குத்தி அவளுக்கு அவளின் பெற்றோர்களால் தரப்பட்டதென்றும் அதை அவள் தன் இஷ்டப்படி யாருக்கும் தரலாம் என்றும் தெரிவித்தார். சரஸ்வதி மகிழ்ச்சியுடன் அந்த வைரமூக்குத்தியை அந்தணரிடம் கொடுத்தாள்.

அந்தணர் சீனிவாச நாயகரின் நகைக் கடைக்குச் சென்று அந்த வைர மூக்குத்தியை அடகாக வைத்துக் கொண்டு தமக்குக் கடன் தருமாறு கேட்டார். அது தம் மனைவியின் வைரமூக்குத்தி என்று நாயகர் உடனே கண்டுகொண்டார். ஆனால் அந்தணர் எந்தக் கேள்விக்கும் விடைகூறப் பிடிவாதமாக மறுத்துவிட்டார். பணத்தை விரைவில் கொண்டு வருவதாகச் சொல்லி நாயகர் கடையை விட்டுப் புறப்பட்டார்.

கடையில் இருந்த இரும்பு பீரோவில் வைரமூக்குத்தியை வைத்துப் பூட்டிவிட்டு நாயகர் தம் வீட்டுக்கு ஓடோடி வந்தார்.

வைர மூக்குத்தியைக் கொண்டு வருமாறு அவர் தம் மனைவியிடம், கேட்டார். சரஸ்வதி பெரும் குழப்பத்தை அடைந்தாள். தன் கணவர் தன்மீது வசைமாரி பொழிந்து தன்னை கடுமையாகத் தண்டிப்பார் என்று அவள் நினைத்தாள். ஆதலால் நஞ்சருந்தித் தற்கொலை செய்து கொள்ள அவள் விரும்பினாள். நஞ்சைப் பருகப் போகும் போது கிண்ணத்தில் ஏதோ ஒரு பொருள் விழுந்ததாக அவள் உணர்ந்தாள். அதை அவள் தன் விரலால் விலக்கவே, அது அவளால் முதிய அந்தணருக்குத் தானமாக வழங்கப்பட்ட தனது வைரமூக்குத்தியாக இருப்பதைக் கண்டு அவள் மிகப் பெரும் ஆச்சரியத்தை அடைந்தாள். அவள் இறைவனின் இரக்கம் மிகுந்த கருணைக்கும் அருளுக்கும் நன்றி செலுத்தி, அந்த வைரமூக்குத்தியைத் தன் கணவனிடம் தந்தாள்.

வைரமூக்குத்தியைக் கண்டவுடனே, நாயகர் பேராச்சரியத்தால் தாக்குண்டார். உடனே அவர் கடைக்குச் சென்றார். அங்கு இரும்பு பீரோவில் நகை காணப் படவில்லை. வைர மூக்குத்தியைப் பற்றிய நிகழ்ச்சி முழுவதையும் கூறுமாறு அவர் தம் மனைவியிடம் கேட்டார். நிகழ்ந்தவற்றை எல்லாம் சரஸ்வதி தெரிவித்தாள். கிழ அந்தணர் திரும்பி வரவில்லை என்பதை நாயகர் உணர்ந்து கொண்டார். அவர் இறைவனே அன்றி வேறு யாரும் அல்ல என்ற உண்மையையும் தெளிந்து கொண்டார். அவரைச் சோதித்து ஞானத்தைப் புகட்டுவதற்காக இறைவனே கிழ அந்தணராக வந்தார். இந்த நிகழ்ச்சியால் அவர் முற்றும் மாறிவிட்டார். அவருடைய தீவிரமான பொருட்பற்று மறைந்துவிட்டது. துறவின்பால் எழுந்த ஊக்கம் அவருடைய உள்ளத்தில் நிரம்பியது. தம்முடைய சொத்துக்களை எல்லாம் தானம் செய்துவிட்டு, உடனே அவர் வீட்டைவிட்டு அகன்றார், துங்கபத்திரை நதியின் கரையில் இருந்த விஜய நகரத்திற்கு அவர் சென்றார். அந்நகரம் கர்நாடக சாம்ராஜ்ஜியத்தின் தலைநகரமாகும்.

அப்போது கர்நாடகத்தின் பேரரசராக இருந்த கிருஷ்ணதேவராயர் அரசர்கட்கு எல்லாம் எடுத்துக்காட்டாக விளங்கிவந்தார். வியாசராயர் என்ற அறிவாற்றல் மிக்க ஞானி, நாட்டின் நலன் காக்கும் அருளாளராக இருந்தார். நாயகர், வியாசராயரின் சீடர் ஆனார். அவர் தமது அடுத்த நாற்பது ஆண்டுகளை நாடெங்கும் தம் பாடல்களால் பக்தியைப் பரப்புவதில் கழித்தார். அவர் கி.பி. 1664-ல், தம் எண்பதாவது வயதில், விஜயநகரத்தில் காலமடைந்தார்.

புரந்தரதாசர், நாரத ரிஷியின் அவதாரமாகப் போற்றப்படுகிறார். கர்நாடக இசையின் தந்தையாக அவர் மதிக்கப்படுகிறார். ராக, தாளங்களில் அவருக்கு ஆழ்ந்த புலமை இருந்தது. கர்நாடக சாகித்தியத்திற்கு அவர் வழங்கியுள்ள கொடைகள் உண்மையில் மிகவும் பெரியன, பெருமை வாய்ந்தன. அவருடைய இலக்கிய நடை தனிச் சிறப்பு வாய்ந்ததாகும்.

புரந்தரதாசர் வடமொழியில் உள்ள பழங்கால நூல்களைப் பயின்று ஆழ்ந்த ஞானம் படைத்திருந்தார்; பரந்த அறிவும் வாய்த்திருந்தார்; கவியுள்ளம் தோய்ந்த மேதை; கருத்தை வெளிப்படுத்துவது தனி அழகு; மொழி அவருடைய நாவில் நடனமாடியது; இவை யாவும் ஒருங்கு இணைந்து பக்திப் பாடல்களாக வெள்ளப்பெருக்கு எடுத்தது. இசையில் சீரான பாங்கு, அளவு ஒத்துச் செல்லும் ஓசை ஆகியவற்றில் அவருக்குத் திடமான ஞானம் இயற்கையாகவே அமைந்திருந்தது. நவரச பாவனைகளை அழகாக வெளிப்படுத்தும் நாட்டியக்கலையில் அவர் தேர்ச்சி பெற்றிருந்தார். எல்லாவற்றுக்கும் மேலாக, அவர் ஆத்மஞானமாகிய அபரோக்ஷ அனுபூதியைப் பெற்றிருந்தார்.

புரந்தரதாசர், இசை ஞானியர் பரம்பரை ஒன்றைத் தோற்றுவித்தார். அது கர்நாடகம் முழுவதும் பல நூற்றாண்டுகள் வரையில் ஆன்மீகச் செய்தியைப் பரப்பி வந்தது.

புரந்தரதாசர் இறைவனை இலக்குமிதேவியின் கணவர் என்று கருதித் தம் செல்வங்கள் எல்லாவற்றையும் இறைவன் பொருட்டுத் தியாகம் செய்தார். தம் பொருட் செல்வத்தை வழங்கியதன் வாயிலாக அவர் அருட்செல்வத்தைப் பெற்றார். அந்த அருட்செல்வம் தலைமுறை தலைமுறை யாகப் பின்வரும் சந்ததியினருக்கு வழங்கப்பட்டு வருகிறது. அது என்றென்றும் வளர்ந்து வருகிறதே தவிரக் குறைந்து விடவில்லை.

புரந்தரதாசர் பாடுகின்றார் :

இளமையில் நான் செருக்குள்ளவனாக இருந்தேன்;
அறியாமையில் மூழ்கி
இருந்தேன்;
என் ஆசைக்கு ஓர் அளவில்லை
மாதர் பால் நான் கொண்ட மோகம் தணியவே இல்லை.
ஆண்டவனே! நான் ஒருமுறை கூட உன்னை
நினைக்கவில்லை, உனக்கு அடிமையாகவில்லை.
தன் குழந்தைகளை மன்னிக்கும் தாயைப்போல
என் பாவங்களை மன்னித்துவிடு!
எனக்கு மன அமைதியைக் கொடுத்துவிடு!
செல்வங்களில் நீ இலக்குமிக்குப் பதி;
நீ செல்வங்களை அள்ளித் தருபவன்.
நீயே முதல் குரு.
நீ பூமியின் பிரபு.
அனைவரையும் தூய்மைப்படுத்துவது கங்கை; அந்த
கங்கையைத் தோற்றுவித்த நீ தூய்மையின் திருவுருவம்.
ஆண்டவா! நீ அனாத ரட்சகன்;
நானோ குறைபாடுகள் நிறைந்தவன்.
எனினும் நீ என்பால் குற்றம் காணவில்லை.
நீ என்னை மன்னித்தாய்;
என்மீது நீ அளவற்ற கருணை காட்டினாய்.
நான் அறிவற்றவன்; தகுதியற்றவன்,

எனினும் என்மீது நீ கருணை காட்டினாய்.
பிரபுவே! உன்னை என் வழிபாட்டினால் எவ்வாறு மகிழ்விக்க முடியும்!
மலர்களைக் கொண்டு உன்னை அருச்சிக்கமுயலட்டுமா?
உன்பால் கொப்பூழாகிய உந்திக் கமலம் உள்ளது.
உன் முன்னால் கற்பூர ஆரத்தி காட்டட்டுமா?
உன்பால் சந்திர சூரியர்கள் உன் கண்களாக உள்ளனவே!
அவை உலகுக்கெல்லாம் ஒளிகாட்டுகின்றனவே!
பொன்னை உனக்குக் காணிக்கையாகத் தரட்டுமா?
உன் துணைவியாகிய இலக்குமிதேவி செல்வத்தின் தேவதையாக இருக்கிறாளே! புனித நீரால் உன் திருவடிகளை நீராட்டலாமா? கங்கை நதியே உன் திருவடிகளிலிருந்து தானே புறப்படுகிறது! இல்லை, புரந்தரனின் புரவலனே! நான் உனக்கு எதைத் தரமுடியும்? உன்னை எப்போதும் மறவாது நினைக்கின்ற மனத்தை எனக்குத் தருவாயாக!

## 11. பத்ராசல இராமதாசர்

பத்ராசலத்தில் வசித்த பக்த இராமதாசர் இராமபிரானின் தீவிர பக்தர். பக்த கபீர்தாசரின் சமகாலத்தவர். தக்காணத்தில் ஹைதராபாத் சமஸ்தானத்தைச் சேர்ந்த பத்ராசலத்தில் தாசில்தாராக இருந்தார்.

கோபண்ணா என்பது இராமதாசருக்குப் பெற்றோரிட்ட பெயர். பழைய மதக் கோட்பாடுகளில் ஆழ்ந்த நம்பிக்கை உள்ள ஆந்திர வைணவப் பிராம்மணர் லிங்கண்ணா என்பவர் கோபண்ணாவின் தந்தை. இராமபிரானது பக்தரான லிங்கண்ணா அவரது ஊரில் மிகப் பிரபலமானவர். அப்போது ஹைதராபாத்தை ஆண்டு வந்த நிஜாம் தானிஷா, முகாலயச் சக்கரவர்த்தி அக்பர் போலவே தன் சமஸ்தானத்தை, மிகுந்த மத நல்லிணக்க உணர்வோடு ஆண்டு வந்தார். அவரது அமைச்சர்களான அக்கண்ணா,

மாடண்ணா இருவரும் லிங்கண்ணாவின் வைதிகக் குடும்பத்தைச்சேர்ந்தவராவர்.

நிஜாம் தானிஷாவும் தன் முற்பிறவியில் வாரணாசியில் ஓர் ஏழைப் பிராம்மணராக இருந்தவரே. மிக்கப் பசிப்பிணியால் பீடிக்கப்பட்ட இந்த ஏழைப் பிராம்மணர், பல வருடங்களாக வாரணாசியின் தெருக்களில் அலைந்து கொண்டு சிவபெருமானை மிக்க ஈடுபாட்டுடன் வணங்கி, அபிஷேக ஆராதனைகள் செய்து வழிபட்டு வந்தார். ஆயினும் சிவபிரான் தனக்குக் காட்சியளிக்காததால் கோபமுற்ற அவர் சிவபிரானது விக்கிரகத்தின் மீது நீர்க்குடத்தை வீசி எறிந்தார். உடனேயே இறைவன் அவர் முன் தோன்றி, அவரது உறுதியான பக்தியின் காரணமாக மறுபிறவியில் ஓர் இளவரசராகப் பிறப்பார் என்று வரமளித்தார் என்றும் அவரது சினத்தின் காரணமாக முக்தி பெறும் வாய்ப்பை இழந்தார் என்றும் கூறியருளினார் இறைவன். மேலும் தானிஷா இளவரசராக மறுபிறவியெடுக்கும்போது, இராமதாசர் ஸ்ரீராமனது தரிசனம் பெற்றுப் புனிதமடைவாரென்றும் இறைவன் அறிவித்தருளினார்.

நிஜாமின் ஆட்சி அதிகாரத்திற்குட்பட்டிருந்த பத்ராசலம் ஒரு புகழ்பெற்ற புண்ணியத்தலம். அங்கு ஸ்ரீராமர், லக்ஷ்மணர், சீதை, மற்றும் அனுமன் எழுந்தருளியிருந்த ஒரு கோவில் இருந்தது. பல்லவர்களால் கட்டப் பெற்ற அக்கோவில் இடைக்காலத்தில் நல்ல நிலையில் இருந்தது. ஆனால் முகம்மதியரின் படையெடுப்புக் காலத்திற்குப் பிறகு சிறிது சிறிதாக பாழடையத் தொடங்கி முழுவதும் அழிவுற்ற நிலையில் இருந்தது.

கோபண்ணா இளமையிலேயே கமலம்மா என்னும் மங்கையை மணந்து கோல்கொண்ட பள்ளியில் தன் மனைவியுடன் இறைவன் புகழ்பாடியும் பஜனை செய்தும்

வாழ்ந்து வந்தார். ஒரு நாள் பகத கபீர்தாசர் கோபண்ணாவைச் சந்தித்து இராமபிரானிடம் அவர் கொண்ட மிதமிஞ்சிய ஈடுபாட்டை அறிந்து அவருக்கு

"ஸ்ரீராம ராம ராமேதி ரமே ராமே மனோரமே
ஸஹஸ்ர நாம தத்துல்யம் ராம நாம வரானனே'

என்னும் தாரக மந்திரத்தை ஓதித் தீட்சையளித்தார். அன்றிலிருந்து இராம நாம மந்திரத்தின் மூலம் இறைவனை வழிபடுவதில் தன்னைத் தீவிரமாக அர்ப்பணித்துக் கொண்டார் கோபண்ணா. கணவன் மனைவி இருவருமே இராமநாமத்தை உரைப்பதிலும், பாடுவதிலும், பஜனைகள் நடத்துவதிலும் தங்கள் வாழ்நாளைக் கழித்து வந்தனர். இதன் மூலம் அவர்கள் அவ்வூராரின் நல்லெண்ணத்தைப் பெற்றனர். அவ்வூர் மக்கள் கோபண்ணாவின் குடும்பத்தாரிடம் பெருமதிப்பும் மரியாதையும் அளித்து நடக்கலானார்கள். இவ்விதம் ஆன்மீக உணர்வினை மக்களிடம் பரப்பும் தெய்வீகப் பணியில் தன் வருவாய்க்கு மேலாகவே பொருள் செலவிட்டார் கோபண்ணா.

ஒரு நாள் ஸ்ரீராம நவமி பத்தாவது நாள் விழாவை மிகுந்த கோலாகோலத்துடன் கொண்டாடிக் கொண்டிருக்கும்போது கோபண்ணாவின் குழந்தை கொதிக்கும் அரிசிக் கஞ்சி ஊற்றியிருந்த தொட்டியில் விழுந்து உயிரிழந்தது. கமலம்மா அந்த இடத்திற்கு ஓடி கோபண்ணாவோ மற்றவர்களோ அறியா வண்ணம் இறந்த குழந்தையை எடுத்துவந்து ஒரு பாயில் சுற்றி வைத்தாள். விருந்து முடிந்து கோபண்ணா வீட்டிற்கு வந்தபோது தன் அளவு கடந்த துயரத்தை அடக்க அவள் செய்த முயற்சிகள் யாவும் தோல்வியுற கமலம்மா அவர்முன் கண்ணீர் விட்டுக் கதறியழுதாள். தன் இறந்த குழந்தையை ஸ்ரீராமனது விக்கிரகத்தின் முன் போட்டுக் கோபண்ணா இறைவனை மனமுருகிப் பிரார்த்தித்தார். அங்கு

குழுமியிருந்தோரும், பெற்றோரும் பெருவியப்படையும் வண்ணம் இறந்த குழந்தை தூங்கியெழுந்து விழிப்பது போன்று உயிர்த்தெழுந்தது.

இராமதாசர் இறைவன் பால் கொண்ட ஈடுபாடும் அன்பும் மேன்மேலும் தீவிரமடைய,அவர் இப்பிறவியி லேயே இராமபிரானது தரிசனம் பெற்றுய்ய ஆவல் கொண்டார். கபீர்தாசரிடம் இதுபற்றி அவர் முறையிட, மறுநாள் இரவே இராமபிரான் அவருக்குக்காட்சி அளிப்பார் என்று கூறினார் கபீர்தாசர். இதைக் கேட்ட இராமதாசர் தன் வீட்டிற்கு வந்து மகிழ்ச்சியுடன் தன் அறையை இறைவன் எழுந்தருளும் வண்ணம் அழகாக அலங்கரித்து இரவு முழுவதும் கண் விழித்துக் காத்திருந்தார். நள்ளிரவிற்குப் பின் ஓர் எருமை அறையின் உள்ளே பாய்ந்து நுழைந்து அழகிய பட்டுத் துணிகளை அழுக்காக்கியதோடு தன் உடலின் மேலிருந்த சேற்றினால் அறையையே மாசுபடுத்தி அலங்கோலமாக்கியது. எருமையின் செய்கையால் கடுஞ்சினமுற்ற கோபண்ணா அதை நன்கு அடித்து வெளியேற்றினார். மறுநாள் கபீர்தாசரிடம் முந்தைய இரவில் நடந்த நிகழ்ச்சியை விவரித்தார். கபீர்தாசர் அறையில் நுழைந்த எருமை கடவுளேயன்றி வேறு யாருமில்லை என்றும் எத்தகைய விலைமதிப்பற்ற வரத்தை கோபண்ணா இழந்து விட்டார் என்றும் சுட்டிக்காட்டினார். கோபண்ணா தன் செய்கையினால் கழிவிரக்கம் கொண்டார். இந்த அறிவற்ற செயலுக்குப் பிராயச் சித்தமாகத் தினந்தோறும் பத்ராசலக் கோவிலில் முறைப்படியான தினசரிப் பணிகளைச் செய்ய வேண்டுமென்று கபீர்தாசர் கோபண்ணாவை அறிவுறுத்தினார். தன் குருவின் ஆணைப்படியே கோபண்ணா தன் மனைவியுடன் பத்ராசலத்திலேயே தங்கி கோவில்பணி செய்யத் துவங்கினார்.

இவ்விதம் கோபண்ணா கடவுள் ஈடுபாட்டில் திளைத்து அமைதியும் ஆனந்தமும் கொண்ட வாழ்வை நடத்திவந்தார். ஆனால் அவரது வருவாயோ குறைந்து கொண்டே வரத் தன் குடும்பத்தைப் பராமரிக்க ஏதாவது வேலை செய்தாக வேண்டுமென்று கட்டாயத்திற்கு உட்படுத்தப்பட்டார். ஹைதராபாத்திலிருந்த தன் உறவினர்களான அக்கண்ணா, மாடண்ணா இவர்களின் மூலமாக சமஸ்தானத்தில் ஏதாவது வேலை கிடைக்கலாம் என்ற நம்பிக்கையுடன் அவர்களைக் காணச் சென்றார். அவர் நம்பிக்கை பொய்க்கவில்லை. அரசர் தானிஷாவே மகிழ்ச்சியுடன் பத்ராசலத்தின் தாசில்தார் பதவியை கோபண்ணாவுக்கு அளித்தார். தாசில்தாராக உத்தியோக நியமன உத்தரவை வாங்கிக் கொண்டதுமே கோபண்ணா அரச மாளிகைக்குச் சென்று தன் கடமைகளை நிஜாமுக்கு முழுத்திருப்தி அளிக்குமாறும், அந்த ஊர் பொதுமக்கள் பெருமகிழ்வடையும் வண்ண மாகவும் செயலாற்றத் தொடங்கினார். வழக்குகளில் அவர் அளித்த பாரபட்சமற்ற தீர்ப்புக்களும், அரசுக்குரிய வருவாயைக் கருவூலத்தில் முறையாகச் செலுத்தி வந்த பாங்கும் தானிஷாவின் பாராட்டைப் பெற்றதோடு மக்களின் நன்மதிப்பபையும் பெற்றன. ஆயினும் கடமையில் கோபண்ணா கொண்ட ஈடுபாடு இராமபிரானிடம் அவர் கொண்ட ஆழ்ந்த பக்தியில் ஒருபோதும் குறுக்கிடவில்லை.

பத்ராசலக் கோவிலின் சிதைந்த அழிவுற்ற நிலை கோபண்ணாவின் மனதில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது. அரசின் வருமானத்தைக்கூட உபயோகித்துக் கோவிலை மறுபடியும் கட்டவேண்டுமென்று அவர் முடிவெடுத்தார். கோவிலைச் சீர்படுத்தும் ஆசையால் உந்தப்பெற்ற அவர் சிற்ப வேலைப்பாடுகளோடு அதைப் புனர் நிர்மாணம் செய்ய எட்டு இலட்சம் வராகன்கள் செலவாகும் என்று மதிப்பிட்டறிந்தார். ஆச்சரியப்படும் வகையில் அரசுக் கருவூலத்தில் தேவையான பொருளைவிட

அதிகமாகவே இருப்பதையும் கண்டறிந்தார் கோபண்ணா. நடப்பது நடக்கட்டும் என்று கோபண்ணா கருவூலத்திலிருந்த கடைசி காசுவரை கோவிலைப் புதுப்பிக்கவும், விக்கிரகங்களுக்குப் புதிய ஆபரணங்களை வாங்கவும், கும்பாபிஷேகம் மிகச்சிறப்பாக நடத்தவும் செலவிட உறுதி கொண்டார். மிக்க ஊக்கமும் ஆர்வமும் கொண்ட பணியாளரது ஒத்துழைப்பினால் கோவிலைப் புதுப்பிக்கும் வேலை குறிப்பிடத்தக்க அளவு குறைந்த காலத்திலேயே முடிந்தது. பின்னர், கோபண்ணா கோவில் கும்பாபி ஷேகத்தையும் மிக விமரிசையாக நடத்தி முடித்தார். எல்லாம் நிறைவேறிய பிறகு கருவூலம் காலியாகி விட்டதைக் கண்டார். முன்பே எதிர்பார்த்ததைப் போல அந்த வருட அரசின் வரியையும் செலுத்தமுடியாமல் போய்விட்டது. எனவே பத்ராசலத்தின் சட்ட அதிகாரத்திற்குட்பட்ட பகுதி ஏழுரை இலட்சம் வராகன்கள் நிலுவை செலுத்த வேண்டியதாக ஆயிற்று. தானிஷா உடனேயே இந்தத் தொகை செலுத்தப்பட வேண்டும் என்று ஆணையிட்டார். கோபண்ணாவின் உறவினர்கள் அமைச்சர்களாக இருந்தபோதிலும் அவர்களால் கோபண்ணாவுக்கு எந்த விதத்திலும் உதவ முடியவில்லை. சமஸ்தானத்திற்குரிய வரியைத் திருப்பி அடைக்கும் வரை கோபண்ணா கடுங்காவல் தண்டனை அனுபவிக்க வேண்டுமென்று உத்தரவிட்டார் தானிஷா. கோபண்ணா உடனேயே கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார்.

பனிரெண்டு வருடங்கள் கோபண்ணா சிறையிலிருந்தார். கொடிய சிறைக்காவலர்களால் சாட்டையால் அடிக்கப்பட்டும், உணவின்றி துன்புறுத்தப்பட்டும், மேலும் பலவகையான, சாவைத்தவிர மற்ற எல்லாவிதமான, பொறுக்கவியலாத கொடுந்துன்பங்களுக்கு உட்படுத்தப்பட்டார். இந்தச் சித்திரவதைகளையும், சிறை வாழ்வின் துன்பங்களையும் பொறுக்க முடியாமல் கோபண்ணா நஞ்சை உண்டு அழியக்

கூடிய இவ்வாழ்க்கையைத் துறக்க முடிவு செய்தார். ஒரு நாள் நஞ்சுக் கோப்பையைத் தன் அருகில் வைத்துக் கொண்டு இராமபிரானைப் பிரார்த்திக்கத் தொடங்கினார். பனிரெண்டு வருட காலமாகக் கோபண்ணா பட்ட துன்பங்களை அறிந்த இராமபிரான், லட்சுமணருடன் தானிஷாவின் தனியறைக்கு நள்ளிரவில் தாசில்தாரின் காவல் வீரர்கள் தோற்றத்தில் வந்தார். இவ்விதம் திடீரென்று அவர்கள் வந்ததைக் கண்டு வியப்படைந்த தானிஷா தன் மனைவியை அங்கிருந்து வேற்றறைக்குப் போகப் பணித்துவிட்டு, அவ்வீரர்கள் யாரென்றும் அந்த அகால வேளையில் அவர்கள் வந்ததற்குக் காரணம் என்னவென்றும் வினவினார். இராமபிரான் தாங்கள் இருவரும் பத்ராசலத்தின் தாசில்தாரின் வீரர்கள் ராம்சிங், லக்ஷ்மணசிங் என்பவர்கள் என்றும் அரசுக்குச் சேர வேண்டிய நிலுவையைச் சேர்ப்பிக்க வந்துள்ளதாயும் கூறினார்கள். இந்தத் தொகை பாக்கிக்காகவே கோபண்ணா இவ்வளவு காலமும் சிறையில் வாடினதால் உடனேயே அவரை விடுதலை செய்ய வேண்டும் என்று கோரினார்கள்.

தானிஷாவின் கேள்விகளுக்கெல்லாம் தக்க பதிலளித்த பின்னர் இராமச்சந்திர மூர்த்தி தங்க மொகராக்களை மழையெனச் சொரிந்தார். கோபண்ணா செலுத்த வேண்டிய தொகைக்கு அதிகமாகவே இருந்தது. அந்த மொகராக்களின் மதிப்பு. பாக்கியைப் பெற்றுக் கொண்டதன் அடையாளமாக ஏற்கனவேயே தயாரிக்கப் பட்ட அரசுப் பத்திரத்தைக் கொடுத்து அதில் கையெழுத்திட ஒரு பேனாவையும் பத்திரத்தில் பதிக்க அரசு முத்திரையையும் கொடுத்தார். இராமபிரான் கையெழுத்திட மை இல்லாததால் இராமபிரான் கூறியபடி தானிஷா பேனாவைத் தாம்பூலம் உமிழ்ந்த குடுவையில் நனைத்துக் கையெழுத்திட்டார். இந்தப் பத்திரத்தை தானிஷாவிடமிருந்து பெற்றுக்கொண்ட

ஸ்ரீராமர் கோபண்ணா உடனேயே விடுவிக்கப்பட வேண்டுமென்று ஆணையிட்டார். பின்னர் கையெழுத்திடப்பட்ட பத்திரத்தை சிறையிலிருந்த கோபண்ணாவிடம் கொடுத்துவிட்டு ஸ்ரீராமரும் இலட்சுமணரும் மறைந்துவிட்டனர். மறுநாள் காலையில் தானிஷா கோபண்ணாவிற்குத் தான் அளித்த துன்பங்கள் யாவற்றுக்கும் வருந்தி அவரிடம் மன்னிப்பை வேண்டி, அவரைச் சிறையிலிருந்து விடுவித்ததோடன்றி அவரை மிக்க மரியாதையுடனும் வணக்கத்துடனும் வரவேற்றார். மேலும் நள்ளிரவில் தன்னறைக்குவந்த தெய்வத் தூதுவர்களைக் காட்ட வேண்டுமென்றும் இறைஞ்சினார். பத்ராசலமக்கள் யாவரும் மகிழ கோபண்ணாவுக்கு அதே தாசில்தார் பதவி மீண்டும் அளிக்கப்பட்டது மட்டுமன்றி அவர் அப்பதவியை நிலையாக வகிக்கும் வண்ணமும் நியமனம் செய்யப்பட்டார். எனவே மிக்கப் புகழாரவாரத்துடன் கோபண்ணா பத்ராசலத்திற்குத் திரும்பி வந்து தாசில்தாராகத் தன் கடமைகளைத் ஆற்றத் தொடங்கினார்.

ஒரு நாள் கோபண்ணா கோவிலில் வழிபாடு செய்து கொண்டிருந்தபோது அங்கு குழுமியிருந்தோர் யாவரும் மகிழ ஒரு தெய்வீகக் குரல் கோபண்ணாவை "பக்த இராம தாசர்" என்று உலகறிய அழைத்து அறிவித்தது. சில காலம் மகிழ்வுடனும், அமைதியுடனும், வளமுடனும் வாழ்ந்த இந்த தாசில்தார் - மகான், பின்னர் முடிவற்ற அமைதியின் உன்னத இருப்பிடமாகிய கடவுளடியை அடைந்தார். அவருக்குப்பின், அவரது மனைவியும், நிஜாம் தானிஷாவும் இராமபிரானது ஆசியைப் பெற்றவர்களாதலால் என்றும் நிலைக்கும் சாந்தியைப் பெற்றனர்.

இராமதாசர் முற்பிறவியில் ஒரு அந்தணராக இருந்தார். அந்தப் பிறவியில் ஒரு கிளியைக் கூண்டில் அடைத்து அதை எப்போதும் வெளியே விடாது வளர்த்து வந்தார்.

அந்தக் கிளியை இராம நாமத்தை உச்சரிக்கப் பழக்கியிருந்தார். கிளியைக் கூண்டில் அடைத்தமைக்காவே இராமதாசர் இந்தப்பிறவியில் பனிரெண்டு வருடம் சிறையில் துன்புற வேண்டியிருந்தது. இராமதாசர் கபீர்தாசரிடம் சென்று தான் ஓர் இராமபக்தராக இருந்தும் ஏன் துன்பத்தை அனுபவிக்க வேண்டி வந்தது என்று வினவிய போது அவர் இராமதாசரது முற்பிறவியின் இரகசியத்தைக் கூறினார்.

## 12. யோகி வேமனா

பகவான் கிருஷ்ணர் பகவத்கீதையில் பின் வருமாறு கூறுகிறார்."பாவிகளிலெல்லாம் நீ பெரும் பாவியாக இருப்பினும் பாவங்களையெல்லாம் ஞானத் தெப்பத்தால் நீ கடந்து செல்வாய். மிகக்கொடிய பாவிகூட கடமையுணர் வுள்ளவனாக ஆகி நிலையான அமைதியைப் பெறமுடியும்". வேமனா, அருணகிரி மற்றும் புனித அகஸ்டின் இவர்களைப் பொறுத்தவரையில் இக்கூற்று மிக உண்மையானதே. இம்மூவருமே தங்கள் இளமைப்பருவத்தில் வீண் விரயமான வாழ்க்கை நடத்தி வந்தனர் எனினும் பின்னர் மிகப் புகழ் வாய்ந்த மகான்களாக ஆயினர். இவர்களது வாழ்க்கைச் சரிதங்கள் பெரும்பாவம் செய்தவர்களுக்கும் அவர்கள் தங்கள் பாவங்களை விட்டு அருந்தவசிகளாக முடியும் என்ற நம்பிக்கையையும் பெரும் ஊக்கத்தையும் அளிக்கின்றன.

கோதாவரி மாவட்டத்தில் ஒரு செல்வமிக்க குடும்பத்தில் 1820-ம் ஆண்டில் பிறந்தார் வேமனா. அவரது தமையனார் அரசர் அனுவேம ரெட்டி. வேமனா ரெட்டி சாதியைச் சேர்ந்தவர். நரசம்மா அனுவேம ரெட்டியின் மனைவி. வேமனாவின் முதல் குரு. அவள் மிக்க நற்குணமும் அன்பும் தரும சிந்தனையும் உண்மையுணர்வும் கொண்ட கற்புக்கரசி.

அவள் வேமனாவிடம் ஆழ்ந்த அன்பு கொண்டிருந்தாள். வேமனாவும் அவளைத் தன் தாயாகவே கருதினார்.

வேமனா ஒரு நாட்டியக்காரியிடம் மையல் கொண்டு தன் நேரம் முழுவதையும் அவள் வீட்டில் கழித்து வந்தார். அந்த விலைமாதின் பிடியிலிருந்து வேமனாவை விடுவித்தது நரசம்மாவே. எனவே அவள்தான் வேமனாவின் முதல் குருவாகிறாள்.

வேமனா பயனுள்ள பணியொன்றும் செய்யாது தன் காலத்தை விரயம் செய்து வந்தார். ஒரு நாள் அரசாங்க நகைக் கடைக்குச் சென்றார். அங்கே அபிராமா என்னும் ஊழியர் அரசுக்குரிய நகைகளைச் செய்து கொண்டிருந்தார். வேமனா அபிராமாவின் வேலையை மேற்பார்வையிட்டார். இவ்விதமே சில நாட்கள் அவர் மேற்பார்வையிட்டு வந்தார். நாள் முழுவதும் கடையில் இருந்து கொண்டு அபிராமா காலதாமதமாக வேலைக்கு வருவதைக் கண்டு அதற்கு விளக்கம் கேட்டார். அபிராமா பின்வருமாறு கூறினார். "பிரபுவே, காலையில் எழுந்து நீராடிக் கடவுளைப் பிரார்த்தித்து, வழிபட்டு தியானம் செய்கிறேன். எனவே நான் காலதாமதமாக வேலைக்கு வருவதைத் தயை செய்து மன்னிக்குமாறு கேட்கிறேன்". ஆனால் வேமனா, "காலதாமதத்தை எக்காரணம் கொண்டும் நான் பொறுத்துக் கொள்ள முடியாது. காலையில் உங்கள் கடமைகளைச் சீக்கிரமாகவே முடித்துவிட்டு ஆறுமணிக்குக் கடைக்கு வந்துவிடுங்கள். காலங்கழித்து வருவதை நான் இனிமேல் எந்த சந்தர்ப்பத்திலும் மன்னிக்க முடியாது" என்று பதிலளித்தார். வேமனாவின் இத்தகைய கண்டிப்பான ஆளும் முறையைப் பற்றி அறிய வந்த அரசர் மிகவும் விந்தையாக இருக்கிறது! வேமனா அபிராமா தாமதமாக வருவதைக் கண்டிக்கிறார். அதை மன்னிக்க மறுக்கிறார். ஆனால் அவரோ இரவு பகலென்றிலாது விலை மாதின்

வீட்டிலேயே காலங்கழிக்கிறார்" என்று வியந்து கூறினார். அரசனின் இந்தக் கூற்று வேமனாவின் மமதையைக் காயப்படுத்தியது. அபிராமா விடியற்காலை நேரத்தில் என்னதான் செய்கிறார் என்று கண்டுபிடிக்க விரும்பினார் வேமனா. அதோடு அபிராமா சொல்லியது பொய்யாக இருக்குமானால் அவரைத் தண்டிக்க வேண்டுமென்றும் நிச்சயித்தார்.

## சிவயோகியிடம் தீட்சை

வேமனா, விடியற்காலையில் அபிராமாவின் வீட்டிற்கருகாமையில் ஓர் இடத்தில் மறைந்திருந்து அபிராமாவின் நடமாட்டங்களையும் செய்கைகளையும் நெருக்கமாகக் கண்காணித்தார். அபிராமா அதிகாலையில் எழுந்து ஒரு மைல் தூரம் நடந்து காலைக் கடன்களை முடித்து, குளத்தில் நீராடி சூரிய பகவானுக்கு நிவேதனம் அளித்து வந்தனை செய்து பத்மாசனத்தில் அமர்ந்து ஒரு மணி நேரம் தியானம் செய்தார். பின்னர் அருகிலிருக்கும் தோட்டத்திலிருந்து மலர்கள் கொய்து ஒரு குகையில் வசித்து வந்த லம்பிகா சிவயோகி என்னும் முனிவரை வணங்கச் சென்றார். அபிராமா அம்முனிவரின் கால்களில் விழுந்து வணங்கி மலர்களை அவர் பாதங்களில் வைத்தார். அந்த யோகி அபிராமாவை நோக்கி, "என் அருமைச் சீடனே, உன் ஆழ்ந்த பக்தியையும் அன்புப் பணிவிடையையும் கண்டு மிக்க மகிழ்ச்சியடைகிறேன். நாளைக் காலை இங்கு வா. உனக்குத் தீட்சை அளிக்கிறேன். நாளை நான் இந்த அழியும் உடலைத் துறப்பேன்" என்று உரைத்தார். தன் மறைவிடத்திலிருந்து அபிராமாவுக்கும் யோகிக்கும் இடையில் நடந்த உரையாடலைக் கேட்டார் வேமனா. அபிராமாவும் தான் மறுநாள் தீட்சை பெறுவோம் என்ற மகிழ்வுடன் தன் குருவிற்கு நன்றி கூறி அவரிடம் விடை பெற்றுக் கொண்டு வந்து தன் வேலையில் ஈடுபட்டார்.

அன்று அபிராமா தாமதமாக வந்தது குறித்து வேமனா யாதொரு விளக்கமும் கேட்கவில்லை. அபிராமாவே இது குறித்துச் சிறிது வியப்படைந்தார்.

வேமனா மறுநாள் சிவயோகியிடமிருந்து தானே தீட்சை பெறவேண்டுமென்று விரும்பினார். அபிராமா தன் குருவிடம் போகாமலிருக்க ஓர் உபாயம் செய்தார். தன் அண்ணியிடம் அபிராமா மறுநாள் காலை சரியாக 6 மணிக்குக் கடைக்கு வருமாறு செய்ய வேண்டுமென்று கூறினார். அவ்விதமே வேமனாவின் அண்ணியும் அரசரிடம் 'என் காதணிகளுள் ஒன்றைத் தொலைத்து விட்டேன். நாளைக் காலையில் அபிராமாவிடம் எனக்கு ஒரு காதணி செய்து தர ஆணையிடுங்கள். எப்படியும் எனக்குக் காலை 8 மணிக்கு முன்பேயே காதணி கிடைக்க வேண்டும் என்று கூறினாள். அபிராமா ஒரு மிகச் சிக்கலான நிலையில் இருந்தார். அவர் சிவயோகியைக் காலை சந்திக்காவிடில் பல ஆண்டுகளாக அவர் தன் குருவிற்கு பக்தியுடன் செய்த பணிவிடைகளின் பலன் கிட்டாது போய்விடும். அபிராமாவின் மனதில் இரு எண்ணங்களின் கடும் போராட்டம் - அரசரின் ஆணைக்குப் பணிவதா அல்லது குருவின் ஆணைக்குப் பணிவதா என்று தீவிர சிந்தனைக்குப் பிறகு தன் பிறப்பும் தொழிலும் வகுத்துள்ள கடமையையே செய்ய வேண்டுமென்று முடிவு செய்தார். அவர் காலை 6 மணிக்கே கடைக்குச் சென்று அரசிக்குக் காதணியைச் செய்து அனுப்பினார்.

வேமனா வெகு காலையிலேயே எழுந்து முன் தினம் அபிராமா நீராடிய அதே குளத்தில் நீராடி, மலர்களைக் கொய்து கொண்டு சிவயோகியின் பாதங்களில் அவற்றை வைத்து அவரடிகளில் வீழ்ந்து வணங்கினார். சிவயோகி வேமனாவை "இங்கு ஏன் வந்தாய்?" என வினவினார். வேமனா "மதிப்பிற்குரிய குருவே! என் எஜமானர்

அபிராமா அரசரின் கட்டளைப்படி ஒரு முக்கியமான பணிக்காகக் கடையில் நிறுத்திவைக்கப்பட்டிருக்கிறார். உங்களுக்குப் பணிவிடை செய்ய என்னை அனுப்பினார்" எனப் பதிலளித்தார். சிவயோகியோ வேமனாவை அபிராமா வருகிறாரா என்று பார்க்கச் சொன்னார். வேமனாவும் சுற்றும் முற்றும் பார்ப்பதாகப் பாசாங்கு செய்துவிட்டு அபிராமா வரவில்லையென்று கூறினார். சிவயோகி சிறிது நேரம் காத்திருந்துவிட்டு மறுபடியும் அபிராமா வந்தாரா என்று பார்க்கச் சொன்னார். வேமனாவும் அதே பதிலை அளித்தார். மூன்றாம் முறையும் சிவயோகி வேமனாவை அபிராமாவைப் பார்க்குமாறும் பணிக்கவும் வேமனா முன் போலவேயே வெளியே பார்த்துவிட்டு அபிராமா வரவில்லையென்று கூறினார். சிவயோகி "அபிராமா மிகவும் அதிர்ஷ்டமற்றவன்னே! அவனுக்கு மந்திரத்தின் மறைபொருளை ஓதித் தீட்சை அளிக்க விரும்பினேன். இத்தனை வருடங்களில் ஒரு நாளும் அவன் என்னிடம் வராமலிருந்ததில்லை. இன்று தான் அவன் குறிப்பிட்ட காலத்தில் வரும் ஏற்பாட்டில் தவறியிருக்கிறான். மிகவும் புதுமையாக இருக்கிறது. விதி எவ்வளவு கொடுமையானது! இருப்பினும் நான் உனக்கு ஓர் உபதேசம் செய்கிறேன். ஏனெனில் நான் இந்த மானுடக் கூட்டை இன்று துறக்கிறேன்" என்றார். சிவயோகி வேமனாவின் காதுகளில் மந்திரத்தை உச்சரித்து நாபியில் பீஜாட்சரத்தை எழுதினார். வேமனாவின் கண்களை மூடினார். வேமனா நூறு சூரியர்களது பிரகாசத்தை ஒத்த ஒளி கக்கும் உயர் காட்சியொன்றைக் கண்டு வியப்பால் தாக்குண்டார். சிவயோகி உடனேயே தன் உயிர் மூச்சை நீத்தார். வேமனா தன் குற்ற மனப்பான்மையால் கனத்த இதயத்துடன் வீடு திரும்பினார். கடைக்குச் சென்று அபிராமாவின் முன் வீழ்ந்து அவர் கால்களைப் பற்றிக் கொண்டு தன்னை மன்னிக்குமாறு வேண்டினார்.

வேமனாவின் இந்த விந்தையான நடத்தையினால் அபிராமா வியப்பில் ஆழ்ந்தார். ஏனெனில் வேமனா என்றும் அவரிடம் விறைப்பாகவும், கர்வமுடனும், கடுமையாகவுமே நடந்து கொண்டு அவர் காலதாமதமாக வேலைக்கு வருவதற்கு விளக்கம் கேட்டுக் கொண்டுமே இருந்து வந்தவர், இப்போதோ அபிராமா "உங்களை மன்னிக்கிறேன்" என்று சொல்லும் வரையில் வேமனா அவரது கால்களை விடவில்லை. அதன் பின்னர் வேமனா அபிராமாவிடம் நடந்தனயாவையும் கூறித் தனக்கு அவர் யாதொரு நிபந்தனையும் இன்றி அளித்த மன்னிப்பிற்குத் தன் நன்றியைத் தெரிவித்தார். அழகிய தெலுங்கில் அபிராமாவின் உயரிய குண நலன்களைப் போற்றியும் அவர் விலை மதிப்பற்ற தீட்சை பெறும் வாய்ப்பை இழக்குமாறு தான் தீங்கு விளைவித்ததை ஒப்புக் கொண்டும் கவிதைகள் பாடினார். மற்றொரு கவிதையில் வேமனா தன் அண்ணி நரசம்மாவைத் தன் முதல் குருவாகவும் அபிராமாவைத் தன் இரண்டாவது குருவாகவும் சிவயோகியைத் தன் ஆத்ம குருவாகவும் குறிப்பிட்டுள்ளார்.

சிவயோகியால் தன் நாவில் பீஜாட்சரம் எழுதப்பட்ட விநாடி முதல் வேமனா ஒரு ஆத்ம உணர்வு தூண்டப்பெற்ற கவிஞனாக ஆனார். ஆன்மீக ஒளியைப் பெற்ற அவர் ஒரு துறவியாகி அழியும் புலனின்பங்களைத் துறந்தார். தன்னிச்சையாக அவர் பொழிந்த கவிதைகள் மூலம் தன் போதனைகளைச் செய்தார். தன் கவிதைகளில் அபிராமாவின் பெயரைச் சேர்த்துத் தன் நன்றியறிவை வெளிப்படுத்தினார். இவ்விதம் வேமனா தன் பாடல்கள் மூலம் அபிராமாவின் நினைவைத் தொடர்ந்து நிலை நிறுத்தியுள்ளார். தன் ஒரு கவிதையில் வேமனா இவ்விதம் சொல்கிறார்."ஐயா, நடந்து விட்ட செயலுக்காக வருந்தாதீர்கள். நான் உங்களுக்கு மிகவும் நன்றியுள்ளவனாக இருக்கிறேன். என் கவிதைகள் யாவையும்

தங்களுக்கு சமர்ப்பணம் செய்து தங்கள் பெயரை இவ்வுலகில் தொடர்ந்திருக்கச் செய்வேன். என் இதயத்தில் தங்களை என்றும் இறுத்தி வழிபடுவேன். ஆயிரக்கணக்கான கவிதைகளை இன்று நான் பாடும் தகைமை பெற்றது தங்களால் தான்! வணக்கத்திற்குரிய குருவே, நான் தங்களுக்குத் தலை வணங்குகிறேன்".

வேமனாவின் தாய் தன் மகன் மணம் புரிந்து கொள்ள வேண்டுமென்று தன்னால் இயன்ற அளவு முயற்சி செய்தார். வேமனா பிடிவாதமாக மணம் செய்து கொள்ள மறுத்துவிட்டார்.

## வேமனா புரிந்த அற்புதங்கள்

வேமனாவின் தாய் வாரணாசிக்குப் புனிதப் பயணம் மேற்கொண்டார். வேமனா ஒரு செப்புத் துண்டில் நடுவேயிட்ட துளையின் மூலம் ஒரு நூலைச் செலுத்தித் தன் தாயின் கழுத்தில், அதை அணிவித்து "அன்புள்ள தாயே! நீங்கள் உங்கள் பயணம் முடிந்து திரும்பும்போது இந்தச் செப்புத் துண்டு தங்கமாக மாறியிருந்தால் உங்கள் பாவங்கள் யாவும் கங்கையின் புனித நீரில் கழுவப்பட்டு விட்டன என்று நீங்கள் உறுதியடைந்து அமையலாம். இதுவே உங்கள் பக்திக்குள்ள பரீட்சை. உண்மையான ஈடுபாட்டுடன் இறைவனை வழிபடுங்கள்" என்று கூறினார். ஒரு வருடத்திற்குப் பிறகு வேமனாவின் தாய் ஊர் திரும்பினார். வேமனா ஓடோடியும் சென்று தன் தாயின் கால்களில் வீழ்ந்து வணங்கி "தாயே, தங்கக் காசைக் கொடுங்கள். செப்புத்தகடு தங்கமாக மாறிவிட்டதா?" என வினவினார். வேமனாவின் தாய் தன் கழுத்தைச் சுற்றி நோக்கினார். செப்புத் தகடு செப்பாகவே இருந்தது. "தாயே, நீங்கள் மிகுந்த பிரயாசைப்பட்டு வாரணாசிக்குப் புனிதப் பயணம் செய்து விட்டு வந்துள்ளீர்கள். புனித கங்கையில் நீராடினீர்கள். இந்தச் சிறிய செப்புத்தகட்டைப்

பொன்னாக்கும் அளவுக்கு உங்களுக்குப் புனிதப்பயணத்திலோ அல்லது கங்கையில் நீராடுதலிலோ ஆழ்ந்த நம்பிக்கையில்லையே! உங்களுக்கு உண்மையான பக்தி இல்லை என்பதையே இது தெளிவாகக் காட்டுகிறது. உங்களுக்கு ஆழ்ந்த உண்மையான இறையன்பு இருக்குமானால் எல்லா இடங்களுமே உங்களுக்கு வாரணாசி ஆகிவிடும். உண்மையான பக்தி இல்லையெனில் இவ்வளவு துன்பங்களுடன் சென்ற புனிதப் பயணம் என்ன பலன் உடையது?" என்றார் வேமனா. தாயார் "என் அன்புக்குரிய வேமனா, செம்பு எவ்வாறு தங்கமாக மாறும்?" என்று வினவினார். வேமனாவோ"அன்புத்தாயே, எப்படி உண்மையான நம்பிக்கை இதைச் சாதிக்கும் என்று காட்டுகிறேன் பாருங்கள்" என்று கூறித் தன் தாயிடமிருந்து செப்புத்தகட்டை வாங்கி அதன் மீது தண்ணீர் ஊற்றினார். உடனேயே அது செம்பொன்னாக மாறியது. தன் தாயின் கால்களில் வேமனா அதை வைக்க அவர் தாயும் அங்கு கூடியிருந்தோரும் வியப்பில் ஆழ்ந்தனர்.

வேமனா தன் தமையனாகிய அரசரிடம் சென்று "அன்புள்ள சகோதரரே, இந்தச் செப்புத்தகட்டை ஏற்றுக் கொண்டு அதற்குப் பதிலாக எனக்கு ஒரு ஏக்கர் நிலத்தைக் கொடுங்கள். நான் அந்நிலத்தை உழுது பயிரிட விரும்புகிறேன்" என்றார். இவ்வுலக வாழ்வில் ஈடுபட்ட சாதாரண மக்கள் சாதுக்கள், யோகிகள் போன்றோரின் எளிதில் விளங்காத அதிசயமான செய்கைகளைப் புரிந்து கொள்ள முடியாது. அரசர் வாய்விட்டு நகைத்து "வேமனா, ஒரு விவசாயி ஆக நீ விடும் கோரிக்கை வேடிக்கையாக உள்ளது. நீ நிலத்திற்குக் கொடுக்கும் விலை அதைவிட வேடிக்கையாக உள்ளது" என்று கூறினார். அரசி நரசம்மா, தன் கணவரிடம் "வேமனாவை சாதாரணமானவராக எண்ணிவிடாதீர்கள். அவர் சிறந்த யோகியும் பக்தரும் ஆவார். அவர் செய்கைகள் எளிதில் புரிந்து கொள்ளக்

கூடியவை அல்ல. அவர் கொடுக்கும் விலையைப் பெற்றுக் கொண்டு நிலத்தை அவருக்குக் கொடுங்கள்" என்று வேண்டினாள். அரசரும் அதை ஏற்றுக்கொண்டார். வேமனாவுக்கு ஓர் ஏக்கர் நிலம் கொடுக்கப்பட்டது.

வேமனா, இளைத்த, அரைப்பட்டினியான கிழட்டுக் காளைகள் ஒரு ஜோடி வாங்கி அவற்றை ஏரில் பூட்டி நிலத்தை உழத்தொடங்கினார். இந்த அனுபவமற்ற உழவனின் புதுமையான செயலைக் கண்டு மக்கள் வாய்விட்டுச் சிரித்தார்கள். வேமனா கசப்பான முலாம்பழ விதைகளை ஊன்றினார். நாளடைவில் மிக அபரிமிதமான முலாம்பழ விளைச்சல் உண்டானது.

ஒரு நாள் ஒரு கிழவி வேமனாவிடம் வந்து "நானும் என் பேரக்குழந்தைகளும் உணவின்றி வருந்துகிறோம். எனக்கு ஒரு வேலை கொடுங்கள்." என்று கேட்டார். வேமனா அவளிடம் "இந்த முலாம் பழங்களைப் பறித்துக் குவியலாக சேகரித்து வையுங்கள். இரவு உங்களுக்கு இதற்கான கூலியைக் கொடுக்கிறேன்" என்றார். அந்தக் கிழவியும் அதற்கு ஒப்புக் கொண்டு ஒரு பெரிய குவியல் பழங்களைச் சேகரித்தாள். வேமனா அன்றைய வேலைக்கான கூலியாக ஒரு பழத்தை அவளுக்கு அளித்தார். அந்தக் கிழவி மிகவும் மனம் உடைந்தாள். "எவ்விதம் என் குழந்தைகளுக்கு இன்று உணவளிப்பேன்! அவர்கள் உணவின்றி வாடுகின்றனர். இந்த ஒரு பழத்தை வைத்துக் கொண்டு நான் என் செய்வேன்!' என்று வருந்தினாள். வேதனை நிரம்பிய உள்ளத்துடன் வீடு திரும்பினாள். அவளுடைய பேரக் குழந்தைகள் ஓடிவந்து "பாட்டி இன்று எவ்வளவு கூலி கிடைத்தது?' என்று வினவினார்கள். அவளும் நடந்த கதையெல்லாம் சொல்லி பழத்தைத் தன் பேரனிடம் கொடுத்தாள். சிறுவன் கடுங்கோபம் அடைந்தான். "என் பாட்டி இவ்வளவு வயதாகியும் கூடக் கடுமையாக

உழைக்கிறாள். அவளது கடும் உழைப்புக்கு இதுதானா பரிசு?'' என்று சினந்து அந்தப் பழத்தைத் தரையில் வீசி எறிந்தான். அந்தப் பழத்திலிருந்து பளபளக்கும் பொன் விதைகள் தரையில் சிதறி அவன் கண்களைக் கூசச் செய்ய அவன் மயங்கி விழுந்தான். சிறிது நேரத்திற்குப் பிறகு அவன் தன் சுய நினைவை அடைந்தான். அந்தக் கிழவி சிதறியிருந்த விதைகளைத் திரட்டி ஒரு கடைக்காரரிடம் கொடுத்தாள். அவர் அவளுக்கு அரிசி, பருப்பு, நெய் போன்ற பண்டங்களைக் கொடுக்க அவற்றை எடுத்துக் கொண்டு வீடு திரும்பினாள். குழந்தைகளும் நிறைய உணவுப் பண்டங்களைக் கண்டு மகிழ்ச்சியடைந்தனர். அந்தக் கிழவியும், அவளது பேரக்குழந்தைகளும் மற்றும் வேறு வேலையாட்களும் வேமனாவின் வயலில் மறுநாள் வேலை செய்தனர். ஒவ்வொருவருக்கும் ஒரு பழம் கூலியாக வேமனா கொடுத்தார். சில வேலையாட்கள் சில பழங்களைத் திருடிச் சென்றனர். ஆனால் வேமனா கொடுத்த பழங்களில் மட்டுமே பொன் விதைகள் இருந்தன. திருடிச் செல்லப்பட்ட பழங்களில் கசப்பு விதைகள் மட்டுமே இருந்தன.

வேமனா அரசரிடம் சென்று தன் நிலத்தையும் அங்கு விளையும் பழங்களையும் காண வருமாறு வேண்டினார். அரசர் வேமனாவின் இந்த வேண்டுகோளைக் கேட்டுப் பெரிதும் நகைத்தார். "உன் வேலையைப் பார்த்துக் கொண்டு செல். உன் பழ விளைச்சலை நீயே அனுபவித்து மகிழ்'' என்று கூறிவிட்டார். அதன் பேரில் வேமனா தன் அண்ணியிடம் சென்று தன் தமையனார் தன் நிலத்தைக் காணத் தான் விடுத்த அழைப்பை மறுத்துவிட்டதாகவும் அதனால் தான் மிகவும் ஏமாற்றமடைந்ததாகவும் கூறினார். உடனேயே நரசம்மா தன் கணவரிடம் சென்று "தங்கள் சகோதரர் உளமார உங்களை அழைக்கும்போது அவரது அழைப்பை மறுப்பது சரியன்று. அவர் மிகவும்

மனமுடைந்து போயிருக்கிறார். தயை செய்து அவருடைய நிலத்தைப் பார்வையிட்டு அவரைத் திருப்தி செய்யுங்கள். அவர் ஒரு யோகி. ஒரு பக்தர். அதோடு ஒரு கவிஞர் என்றாள். அரசர் வேமனாவின் நிலத்திற்குச் சென்று அங்குள்ள பயிர்களைப் பார்வையிட ஒப்புக்கொண்டார். அவரது அமைச்சர்களும், அரசியும் கூட, உடன் சென்றனர். வேமனா இரண்டு பெரிய பழக்குவியல்களை அரசருக்குக் காட்டித் தன் கையால் அவற்றைத் தொட்டார். என்ன அதிசயம்! எல்லாப் பழங்களும் பொற்கனிகளாக மாறிவிட்டன. யாவரும் வியப்பில் ஆழ்ந்தனர்.

ஒரு முறை வேமனா அரசமாளிகையினுள் அரசி அமர்ந்திருந்த இடத்திற்குச் சென்றுத் தன் நகத்தால் அரசியின் மார்பில் கீறினார். உடனேயே இரத்தம் கொட்டத் தொடங்கியது. ஆனால் அரசி வேமனாவின் இந்த ஆச்சரியகரமான செய்கையில் யாதொரு தவறும் காணவில்லை. வேமனா ஒரு மிகப்பெரிய யோகி என்பதை அவள் அறிவாளாதலால் வேமனாவின் செய்கையில் ஏதோ ஒரு நோக்கம் இருக்கவேண்டும் என்று நினைத்தாள். ஆனால் இந்தச் செய்தி அங்கிருந்த பணிப்பெண்கள் மூலம் அரசரின் காதுகளை எட்டியது. அரசர் அரசியிடம் இந்த நிகழ்ச்சிக்குத் தக்க விளக்கம் கூறுமாறு ஆணையிட்டார். அரசியும் தக்க பதிலளித்து அரசரின் சந்தேகத்தை நீக்கினாள். அன்று மாலை அரசி அரச மாளிகைப் பூங்காவிற்குச் சென்ற போது ஒரு நாகம் அவளைத் தீண்ட அவள் மயங்கி வீழ்ந்தாள். பணி மகளிர் ஓடோடியும் அரசரிடம் செய்தியைச் சொல்ல அரசர் அரசி மயங்கிக் கிடந்த இடத்திற்கு வந்தார். அரச மருத்துவர் வந்து நஞ்சு முறிவு மருந்து கொடுக்க முயன்றார். ஆனால் நஞ்சு முழுவதும் அரசியின் மார்பில் வேமனா கீறிய கீறல் மூலமாக வெளிவந்துவிட அரசி தன் சுய நினைவடைந்தாள். தன் உயிரைக் காத்ததற்கு வேமனாவிற்கு நன்றி கூறினாள்.

காலையில் நடந்த நிகழ்ச்சியின் புதிர் அரசனுக்கும் அரசிக்கும் விளங்கியது. வேமனா கூறிய முன்னோக்கும் எதிர்கால அறிவும் கொண்டவர் என்று அவர்கள் கூறினர்.

வேமனாவின் தாய் "அன்பு மகனே, நீ சமய நம்பிக்கை உள்ளவனாக இருக்கவேண்டும். அதிகாலையில் எழுந்து நீராடி உன் தமையன் செய்வது போல இறைவனை வழிபட வேண்டும்" என்று கூறினாள். வேமனா, "என் வணக்கத்திற் குரிய தாயே, என் தமையனார் உடல் அழுக்கைக் கழுவுவதற்காக நீராடுகிறார். கடவுளை வழிபட்டு ஜபம் செய்வதோ மேலும் செல்வத்தை அடைய அவருக்கு உண்மையான நம்பிக்கையோ, பக்தியோ இல்லை. என்னுடன் குளத்திற்கு வாருங்கள். என் நீராடல் எப்படிப்பட்டது என்று காட்டுகிறேன்" என்று கூறித் தன் தாயைக் குளத்திற்குக் கூட்டிச் சென்றார். குளத்திற்குள் மூழ்கித் தன் வயிற்றைக் கிழித்து உள்ளேயிருந்த அழுக்குகளை அகற்றினார். குளத்திலிருந்து வெளி வந்தவுடன் அவர் உடல் பழைய நிலையை அடைந்தது. அதைக் கண்ட அவர் தாயார் வியப்பில் மூழ்கினார். அதன் பின்னர் வேமனா கண் இமைக்கும் நேரத்தில் மறைந்துவிட்டார். தன் மகன் மறைந்துவிட்டதால் துன்புற்ற இதயத்தோடு வீடு திரும்பினாள் வேமனாவின் தாய். ஆனால் வீட்டில் வேமனா இருந்ததைக் கண்டு மிக்க மகிழ்ச்சியடைந்தாள்.

வேமனாவின் தங்கை திருமணத்திற்குப் பின் தன் புகுந்த வீடு செல்லுமுன் தன் தமையனை வணங்கி அவர் ஆசியைப் பெற்றுப் போக வந்தாள். வேமனாவின் கால்களில் வீழ்ந்து வணங்கிய அவளுக்கு வேமனா சில அழுகிய பழங்களைக் கொடுத்தார். ஆனால் அவை இரத்தினங்களாகவும் வைரங்களாகவும் மாறிவிட்டன.

## இறுதி நாட்கள்

வேமனா தேசசஞ்சாரம் செய்யும் ஞானியானார். ஆந்திரப் பிரதேசம் முழுவதும் பிரயாணம் செய்து தெலுங்குக் கவிதைகளைப் பரப்பினார். அவரது கவிதைகள் நாலாயிரம் தொகுக்கப்பட்டுள்ளன. அத்வைத வேதாந்தச் சிந்தனைகளின் ஓட்டம் அவர் கவிதைப் பெருக்கில் காணப்படுகிறது. அவரது கவிதைகள் ஒன்றிற்கு மேற்பட்ட பொருளை உடையன. எளிய சொல்லமைப்பு, கருத்துத் தெளிவு, தூய நடை, கூரிய நோக்கு, ஆழ்ந்த, நுட்பமான கருத்துக்கள், ஆழ ஊடுருவி அறியும் தன்மை - இவற்றுக்கு வேமனாவின் கவிதைகளை விஞ்சத் தெலுங்கு இலக்கியத்தில் வேறெதுவுமில்லை. தெலுங்குப் பிரதேசத்தில் தெலுங்கு பேசப்படும் வரையில் வேமனாவின் புகழ் நிலைக்கும்.

தன் சுற்றுப் பிரயாணத்தை முடித்துவிட்டு வேமனா கடாருப்பள்ளியில் குடியேறித் தன் சீடர்களுக்கும் தன்னைப் பின்பற்றுபவர்களுக்கும் அறிவுரைகள் வழங்கினார். இங்கு அவர் மகா சமாதிநிலையை அடைந்தார். அவரது உடல் புதைக்கப்பட்ட இடத்தில் அவரது சீடர்கள் ஒரு நினைவுச் சின்னக் கட்டிடத்தை எழுப்பினார்கள். அந்த கிராமத்தில் வேமனாவின் நினைவு நாள் வெகு கோலாகலமாக இன்றும் கொண்டாடப்படுகிறது. சமாதியின் அருகில் சில அற்புதங்கள் இன்றும் நிகழ்கின்றன. ஒருமுறை வேமனாவின் சமாதியின் மீது இடி விழுந்தது. ஆனால் அக்கட்டிடத்தில் ஒரு வெடிப்புக் கூட ஏற்படவில்லை. வேமனா தன் சமாதியிலிருந்து பனிரெண்டு வயது பாலகனாகக் கையில் இடி மின்னல் தாங்கி வெளிவந்தார். அவரது சீடர்களுள் ஒருவர் யோகி வேமனாவைப் போற்றி வடமொழியில் நூறு ஈரடிச் செய்யுட்களாக 'சத-ஸ்தோத்திரம்' பாடினார். பின் வேமனா தன் சமாதியினுள் மறைந்தார்.

ஓர் ஆச்சரியகரமான யோகி; ஒரு சிறந்த பக்தர். ஓர் அருள்பெற்ற தத்துவ ஞானியான கவிஞர் வேமனாவின் புகழ் ஓங்குக! அவர் ஆசிகள் நம் யாவர்க்கும் கிட்டுவதாக!"

# 13. ஜய தேவர்

"வானம் மேகம் சூழ்ந்து இருண்டுள்ளது
காடும் வானை ஒத்துள்ளது,கரிய
செழித்து வளைந்த தாமலா மரக்கிளைகளால் சூழ்ந்து
ஓ ராதா, ராதா, இட்டுச் செல்வாய்
உன் பொன் மாளிகைக்கே"

வாழ்வின் ஆழ்நடுநிசியில் துடிக்கும் இந்த உயிரை என வேண்டினார் நாரதர். ராதாவின் ஆத்மா வழிகாட்ட கண்ணனின் பாதங்கள் பாதையை சரிவரக் கண்டு கொண்டன. அங்கே, உயரிய இதயங்கள் யாவும் பெறும் பேரானந்தத்தில் அன்பின் தெய்வீக இன்பத்தைச் சுவைக்கின்றனர் இருவரும். இவை, வடமொழிக் கவிதை கீதகோவிந்தத்தின், எட்வின் ஆனலடால் செய்யப்பட்ட ஆங்கில மொழி பெயர்ப்பின் முதல் வரிகளின் தமிழாக்கம். கீத கோவிந்தத்தின் கருப்பொருள் ராதை-கண்ணனின் தெய்வீகக் காதல். இதன் ஆசிரியர் ஜயதேவர். ஒரு புகழ்மிக்க பக்தர். 500 வருடங்களுக்கு முன் ஒரிஸா மாநிலத்தின் புனிதத்தலமாகிய பூரி-ஜகந்நாத் அருகேயுள்ள வில்வமரங்கள் என அழைக்கப்படும் கிராமத்தில் வசித்து வந்தவர். கீத கோவிந்தம் ஜயதேவரின் மிகப் போற்றப்பட்ட காவியம்.

## பிறப்பு

ஜயதேவரின் தந்தை நாராயண சாஸ்திரிகள் ஒரு கடவுள் பக்தியுள்ள அந்தணர். ஜயதேவரின் தாய் கமலாபாய். அவரும் இறைபக்தியும் ஈடுபாடும் உள்ளவர். சாஸ்திரிகளுக்கும் அவர் மனைவிக்கும் அனேக

வருடங்களாக குழந்தை இல்லாமல் இருந்தது. சாஸ்திரியாருக்குக் குழந்தை வேண்டுமென்ற ஆசை இல்லை. ஆனால் கமலாபாய் தனக்கு ஒரு மகன் வேண்டுமென்ற இரகசியமான ஆசையை வளர்த்து வந்தாள். இதை அவள் தன் கணவரிடம் தெரியப்படுத்தியதில்லை. இறைவனிடம் தனக்கு ஓர் அழகிய நற்குணமுள்ள ஆண் குழந்தை கிடைக்கப் பெறவேண்டும் என்று இடையறாது இறைவனை வேண்டி வந்தாள். பிறரால் தான் ஒரு மலடி என்று கருதப்படுவதற்கு மிகவும் வெட்கமடைந்தாள்.

ஒரு நாள் சாஸ்திரிகள், இறைவன் அவர் எதிர் வந்து அவரது மனைவியின் பிரார்த்தனை நிறைவேறும் என்றும் விரைவிலேயே அவருக்கு ஒரு சிறப்பு மிக்க மகன் பிறப்பான் என்றும் கூறுவதாகக் கனவு கண்டார். சாஸ்திரியார் விழித்தெழுந்து இந்த இன்பக் கனவைத் தன் மனைவியிடம் தெரிவித்தார். குழந்தை வரம் கேட்டு கடவுளிடம் ஏதாவது பிரார்த்தனை செய்தாளா என்று தன் மனைவியிடம் வினவினார். கமலாபாய் தான் அவ்விதம் கடவுளை வேண்டியதாக ஒப்புக்கொண்டாள். நாராயண சாஸ்திரிகள் தன் தவமும் கடவுள் ஈடுபாடும் இந்த சுயநலமிக்க உள் எண்ணத்தால் வீணாயின என்று ஆழ்ந்த வருத்தமடைந்தார். தன் மனைவியிடம் "அறிவற்ற பெண்ணே ! ஒரு மகனை வேண்டி நீ கடவுளை வழிபட்டி ருக்கக் கூடாது. ஆத்மாவின் எல்லையற்ற ஆனந்தத்திற் காகவே கடவுளை வழிபட வேண்டும். நீ உன்னை அழித்துக் கொண்டதோடன்றி என்னையும் அழித்து விட்டாய்" என்று மிகவும் சினந்து கூறினார். அந்தக் கணத்திலிருந்து அவர் தன் மனைவியிடம் பேசுவதையே நிறுத்திக் கொண்டார். அவர் மனைவி தன்னை மன்னிக்குமாறு பன்முறை வேண்டியும் பயனில்லை. அவ்விருவரும் ஓரிரு நாட்களுக்கு உண்ணா விரதமும் மேற்கொண்டார்கள்.

தூய பக்திமானான ஓர் அந்தணர் அவர் வீட்டிற்கு வந்து அவர்களது துயரத்திற்குக் காரணம் என்ன என்று வினவி அவர்கள் இருவரையும் சமாதானப்படுத்தி ஒருங்கிணைத்து வைத்தார். அவர்கள் ஒரு நற்குணமிக்க மகனைப் பெற்று மகிழ வேண்டுமென்பது கடவுள் சித்தமென்றும் அக்குழந்தை பிற்காலத்தில் உயரிய, பெயர் பெற்ற மகானாவான் என்றும் கூறினார். கடவுளே மனித உருவில் வந்து இவ்விதம் அருளியதாக நினைத்தார் நாராயண சாஸ்திரிகள். சில மாதங்களுக்குப் பிறகு கமலாபாய்க்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அவர்தான் ஜயதேவர்.

பாலப் பருவத்திலேயே ஜயதேவர் கடவுளிடம் மிக்க ஈடுபாடு கொண்டவராக இருந்தார். அவர் ஐந்து வயது சிறுவனாக இருக்கும் போது அவருக்கு உபநயனம் செய்விக்கப்பட்டது. புனிதமான வேத நூல்களைக் கற்றார். அவருக்கு மிகவும் பழமையும் மரபு சார்ந்ததுமான கல்வி அளிக்கப்பட்டது. நாராயண சாஸ்திரி தன் மனைவியுடன் கானகம் சென்று வானப்பிரஸ்த வாழ்வை மேற்கொண்டார்.

## ஜயதேவரின் திருமணம்

ஸ்ரீ ஜதந்நாதரிடம் பெரும் பக்தி கொண்ட தேவசர்மா என்னும் ஓர் அந்தணர் பூரி-ஜகந்நாத்தில் வாழ்ந்து வந்தார். அவருக்குப் பல வருடங்களாகக் குழந்தைகள் இல்லை. ஒரு நாள் அவர் "இறைவா, உன்னருளால் எனக்குக் குழந்தைகள் பிறந்தால் என் முதற்குழந்தையை உனக்கு அளித்து விடுவேன். இது என் உண்மையான, மனதாரச்செய்யும் பிரார்த்தனை. என் இந்த விருப்பத்தை நிறைவேற்றுவாய்" என்று ஜகந்நாதரைப் பிரார்த்தனை செய்தவாறே வீடு திரும்பினார்.

சிறிது காலத்திற்குப் பிறகு அந்தப் பக்திமானான தேவசர்மாவுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. பின்னர் அவருக்குப் புத்தி கூர்மையும் நற்குணமுடைய மகன்கள்

பிறந்தனர். தன் பெண் குழந்தையை எடுத்துக் கொண்டு ஜகந்நாதர் சன்னதியில் தன் மனைவி உடனிருக்க "பிரபோ, உன் அருளால் என்விருப்பம் பூர்த்தி அடைந்து. என் வாக்குறுதிப்படி என் முதல் குழந்தையை உனக்கு அர்ப்பணிக்கிறேன் ஏற்றுக்கொள்வாய்" என இறைஞ்சினார். பின்னர் அங்கிருந்த பக்தர்களிடமும் அர்ச்சகரிடமும் தன் பிரார்த்தனை, தன் வாக்குறுதி இவை பற்றிய முன் கதையெல்லாம் விவரித்துக் கூறித் தன் வீடு திரும்பினார்.

அன்றிரவு இறைவன் தேவசர்மாவின் கனவில் தோன்றி அவரிடம் "ஓ தேவசர்மா, உன் செய்கை குறித்து நான் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். உன் மகளை நான் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் உன் மகளை என் மனதிற்குகந்த பக்தன் ஜயதேவருக்கு அளித்துவிடு" என்று ஆணையிட்டார். மற்ற பக்தர்களுக்கும் அதே கனவு தோன்றியது.

ஜயதேவர் அப்போது கிராமத்திற்கு வெளியே ஓர் இலைகளால் வேயப்பட்ட குடிலில் வசித்து வந்தார். அவர் இடையறாது ஸ்ரீ ஜகந்நாதரை தியானம் செய்து வந்தார். அவர் முகத்தின் ஒளி, அவர் மிக வறுமை நிலையில் இருந்தும் மிக்க மகிழ்ச்சியுடன் இருந்து வந்தார் என்பதைத் தெளிவாகக் காட்டியது. சர்மா அங்கு வந்து ஜயதேவரின் காள்களில் வீழ்ந்து "ஜகந்நாதப் பிரபுவின் ஆணைப்படி என்மகள் பத்மாவதியை உங்களிடம் விட்டுச் செல்ல வந்திருக்கிறேன். தயவு செய்து அவளை ஏற்றுக் கொள்ளுங்கள்" என்று வேண்டினார். ஜயதேவர் இதை மறுத்துத் தான் மிகவும் ஏழை என்றும் கன்னிகை தானத்தை ஏற்றுக் கொள்ளத் தகுதியற்றவர் என்றும் எடுத்துக் கூறினார். தேவசர்மா மிகவும் முயன்றும் ஜயதேவர் அபபெண்ணை ஏற்றுக் கொள்ளவில்லை. தேவசர்மா கோவிலில் இருந்த மற்றபக்தர்களையும் தன் கூற்று உண்மையானதே என நிரூபிக்க உடன் கூட்டி வந்தார்.

பின்னர் தேவ சர்மா தன் மகளை அங்கே நிறுத்தி விட்டு" என் அன்பு மகளே, இன்றிலிருந்து இவரே உன் கணவர். தன் கணவரின் சேவையில் தன்னை ஐக்கியப் படுத்திக் கொள்ளும் பெண் அழிவில்லாத இன்பம் பெறுவாள் " என்று கூறித் தன் வீடு திரும்பினார்.

அப்பெண் ஜயதேவர் அருகில் வெகு நேரமாக நின்று கொண்டிருந்தாள். ஜயதேவர் அப்பெண்ணிடம் "உன் பெற்றோர் உன்னை இங்கே விட்டுவிட்டுப். போய் விட்டனர். இக்கொடிய கானகத்தில் நீ எவ்வாறு வாழ்வாய்?" என வினவினார். அதற்குப் பத்மாவதி "என் பிரபுவே, தாங்கள் என்ன கூறுகிறீர்கள்? என் தந்தை என்னைத் தங்களுக்கு அளித்து விட்டார். நான் உங்களுக்குச் சொந்தமானவள். தாங்கள் எப்போதும் என்னுடன் இருப்பதால் நான் தனியாகவே இல்லை"என்று பதிலிறுத்தாள். இதைக்கேட்ட ஜயதேவர் "இவள் கூறுவது உண்மையே. இவளைக் கைவிடுவது பெரும் பாவம். எனவே நான் இவள் பெற்றோரிடம் செல்லத்தான் வேண்டும்" என்று நினைத்தார். இவ்விதம் முடிவுசெய்த ஜயதேவர் பிராமண முறைப்படித் திருமணச் சடங்குகள் நிகழ்த்த பத்மாவதியை அவள் பெற்றோர் இல்லத்திற்குத் தன்னுடன் வருமாறு அழைத்தார். "என் தந்தை தங்கள் கட்டளைக்குக் கீழ்ப்படிய வேண்டுமென்று எனக்கு உத்தரவிட்டுள்ளார். எனவே தங்கள் விருப்பத்தின்படி நடப்பது எனக்குக் கிடைத்த வரம்" எனக் கூறி அவருடன் சென்றாள்.

அதன் பேரில் ஜயதேவர் பத்மாவதியை மணந்தார். ஏழைகளுக்கு உணவளித்து அந்தணர்களுக்குப் பரிசளித்து. மிகவும் உதாரகுணமுள்ளவராக இருந்தார் ஜயதேவர். ஒரு அதிதிக்காவது உணவளிக்காது தான் உணவருந்தார். வெகு விரைவிலேயே நாராயண சாஸ்திரியார் விட்டுச் சென்ற சிறிதளவு பொருளும் கரைந்துவிட்டது. பிறகு ஜயதேவர்

அந்தணர் மரபுப்படி பிட்சை பெற்று வாழ்ந்து வந்தார். இருப்பினும் ஜயதேவரும் பத்மாவதியும் விருந்தினரை ஓம்பி மகிழ்ச்சியுடன் வாழ்க்கை நடத்தினர். அவர்கள் தூய அன்பும் பக்தியும் நிரம்பின இதயத்தவர். எல்லோரும் அவர்களுக்கு மிக்க மரியாதை அளித்தனர்.

## கீத கோவிந்தம்

ராதை-கண்ணனின் மேன்மையான தெய்வீகக் காதலைப் போற்றும் கீத கோவிந்தம் ஜயதேவரின் மிக உயரிய அழியாப் புகழ்பெற்ற காவியம். அந்தச்சிறு பில்வகம் என்னும் கிராமத்தில் யாவரும் இந்த அஷ்டகங்களை ஓதிவந்தனர். ஸ்ரீஜகந்நாதர் திருச்சன்னதியில் வருடாந்திர திருவிழாவின் போது அஷ்டகங்கள் பாடப்பட்டன. கீதகோவிந்தத்தின் அற்புதமான இசையும் கவிதை நயமும் மக்கள் மனதைத்தொட அவர்கள் அக்காவியத்தைப் பெரிதும் போற்றினர், ஜயதேவரின் புகழ் எங்கும் பரவியது.

ஜயதேவர் இந்தக் காவியத்தைப் புனைந்து கொண்டிருந்த போது ஒரு பாடலின் இடையில் ஒரு பொருத்தமான வார்த்தை கிட்டாமற்போக, எழுத்துப் பிரதியைத் தன் அறையில் வைத்துவிட்டு நீராடச் சென்றார்.

கண்ணபிரானே ஜயதேவரின் உருக்கொண்டு பத்மாவதியிடம் "அன்பே, என் கையெழுத்துப் பிரதியைக் கொண்டுவா" என்று கேட்டார். பத்மாவதியும் இறைவனைத் தன் கணவர் என்றே நினைத்து எழுத்துப் பிரதியைக் கொடுக்கக் கண்ணபிரான் தன் திருக்கைகளால் அந்த ஈரடிப்பாடலை எழுதிவிட்டு விரைவில் நதியில் நீராடச் சென்றார். சிறிது நேரம் கழித்து ஜயதேவர் நீராடிவிட்டுத் திரும்பினார். தான் இயற்றியிருந்த பாடலைக் குறிக்க எழுத்துப் பிரதியை எடுத்தார். அந்தப்பாடல் யாரோ ஒருவரால் எழுதி முடிக்கப் பட்டிருந்ததைக்கண்டு

பேராச்சிரியம் அடைந்தார். தன் மனைவியை அழைத்து "பத்மாவதி, இந்தப்பாடலை எழுதியது யார்? எத்தனை அழகாக அமைந்திருக்கிறது. என்னால் இதுபோல் எழுத முடியாதே," என்று கூறினார். பத்மாவதியோ "தாங்கள் தானே திடீரென்று வந்து இதை எழுதிவிட்டு நீராடச் சென்றீர்கள்," என்று கூறினாள். ஜயதேவர் திகைப்பும் வியப்பும் அடைந்தார். ஜகந்நாதப் பிரபு அவரது கனவில் தோன்றி "ஜயதேவா, நானே அந்த ஈரடிப்பாடலை முடித்தேன்" என்று கூறியருள ஜயதேவர் பெரிதும் உவகை யடைந்தார்.

அந்நாட்டின் அரசர் கீதகோவிந்தத்தின் மேன்மையையும் புகழையும் கேள்விப்பட்டுப் பொறாமையுற்றார். அவரே ஒரு கவியாதலால் மற்றொரு கீதகோவிந்தம் எழுதினார்.

ஒரு நாள் ஜகந்நாதரின் ஆலயத்திற்கு அரசர் வந்தபோது ஜயதேவர் தன் கீதகோவிந்தப்பாடல்களைப் பாடியும் ஆடியும் வழிபட்டதைக் கண்ணுற்றார். "என் கீதகோ விந்தத்தை ஏன் பாடவில்லை? என்று கேட்டார். அதற்கு ஜயதேவர்" எம்பிரான் என்னுடைய பாடல்களைக் கேட்டு மகிழ்வது போல உங்களுடைய பாடல்களுக்கு மகிழவில்லையே! வேண்டுமானால் இதை இப்போதே பரிசோதித்துப் பார்ப்போம்" என்றார். உடனேயே அரசர் தன்னுடைய நூலையும் ஜயதேவருடைய கீதகோவிந்தத் தையும் இறைவன் முன் வைக்குமாறு பணித்தார். "பிரபுவே, எந்நூல்மேலானதும் தங்களுக்கு உகந்ததுமாக இருக்கிறதோ அதை மேலே வைப்பீர்"என வேண்டினார். கதவைத் தாளிட்டு விட்டு யாவரும் வெளியே வந்தனர். சிறிது நேரத்திற்குப் பிறகு உள்ளே சென்றனர். அரசர்தான் முதலில் கதவைத் திறந்தார். ஜயதேவரின் நூல் தன் நூலுக்கு மேல் இருப்பதைக் கண்டார்.

இதனால் மிகவும் மனம் நொந்த அரசர் ஊணும் நீரும் விட்டொழித்தார். அவருடைய கனவில் ஸ்ரீ ஜகந்நாதர் காட்சி தந்து ஏன் வீணே இவ்வாறு வருந்துகிறாய்? கீதகோவிந்தத்தைவிட எனக்கு மனதிற்கு இனியது வேறெதுவுமில்லை. உன் நூல் எனக்கு மகிழ்வானதே, எனினும் ஜயதேவரின் கீதகோவிந்தம் உன் காவியத்தை விடச் சிறந்தது என ஒப்புக்கொண்டு அதை நாடெங்கும் பரப்புவாய் "எனப் பணித்தார். கண் விழித்த அரசர் மீண்டும் மன வலிமை பெற்று ஜயதேவரின் பரம பக்தரானார். அவரது கீதகோவிந்தத்தைத் தானே நன்கு பயின்று நாடெங்கும் அதன் மேன்மையைப் பரப்பலானார்.

ஒரு பெண் காட்டில் கீதகோவிந்தப் பாடல்களைப் பாடிக்கொண்டே விற்பதற்காக பழங்களைச் சேகரித்துக் கொண்டிருந்தாள். அவள் பாடல்களால் கவரப்பட்டு ஜகந்நாதரே காட்டில் தோன்றி அங்கும் இங்கும் அலைந்து அவள் பாடலைக் கேட்டார். காட்டில் உள்ள முட்புதர்களில் சிக்கி அவரது ஆடைகள் பல இடங்களிலும் கிழிந்துவிட்டன.

அதிகாலையில் கோவிலில் பூசாரி இறைவனது பீதாம்பரம் கிழிந்திருப்பதைக் கண்டு துணுக்குற்றார். இவ்விதம் பீதாம்பரம் கிழிந்ததன் காரணம் அறியமுடியாமல் இறைவனையே இதைத் தங்களுக்கு விளக்கக் கோரிப் பிரார்த்தித்தார். ஸ்ரீ ஜகந்நாதர் அர்ச்சகரின் கனவில் தோன்றி இதன் காரணத்தை விளக்கினார். "ஒரு பெண் காட்டில் கீத கோவிந்ததைப்பாடிக் கொண்டிருந்தாள். அதைக் கேட்க நான் காட்டில் ஓடியபோது முட்களில் சிக்கி என் பீதாம்பரம் கிழிந்துவிட்டது". அரசரும் அர்ச்சகரும் ஜயதேவரையும் பழம் விற்கும் அப்பெண்ணையும் போற்றினர். அரசர் அப்பெண்ணைத் தன் நாட்டிற்குக் கூட்டிச் சென்று அவளுக்கு அளவற்ற செல்வத்தைக் கொடுத்தார். அரசர் முன்னிலையில் அவள் தினந்தோறும் கீதகோவிந்தத்தைப் பாடினாள்.

இறைவன் தன் பக்தர்களின் அடிமை. தன் பக்தர்களுக்காக அவன் எதுவும் செய்வான்.

## கொள்ளைக்காரர்களால் ஜயதேவர் கைகளும் பாதங்களும் வெட்டுண்டது

ஜயதேவரின் மாமனார் தன் மருமகனைக் காண வந்து சில நாட்கள் தங்கியிருந்தார். ஒரு சிறிது காலம் பிறந்தகத்தில் தங்குவதற்காகப் பத்மாவதியை அழைத்துச் சென்றார் அவள் தந்தை. பகவன்தாஸ் என்னும் செல்வமிக்க வியாபாரி ஒருவர் பில்வகம் கிராமத்திற்குச் சென்று ஜயதேவரைத் தன் வீட்டிற்கு விருந்தினராக வருமாறு அழைத்தார். ஜயதேவரும் அழைப்பை ஏற்றுக்கொண்டு அவ்வியாபாரியுடன் சென்றார். அங்கு அவருடன் சில நாட்கள் தங்கினார். பிறகு நிறைய விலையுயர்ந்த பரிசுகளோடு தன் வண்டியிலேயே ஜயதேவரை அவரது கிராமத்திற்கு அனுப்பிவைத்தார். அந்த வியாபாரி இரண்டு கிராமங்களுக் கிடையில் ஒரு காடு இருந்தது. ஒரு கொள்ளைக்காரக் கூட்டம் வந்து ஜயதேவரைத்தாக்கியது. ஜயதேவர் தன்னிடமிருந்த எல்லாப் பொருட்களையும் கொடுத்துவிட்டார், ஆனால் இவ்வளவு எளிதாக எதிர்ப்பின்றி ஜயதேவர் பொருட்களைக் கொடுத்து விட்டதால் அந்தக் கொள்ளைக்காரர்கள் தங்களைப்பற்றிக் காவல்காரர்களிடம் தெரிவித்துத் தண்டனை வாங்கிக் கொடுக்ககூடும் என்று சந்தேகித்து ஜயதேவரது கால் களையும் கைகளையம் வெட்டி ஒரு பாழுங்கிணற்றில் எறிந்து விட்டுச் சென்றனர்.

ஜயதேவர் மிகப் பொறுமையுடன் எல்லாத் துன்பங்களை யும் பொறுத்துக் கொண்டு அந்தக் கொள்ளைக்காரர்களை மன்னித்தருள வேண்டும் என்று இறைவனை வேண்டினார். தன்னை முழுமையாகக் கடவுளின் பொறுப்பில் அர்ப்பணித்துவிட்டுக் கடவுள் செயல்கள் யாவும் தன்

நன்மைக்கே என்று நன்கு உணர்ந்தார். கடவுளிடம் எந்த விதத்திலும் முறையிடாது தன் ஒரு கொடிய கர்மவினை தீர்க்கப்பட்டது என்றே நினைத்தார். நடந்த் துன்ப நிகழ்ச்சிகள் யாவும் கொள்ளைக்காரர்களது செய்கையன்று; தன் நன்மைக்காக இறைவனது ஆணைப்படி நடப்பவையே என்று முழுமையாக நம்பினார். இதுவே எல்லா உண்மையான பக்தர்களது மனோபாவம். அவர்கள் என்றும் இடுக்கண்களையும், சோதனைகளையும், இன்னல்களையும் இப்படித்தான் வரவேற்பார்கள்.

அந்தப்பிரதேசத்து அரசர் வேட்டையாட வரும்போது ஜயதேவர் உதவியற்றுக்கிடந்த அதே கிணற்றுக்கு தாகம் தணிக்கத் தண்ணீர் நாடி வந்தார். அங்கே அரசர் கண்டதோ தண்ணீர் இல்லை, ஒரு சிதைந்த மனித உடலே. தன் பணியாட்களிடம் ஜயதேவரைக் கிணற்றிலிருந்து எடுக்குமாறு ஆணையிட, அவர்களும் அவ்விதமே செய்தார்கள். அரசர் ஜயதேவரைத் தன்னுடன் தன் தலை நகருக்கு எடுத்துச்செல்ல ஏற்பாடுகள் செய்தார். தலை நகருக்கு வந்ததும் அரசர் ஜயதேவரை அவர் யாரென வினவினார். அவர்தான் மிகப்புகழ் பெற்ற ஜயதேவர் என்று அறிந்ததும் அரசர் அவர் காலடியில் வீழ்ந்து தன்னை அவரது சீடராக ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டினார். ஜயதேவர் ஒரு பல்லக்கில் இசை முழங்க பெரும் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டு நாட்டின் தலைமை குருவாக அமர்த்தப்பட்டார்.

ஜயதேவரின் உயரிய அருட்குணமும், இறையன்பும், பரந்த அறிவும், ஆன்மீக சாதனைகளும், கடவுட்சித்தத்தை முற்றிலுமாக ஏற்றுக்கொள்ளும் மனப்பான்மையும்அரசரின் மனதில் ஆழமான பாதிப்பை ஏற்படுத்தின. ஒரு நாள் அரசர் தன் குருவிடம் சென்று தான் துறவி வாழ்க்கைக்குத் தீட்சை பெற விரும்புவதாக கூறினார். ஜயதேவர் அரசரைப் பின் வருமாறு அறிவுறுத்தினார். அரசே ! துறவறம் என்பது

வெளிப்படையாகப் பொருட்களைமறுக்கும் மனப்பான்மை அல்ல. தூயதுறவறம் என்பது மனதைப் பொறுத்தது. ஆசைகளையும் தான் என்னும் அகந்தையையும் துறப்பதே உண்மையான துறவறமாகும். ஒருவன் தன் மனைவி, குழந்தைகள், செல்வம் யாவையும் விட்டு விட்டாலும் மனதளவில் அவர்களிடம் இன்றும் பிணைப்புக் கொண்டிருப்பானானால் அவன் துறவியாகமாட்டான். இவ்விதமான வெளியளவான துறவறத்தால் மிக்க நன்மை இல்லை. நான் முயற்சி செய்வது போலவே இல்லறத்தில் இருந்தவாறே துறவறத்தைக் கைக்கொள்ளுங்கள். வெளியளவில் அரசனாகவும் உள்ளத்தளவில் துறவியா கவும் வாழுங்கள்" ஜயதேவருக்கு மனைவி இருப்பதையும் அவர் இல்லறத்தான் என்பதையும் அறிந்த அரசர் வியப்படைந்தார். தன் குரு முற்றும் துறந்தவர் என்று எண்ணியிருந்தார். ஜயதேவரின் அறிவுரையில் சிறந்த உண்மையிருந்ததை அறிந்தார் அரசர். சில பணிப் பெண்களை பத்மாவதியைப் பல்லக்கில் கொண்டு வர அனுப்பினார்.

பத்மாவதி தன் தாய்வீட்டிலிருந்து பில்வகம் திரும்பியபோது ஜயதேவர் வீட்டில் இல்லாதிருந்ததைக் கண்டாள். தன்னைக் கைவிட்டுவிட்டுத் துறவியாகச் சென்றுவிட்டார் ஜயதேவர் என்று நினைத்தாள். அவள் தந்தையும் சுற்றுப்புறத்தில் உள்ள கிராமங்களிலெல்லாம் ஜயதேவரைத் தேடினார். அவரைக் கண்டுபிடிக்க இயலவில்லை. ஜயதேவர் தவம் செய்யக் காட்டிற்குச் சென்றிருப்பார் என்று நினைத்தார். அவர் தாய்வீட்டி லிருந்து திரும்பியதும் தன் கணவர் இல்லாமையால் தன் வீடு காலியாகத் தோன்றியதாலும், அவரைப் பற்றி அங்கும் இங்கும் அவள் விசாரித்தும், முயற்சிகள் பயனற்றுப் போனதாலும் பத்மாவதி கடும் துயரத்தில் மூழ்கினாள். அரசரது பணிப்பெண்கள் ஜயதேவரைப்பற்றிய

செய்தியைக் கூறியபோது அவள் எல்லலையற்ற மகிழ்ச்சி கொண்டாள். உடனேயே பத்மாவதி அரசமாளிகைக்குச் சென்று தன் கணவனைக் கண்டாள். அவரது திருப்பாதங்களில் வீழ்ந்து அன்பும் பக்தியும் பொங்கக் கண்ணிரால் கழுவினாள். ஜயதேவர் தான் எவ்விதம் கைகளையும் பாதங்களையும் இழந்தார் என்ற விவரத்தை அவளுக்குக் கூறினார். தன் கணவரது சிதைந்த பாதங்களையும் கைகளையும் கண்டு பத்மாவதி மனவேதனையடைந்தாள். "கருணையே உருவான ஜகந்நாதப் பிரபு என்கணவரது கைகளயும் பாதங்களையும் திருப்பி அளிக்க மாட்டாரா" என்று இறைஞ்சினாள். இறைவன் அவளது வேண்டுகோளை நிறைவேற்றினார். ஜயதேவர் பத்மாவதியின் கை பரிசத்தால் தன் கைகளும் பாதங்களும் திரும்பப் பெற்றார். அரசரது ஆதரவின் கீழ் ஜயதேவரும் பத்மாவதியும் இனிது வாழ்ந்தனர்.

## இந்நிகழ்ச்சி பற்றிய மற்றொரு கூற்று

அரசர் பத்மாவதியை இலட்சுமிதேவியாகவே கருதித் தன் தாயை விட அதிகமாகவே மதித்துப் போற்றினார். அவர் தன் நாட்டிலும் அதன் சுற்றுப்புறத்திலும் உள்ள பக்தர்கள்-அவர்கள் எம்மதத்தைச் சேர்ந்தவர்களாயினும் சரி சிறப்பாக உபசரிக்கப்பட்டு விலையுயர்ந்த பரிசுகள் அளிக்கப்படுவார்கள் என்று அதிகார பூர்வமாக அறிவிக்குமாறு ஆணையிட்டார். இதன்படி வந்த சாதுக்கள் யாவரும் முதலில் ஜயதேவரைப்பார்க்க வேண்டுமென்றும் பின்னர் ஜயதேவர் அவர்களை அரசரிடம் அனுப்பி வைப்பார் என்றும் பணித்தார் அரசர் அவ்விதம் அரசரிடம் சென்ற சாதுக்கள் நன்கு உபசரிக்கப்பட்டு பரிசுகளும் வழங்கப்பட்டன.

ஜயதேவரைக் கொடுமைப்படுத்திய கொள்ளைக் காரர்களும் அரசனது விருந்தோம்பும் பண்பும் கொடைக்

குணமும் பற்றிக் கேள்விப்பட்டனர். அவர்களும் சாதுக்கள் போல உடையணிந்து ஜயதேவரிடம் வந்தனர். அவர்கள் ஜயதேவரை அடையாளம் கண்டு கொண்டனர். ஜயதேவரும் அவர்கள் யாரென அறிந்து கொண்டார். அத்திருடர்கள் தங்களுக்குத் தண்டனை கிடைக்கும் என்று பயந்து யாரும் அறியா வண்ணம் இரகசியமாக அரசமாளிகையை விட்டுச் சென்றனர். ஆனால் ஜயதேவர் சில ஆட்களை அனுப்பி அவர்களைக் கூட்டிக் கொண்டு வரச் செய்தார். அவ்விதமே பணியாட்கள் அத்திருடர்களைக் கொண்டு வந்த போது ஜயதேவர் அவர்களை வணங்கி அரசனையும் அவர்களை வணங்கச்செய்தார். பின்னர் அவர்களை மாளிகையொத்த ஓர் இருப்பிடத்தில் தங்க வைத்து அரச குடும்பத்தினரைப் போல அவர்களுக்கு உபசரணை செய்யச் செய்தார். ஆனால் திருடர்கள் இதனாலெல்லாம் மகிழாது எந்த விநாடியும் தங்களுக்குத் தூக்குத் தண்டனை கிட்டலாம் என்று நினைத்தார்கள். எனவே அவர்கள் ஜயதேவரிடம் தாங்கள் தங்கள் ஊருக்குத் திரும்ப விரும்புவதாகக் கூறினார்கள். ஜயதேவரும் மகிழ்ந்து களங்கமில்லா மனதோடு அரசரிடம் "இந்த ஏழை அறிஞர்கள் போகும் வழியில் பெருங்கானகம் உள்ளது. அங்கே கொடிய கொள்ளைக்காரர்கள் இருக்கி றார்கள். எனவே தங்கள் வீரர்கள் சிலரை இவர்களுடன் அனுப்பிவையுங்கள்" என்று கேட்டுக் கொண்டார். அரசரும் அத்திருடர்களுக்கு அழகிய, சிறந்த உடைகளும் பெரும்செல்வமும் அளித்து அவர்களுடன் ஐந்து வீரர்களையும் உடன் அனுப்பிவைத்தார். வழியில், காட்டில் ஒரு மரத்தினடியில் அமர்ந்து இளைப்பாறும் போது வீரர்கள் அக்கொள்ளைக்காரர்களிடம்" நீங்கள் யார்? கவிஞர் ஜயதேவருக்கும் உங்களுக்கும் உள்ள தொடர்பு என்ன? அரசரிடம் கூறி உங்களுக்கு இத்தனை சௌகரியங்களை அளித்திருக்கிறாரே ஏன்?" என்று கேட்டனர். அந்தத்திருடர்கள் புன்னகையுடன் பின் வருமாறு

கூறினார்கள். "ஆம் இதன் காரணத்தைச் சொல்கிறோம் கேளுங்கள். கர்நாடகத்து அரசனது மாளிகையில் பிட்சைக்காக அமர்ந்திருந்தோம். அப்போது இந்த பிராம் மணனும் செல்வத்தைத் தேடி வந்தான். ஒரு செல்வந்தர் வீட்டில் இந்த பேராசைக்கார வெறுக்கத்தக்க பிராம்மணன் பொருள் திருடிவிட்டான். அவர் இவனை அரசவைக்குக் கூட்டிச்சென்று'அரசே இவன் அந்தணனே அல்லன். இவன் மிகப்பெரும் திருடன். திருடியே வாழ்ந்துவருகிறான். என் வீட்டிலும் இப்போது திருடி விட்டான், என் பணியாட்கள் மூலம் இவனைக் கயிற்றால் பிணைத்துத் தங்கள் முன்னிலையில் கொண்டு வந்திருக்கிறேன்'' என்று சொன்னார். அரசர் ஒரு கீழ்க்குடிமகனை அழைத்து இந்த பிராம்மணனை நாட்டை விட்டுக்கடத்திக் கொன்றுவிடுமாறு ஆணையிட்டார். அவனும் இவனை இழுத்துச்சென்றான். உதவி ஏதும் இல்லாத நிலையில் இந்தப் பிராமணன் அழுது கொண்டுருந்ததைக் கண்டோம். உடனே அவனிடம் இந்தப் பிராமணனைக் கொல்லவேண்டாமென்றும் அவன் கைவிரல்களை மட்டும் வெட்டிவிட்டு நாட்டை விட்டுத்துரத்தி விடுமாறு கூறினோம். மேலும் அரசனிடம் அந்தக் கைவிரல்களைக் காட்டுமாறும் அவனிடம் வழிமுறை கூறினோம். அதன் படியே அவனும் பிராம்மணனது கைகளையும் பாதங்களையும் வெட்டி அந்த வெட்டிய துண்டங்களை அரசரிடம் காட்டிவிட்டான். வீரர்களே, இது தான் நடந்த கதை. இந்த பிராம்மணனை நாங்கள் அரசரின் ஆணையினின்று காப்பாற்றியதால்தான் எங்களை இவ்வளவு தூரம் மதித்து வணங்குகிறான்" அந்தக் கொள்ளைக்காரர்கள் இவ்விதம் சொல்லிக்கொண்டிருந்த போது வானத்தில் ஒரு பயங்கரமான ஒலிகேட்டது. பலத்த இடியொன்று தோன்றி அது அந்தத்திருடர்கள் மீது விழ அவர்கள் அக்கணமே இறந்தனர். அரசரது வீரர்களும் தங்கள் நினைவை இழந்து கற்சிலை போல நின்றனர்.

சிறிது நேரத்திற்குப்பின் அவர்கள் நினைவை அடைந்து நடந்த பயங்கர நிகழ்ச்சியினால் வியப்படைந்து அரசமாளிகைக்குத் திரும்பிய போது அரசர் ஜயதேவர் வீட்டிலிருந்து இன்னும் திரும்பவில்லை என்று அறிந்தனர். எனவே கொள்ளைக்காரர்களுக்குக் கொடுத்த பொருட்களை ஜயதேவருடைய வீட்டிற்கு எடுத்துச் சென்றனர். அரசரிடம் கைகுவித்து நடந்தன யாவற்றையும் விவரமாகக் கூறினார்கள். "அரசே ! அந்த அறிவாளிகள் கொடும் இடியால் தாக்கப் பட்டு இறந்தனர். அவர்களுக்குப் பரிசாக வழக்கப்பட்ட உடைகளையும் செல்வங்களையம் திருப்பிக் கொண்டு வந்திருக்கிறோம்" என்றனர். இந்த ஆச்சரியகரமான நிகழ்ச்சிகளின் பொருளை அறிய மாட்டாமல் அரசன் என்ன நடந்தது? என்ன நடந்தது? என வினவினார், வீரர்கள் அந்தக் கொள்ளையர்களைப்பற்றியும் ஜயதேவர் தன் கைகள், கால்கள் இழந்தது எவ்விதம் என்று அவர்கள் சொல்லிய கதையையும் அரசரிடம் கூறினார்கள். இதையெல்லாம் கேட்ட அன்புள்ளம் கொண்ட ஜயதேவர் மிக்கத்துயரத்துடன் தன் வெட்டுண்ட கைகளாலும் பாதங்களாலும் தரையில் அறைந்து அக்கொள்ளைக் காரர்களுக்காக வருந்தி அழுதார். உடனேயே அவரது பாதங்களும் கைகளும் பழையவாறே வரப்பெற்றார். யாவரும் இவ்வற்புதத்தைக் கண்டு வியப்படைந்தனர். கொடிய திருடர்களது மரணத்திற்காக உளமார வருந்திய ஜயதேவரின் இரங்கத்தக்க நிலையைக் கண்ட ஸ்ரீஜகந்நாதர் அவருக்கு அவரது அங்கங்கள் மீண்டும் முன்போலவே ஆக அருளினார்.

அரசரோ ஜயதேவரிடம் உண்மை என்ன என்றும் இந்நிகழ்ச்சிகளின் அடிப்படை என்ன என்று விளக்குமாறும் கேட்டுக் கொண்டார். ஜயதேவரும் முதலிலிருந்து முடிவு வரை விவரமாகத் தனக்கும் அந்தக் கொள்ளையர்களுக்கும் உள்ள தொடர்பையும் அதன் காரணமாக நடந்தது

யாவையும் பற்றியும் எடுத்துரைத்தார். இதையெல்லாம் கேட்ட அரசர் ஜயதேவரைப் பெரிதும் போற்றி' ஓ ஜயதேவரே, தாங்கள் தான் உலகிலேயே உண்மையான பேறு பெற்றவர். வேறு எவருமே தங்களுக்கு இணையாக மாட்டார். தன் நண்பர்களையும் எதிரிகளையும் ஒரேவிதமாக நடத்தும் அற்புதமான ஒரு மனிதரைக் கண்டும் அவர் சொற்களைக் கேட்டும் உடன் இருந்து வருகிறேனே நான், இதனால், தங்கள் முன் எத்துணை கீழ்மகனாக இருப்பினும் தங்களுடன் நெருக்கமான தொடர்பு கிட்டியதனால் நான் மிகவும் பேறு பெற்றவன்" என்றார். அரசர் இவ்வாறு ஜயதேவரை மேலும் மேலும் புகழ்ந்தார். பின்னர் அவர் தன் மாளிகைக்கு வந்து தன் மனைவி, மகன்கள், மற்றும் அமைச்சர்களிடம் ஜயதேவரின் வியத்தகு கதையைக் கூறினார்.

## பத்மாவதியின் கற்பின் மேன்மை

அரசரது தமையனார் நீண்ட வயது வாழ்ந்து காலமானார். அவரது மனைவி சிறந்த பதிவிரதை கணவனுடன் உடன்கட்டையேறத் தீர்மானித்தாள். இதைக் காண அரசரும் அரசியும் வந்தனர். ஜயதேவரின் மனைவி பத்மாவதியும் அந்தக் கற்புக்கரசியைக் காண வந்தாள். அரசி "பத்மாவதி இந்த உடன்கட்டையேறும் மேன்மையான கற்பு நிலையைக் காண வந்தீர்களா? என்று கேட்டாள். அதற்குப் பத்மாவதி விவரமாகப் பதிலளித்தாள்" இது வெட்கம் தன் கணவரது மரணச்செய்தியைக் கேட்டவுடனேயே சாம்பலாக எரிந்து போகாத மனைவி எப்படிக் கற்புக்கரசியாவாள்? என்ன இது தன்கணவர் இறந்தபிறகு ஒரு கட்டையின் தீயில் தன்னை எரித்துக் கொள்ளும் முயற்சியில் என்ன உயர்வு? ஒரு பெண் தன் கணவன் இவ்வுலகை நீங்கிச்செல்லும் அந்த விநாடியே தன் மூச்சை விடவில்லையெனில் அவள் தன் அன்புக் கணவன்பால்

கொண்ட பக்தியும் அன்பும் எங்கே? அவளது கடுமையான விரதம் எங்கே? இதைக் கேட்ட அரசி" என்ன சொல்கிறீர்கள் உங்கள் விஷயத்தில் இவ்வளவு உறுதியாக உங்களால் சொல்லமுடியுமா? இது எப்படி நடக்க முடியும்? உங்களை நான் பரிசோதிக்க விரும்புகிறேன். ஒரு வாய்ப்பு கிடைக்கும் வரை நான் காத்திருப்பேன்" என்று கூறினாள்.

ஒரு நாள் அரசர் ஸ்ரீபுருஷோத்தமனைத் தரிசிக்க விரும்பி ஜயதேவருடன் அன்புடனும் பக்தியுடனும் கோவிலுக்குச் சென்றார். அன்று இரவு ஜயதேவருடன் கோவிலிலேயே தங்கினார். அதிகாலையில் அரசி பத்மாவதியை அழைத்து வரச்செய்தாள். பத்மாவதியும் விரைவில் வந்து அரசியிடம் தான் என்ன பணி செய்யவேண்டும் என்று வினவினாள். உடனேயே அரசி மிக்கத்துயரத்துடன் விம்மியழுது "ஸ்ரீபுருஷோத்தமனது தரிசனத்திற்காக அரசருடன் உங்கள் கணவர் சென்ற இடத்தில் —— ஐயோ, நான் எப்படிச்சொல்வேன் —— உங்கள் கணவர் உயிர் நீத்தார். தன் சிறந்த நண்பர் மரணமடைந்ததால் துயரத்தால் தாக்குண்ட அரசர் இன்னும் கோவிலிலிருந்து திரும்பவில்லை. பணியாட்கள் திரும்பி வந்து இந்தத்துயரச் செய்தியைத் தெரிவித்தனர்" என்று கூறினாள். அரசியின் இந்த வார்த்தைகளைக் கேட்டதுமே பத்மாவதி அதிர்ச்சியால் தாக்கப்பட்டு தரையில் நினைவிழந்து வீழ்ந்து உடனேயே தன் உயிர் மூச்சை விட்டாள்.

ஜயதேவரும் அரசரும் கோவிலிலிருந்து திரும்பினார்கள். அரசமாளிகையில் நுழைந்ததுமே பத்மாவதி தரையில் இறந்து கிடந்ததைக் கண்டனர். அரசர், பத்மாவதிக்கு என்ன நேர்ந்தது என்று அரசியை வினவினார். அரசி"நான் அவருடைய கற்பின் ஆழத்தைச் சோதிக்க விரும்பினேன். தங்கள் தமையனாரின் மனைவி உடன்கட்டையேற

வந்தபோது பத்மாவதி ஒரு கருத்தைக் கூறினாள். நான் இன்று விளையாட்டாக அவள் கணவர் இறந்துவிட்டதாகக் கூறினேன். உடனேயே அவள் மயங்கி வீழ்ந்து உயிரை விட்டுவிட்டாள். என்னை மன்னியுங்கள்'' என்று வருந்திக் கூறினாள். அரசர் அரசியிடம் கடும் சினம் கொண்டு "உனக்கு எங்கே போக வேண்டுமோ அங்கு போகலாம்" என்று கடிந்துரைத்தார். ஜயதேவர் அரசரை அமைதிப்படுத்தி "அரசியின் மீது குற்றம் ஏதுமில்லை. எவரும் ஏதோ ஒரு நேரத்தில் உணர்ச்சி மிகுதியாலோ மன எழுச்சியினாலோ பொய் கூறலாம்'' என்று கூறினார். பத்மாவதியின் கைகளைப்பற்றி கண்ணபிரானைச் சிந்தித்து அவரைப் போற்றிப்பாடினார். சில வினாடிகளில் பத்மாவதி கண்விழித்துத் தன் கணவருடன் கண்ணன் புகழ் பாடுவதில் சேர்ந்து கொண்டாள். அரசி பத்மாவதியின் கால்களில் வீழ்ந்து தன்னை மன்னிக்க வேண்டினாள்.

## இறுதி நாட்கள்

ஜயதேவர் தன் வாழ்வின் முடிவு நாள் வரை தினந்தோறும் கங்கையில் நீராடுவதாக உறுதி பூண்டார். அவர் வயோதிக நிலையை அடைந்தார். ஒரு நாள் நீராடிவிட்டுக் கங்கையிலிருந்து திரும்புகையில் மயங்கி வீழ்ந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகே திரும்ப நினைவைப் பெற்றார். எனவே அரசர் அவருக்குக் கங்கைக்குச் சென்றுவர ஒரு பல்லாக்கையளித்தார். ஆனால் ஜயதேவர் அதை ஏற்க மறுத்துவிட்டார். ஜயதேவரின் தவ வலிமையினாலும் பக்தியாலும் கங்கையே அவர் வீட்டுக் கிணற்றுக்குத் தாமரை மலர்களோடு வந்துவிட்டது.

இதுதான் ஜயதேவரின் கதை. அவர் மிகச்சிறந்த கிருஷ்ண பக்தர். அவர் தன்னடக்கத்தோடு, எளிமையாக, ஆடம்பரமில்லாது வாழ்ந்தார். பொருளைச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்ற எண்ணமே இல்லாதிருந்தார். கண்ணனின்

தியானத்தில் என்றுமே மகிழ்ச்சியும் ஆனந்தமும் கொண்டவர். அப்பழுக்கற்றவர். பிழை பொறுத்தல் என்னும் குணத்தில் உருவானவர். மனைவியுடன் இல்லறத்தில் இருந்தாலும் ஒரு துறவி துறவறத்தின் உட்பொருளை அறிந்தவர். எல்லாப் புலன்களும் முழுமையாக அடக்கப்பட்டு மனத்தளவாக விடுபடுவதே துறவறம் என்பதை அறிந்தவர். ஓர் இல்லறத்தான் வாழ்விலும் இறைவனை உணர்ந்து அறிய முடியும் என்பதற்கு ஆவர் வாழ்வே ஒரு சிறந்த உதாரணம்.

நம்மையெல்லாம் தன் வாழ்வின் மூலம் ஊக்குவிக்கும் ஜயதேவர் புகழ் ஓங்குக.

## 14 வித்யாரண்யர்

விஜயநகரத்தின் இந்து சாம்ராஜ்யமும் இந்து வேத ஞான சாம்ராஜ்யமும் இரண்டுமே ஸ்ரீவித்யாரண்யர் படைப்புகள். ஒன்று உலகியல் சார்ந்த படைப்பு, மற்றொன்று ஆன்மீகம் சார்ந்த படைப்பு. வித்யாரண்யர், ஆதிசங்கரபகவத் பாதரிலிருந்து துவங்கும் குரு பரம்பரையில் 21-வது ஆச்சாரியர் ஆவர்.

கிஷ்கிந்தை என்னும் இடத்தில் ரிஷ்யமுக மலையில் குளிர்ச்சியான குகையொன்றில் உயர்திரு மாதவர் பாலதேவியின் அருளை வேண்டித் தவத்தில் மூழ்கியிருந்தார். அந்தக் கால கட்டத்தில் நிலவி வந்த குழப்பம் சட்ட ஒழுங்கின்மை, மக்கள் துன்பம். இவற்றை நீக்கி ஒரு இந்து அரசை நிறுவுவதும் இந்துக் கலாச்சாரத்தை உயிர்ப்பிப்பதுமே அவரது இதயத்தின் ஆசை. அவரது தீவிரத் தவ வலிமையின் காரணமாக, அவரது மெய்மறந்த நிலையில் அம்பிகை முன் தோன்றினாள். ஆனால் அவரது விருப்பம் அவருடைய மறுபிறவியில்தான் நிறைவேறும் என அம்பிகை வரமளித்தாள். இதைக் கேட்டதும் அந்தத் தவயோகி துறவறத்தை மேற்கொண்டு அதன் மூலம்

உண்மையாகவே மறுபிறவியெடுத்து மறுபடியும் அன்னையை வழிபட்டார். மூன்று மணி நேரம் பொன்னாகவும், இரத்தினங்களாகவும், முத்துக்களாகவும் பொழிந்தது என்றும் மாதவர் துறவி வித்யாரண்யராக மாறி அம்பிகையிடம் எவ்விதம் இந்துப் பேரரசை ஏற்படுத்துவது என்பதற்கு வழிமுறைகளை அறிந்து கொண்டார் என்றும் பாரம்பரியமாகக் கூறப்படுகிறது.

துங்கபத்திரை நதியின் வடபகுதியில் அனேகுண்டி என்னும் இடம் முன்பே இருந்தது. எனவே வித்யாரண்யர், நதியின் தெற்குப் பகுதியில் விரூபாக்ஷாவின் கோவிலைச் சுற்றித் தன் வித்யாநகரைத் திட்டமிட்டு நிர்மாணித்தார். அவரது தவத்தின்போது அவருக்குப் பால் அளித்தும் மற்றும் தேவையான பணிவிடைகள் செய்து அவரைக் கவனித்துக் கொண்ட ஆட்டிடையர்களான இரு சகோதரர்களை ஹுக்கர், புக்கர் என்ற பெயரால் அந்நாட்டுக்கு அரசராக்கினார். தன் சகோதரரையே அமைச்சராக நியமித்து, அரசின் பொதுவான இலக்குகளையும் வழிமுறைகளையும் தானே கவனித்துக் கொண்டார். அவரது உன்னதமான ஆன்மீகத்தன்மை காரணமாக அவர் நிர்மமேந்திரர் என்று அன்புடன் அழைக்கப்பட்டார். அவர் அமர்ந்து ஆன்மீக அனுஷ்டானங்கள் செய்து வந்த மண்டபம் இன்றும், ஹாஸ்பெட் நகரிலிருந்து எட்டு மைல்கள் தூரத்தில் துங்கபத்திரைப் படுகையில் உள்ள ஹம்பியில் இருப்பதைக் காணலாம். இப்போது குண்டக்கல் - பெங்களூர் இரயில் பாதையில் ஹம்பி ஓர் இரயில் நிலையமாக இருக்கிறது. அதே போலவே ஸ்ரீ விரூபாக்கரரின் கோவில் தெற்குப் பிராகாரத்தில் நிர்மமேந்திரரின் மனதிற்குகந்த தெய்வம் பாலாம்பிகையின் சன்னிதியையும் இன்றும் பார்க்கலாம். ஹம்பி இன்று பாழடைந்து இருக்கிறது. அதே போலவே நம் உயர்ந்த ஆரியக் கலாசாரமும் பாழ்பட்டு உள்ளது. இந்தச் சிதைவுகள் பரந்து கிடக்கின்றன. இந்த இடிபாடுகளிலிருந்து,

வித்யாரண்யரின் படைப்பான, என்றும் மறக்கவொண்ணாத வித்யா நகரின் தோற்றத்தை மனக்கண்முன் எழச் செய்தால் அக்காட்சி இமாலயக் கம்பீரம் கொண்டதாயிருக்கும்.

இந்த நகரம் 18 மைல்கள் நீளமும் 10 மைல்கள் அகலமும் கொண்ட மிகப்பெரிய நீண்டசதுர வடிவம் கொண்டிருந்தது. அந்நகரைக் கண்ட இந்தியரும் அயல் நாட்டவர்களும் கூறியிருக்கிறார்கள். துங்கபத்திரை நதி அனேக கால்வாய்களாகத் திருப்பிவிடப்பட்டிருந்ததால் நகரின் எந்த மூலையிலும் நல்ல குடி தண்ணீரை அடையும் வசதி இருந்தது. நகரமைப்புத் திட்டம் குறையற்றதாகவும், சுகாதார வசதிகள் மிகச் சிறந்தனவாகவும், நாட்டு வர்த்தகம் வளமிக்கதாகவும், அமைதி ஒரு முன்மாதிரியாகவும் இருந்தன. நகரமக்கள் உண்மையானவர்களாகவும், நேர்மை யானவர்களாகவும், அன்னியர்களிடம் மரியாதையுடன் பழகுபவர்களாகவும், விருந்தோம்பும் குணமுள்ளவர்களாகவும் இருந்தனர். விஜய நகரத்தின் பொற்காலத்தில் சைக்ரியர் இந்நகருக்கு வருகை தந்தார். கத்தோலிக்க மதப்பிரசாரகர் புனித பிரான்ஸிஸ் சேவியர் இந்த இந்துப் பேரரசின் மேன்மையைக் கண்டு வியப்படைந்தது மட்டுமன்றி, மக்களைப் பெருவாரியாக மதமாற்றம் செய்யப் பேராவல் கொண்டு அவர் மேற்கொண்ட திட்டத்தின் வெற்றியைக் குறித்துப் பெரிதும் மனம் தளர்ந்தார். எனவே, தனது மதமாற்றம் முயற்சிகளை மேற்கிலும், சோழ மண்டலக் கடற்கரையிலும் உள்ள மீனவர்கள் மட்டோடு நிறுத்திக் கொண்டார். வித்யா நகரம் இந்துக்கலாசாரத்தின் உற்பத்திஸ்தானம் என்று எளிதாகக் கருதப்படும் வண்ணம் சிறந்திருந்ததால் இராமானுஜர், மத்வர் இவர்களது பரம்பரையைச் சேர்ந்த பெரும் சமயத் தலைவர்கள் இந்த நகரைத் தங்களுடைய முக்கிய இருப்பிடமாகக் கொண்டிருந்தனர்.

இந்த சிறந்த நகரை நிறுவியபின் நிர்மமேந்திரர் சங்கராச்சாரியாரது தெற்குப் பீடமான சிருங்கேரிக்குச் சென்றார். அங்கு அவர் தனக்கு விதிக்கப்பட்ட பணியான வேத விளக்கத்தை முடிக்க முற்பட்டார். வேத வியாஸ முனிவர் வேதங்களை நாம் இன்று காணும் முறையில் வகைப்படுத்தித் தொகுத்திருந்தார். பல நூற்றாண்டுகள் கழிந்திருந்தன. இந்து வீரமும் ஏறக்குறைய மறைந்து விட்டிருந்தது. பிற மதத்தினர் இங்கு வந்ததோடன்றி அதிகாரத்தைச் செலுத்தவும் ஆரம்பித்துவிட்டனர். ஹூணர்கள், துருக்கியர்கள் இவர்களது தாக்குதலை எதிர்கொள்ள இயலாது தொன்மையான வேத நெறிகளை பின்பற்றுபவர்கள் இங்கிருந்து ஓடவேண்டியதாயிற்று. படையெடுத்துவந்த முகம்மதியர்களோ மதவெறியினாலும், ஆவேசத்தாலும் இந்துக்களின் கலை பண்பாடு இவற்றின் மிகச்சிறந்த சின்னங்களை அழித்துவிட்டுச் சென்றனர். இந்தக் கால கட்டத்திலும் சூழ்நிலையிலும்தான் விஜய நகரப் பேரரசு எழுந்து இந்துக்களது பாதுகாப்பை உறுதிப் படுத்தியது. ஆனால் நாட்டின் கலாசாரத்தைப் பழைய நிலைக்குக் கொண்டுவரும் பணி செய்ய வேண்டிய தாயிற்று. தனது 60-வது வயதில்தான் வித்யாரண்யர் இந்த சாதனையை மேற்கொண்டார். அவர் 90 வருடங்கள் வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது.

வித்யாரண்யர் துறவறத்தை மேற்கொள்வதற்கு முன்பு மாதவர் என்று அழைக்கப்பட்டார். அவர் பெல்லாரியில் உள்ள குந்திரம் என்னும் ஊரில் கி.பி. 1350-ல் பிறந்தார். தந்தை மாயனர், தாய் சுமதி. மாதவருக்கு சாயனர், போதநாதர் என்னும் இரு சகோதரர்கள். மாதவர் பரத்வாஜ கோத்ரம், போதாயன சூத்ரம்; யஜுர் வேதத்தைச் சேர்ந்தவர். தன் 8வது வயதில் பிரம்மச்சர்யத்தைத் தழுவி 36 வருடங்கள் சர்வஜன விஷ்ணு என்னும் குருவின் கீழ் பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடித்தார். அப்போது நான்கு வேதங்களையும்

அவற்றின் கடினமான, மறைபொருளான கருத்துக்களையும் நன்கு அறிந்து சிறந்த புலமை பெற்றார்.

புக்கண்ண ராஜா அல்லது புக்கர் என்று அழைக்கப்படும் அரசர் ஸ்ரீ வித்யாரண்யரின் சீடர். தன் அரசின் எல்லா வருவாயையும், வசதிகளையும் தன் குருவும் அமைச்சருமான வித்யாரண்யரின் உபயோகத்திற்கு அளித்து நான்கு வேதங்களுக்கும் சிறந்த விளக்கவுரை எழுதியளிக்குமாறு வேண்டினார். வித்யாரண்யரின் திட்டம் ஒருமிக உயர்ந்த விளக்கவுரை எழுதவேண்டுமென்பது. இது ஒருவரால் முடிக்க இயலாத பெரும் செயல். எனவே இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் கற்றறிந்த பல பண்டிதர்களைத் தன்னுடன் ஒத்துழைத்து, தான் வழிகாட்ட அதன்படி இப்பணியைச் செய்யுமாறு வேண்டிக் கொண்டார் வித்யாரண்யர். விஜய நகரில் அறிஞர்கள் ஆயிரக்கணக்கில் குழுமி விஜயநகரத்தின் கலாசாரத்தை உன்னத நிலைக்கு உயர்த்தினார்கள். வீரூபாக்ஷரின் ஆலயம், ஹம்பியில் உள்ள விட்டலசுவாமி, இராமசுவாமி ஆலயங்களிலும் உள்ள கல்மண்டபங்களிலிருந்து இந்த அறிஞர்கள் குழுமியிருந்த மிகப்பரந்த அரங்கங்களை ஓரளவு நாம் கற்பனை செய்து அறியலாம். இவைகளில் அனேகம் மிகக் கம்பீரமான கலையழகுடையவை. சுண்ணாம்புக் கலவைகளாலும், சுட்ட களிமண்ணாலும் மட்டுமே, ஒரு துண்டு மரம் கூட இல்லாமல்,கட்டப்பட்ட மிக அழகான தாமரை அரங்கை இன்றும் காணலாம். ஆயிரக்கணக் கானவர்கள் அமரும் அளவுக்குப் பெரிதாகவும், குளிர்ச்சியுள்ளதாகவும், தனிமையும் தீவிர மன ஒருமையும் காக்கப்படுவதாகவும் உள்ள எண்ணற்ற குகைகள் இருந்தன. இந்த விவரங்களிலிருந்து மறைந்த கலாசாரத்தை மீண்டும் உயிர்ப்பிக்க உழைத்த அறிஞர் குழாம் எத்துணை பெரியதாக இருந்தது என்பதை ஓரளவு அறியலாம். இப்பண்டிதர்களுக்குத் தேவையான எல்லா வசதிகளையும் அரசர் செய்து கொடுத்து வேத

மறுமலர்ச்சியைப் பெரிதும் முன்னேறச் செய்தார். முந்தைய உரையாளர்கள் சில மந்திரங்களின் முடிவான பொருளைப் பற்றித் திட்டமான முடிவுக்கு வர இயலாதிருந்தபோது வித்யாரண்யர் தன் விளக்கங்களை மிகத்துல்லியமாக அறுதியிட்டுரைத்தார்.

மாதவ வித்யாரண்யர் இயற்றிய முதல் நூல் மீமாம்சத்திலுள்ள ஜய்மினிய நியாயமாலா என்பதாகும். பின்னர் அவர் நையாயிக நியாயமாலாவை இயற்றினார். யஜுர் வேதத்தில் தைத்திரிய ஸம்ஹிதையில் விளக்கவுரையும் பிராம்மணங்கள், ஆரண்யகங்களின் விளக்கவுரைகளும் பின்னர் எழுதப்பட்டன. போதாயன கிருத்ய சூத்திரங்களின் உரை முன்பேயே பஸ்வாமியினால் எழுதப்பட்டிருந்தது. இப்போது அதைவிடச் சிறந்ததும் தெளிவானதும் ஆன உரையை வித்யாரண்யர் எழுதினார்.

இவற்றைத் தவிர யஜுர் வேதத்தின் அத்வர்ய காண்டம். ரிக்வேதத்தின் துதிப்பாடல்கள், இனிய ஸாமவேதம், யக்ஞங்களைப் பற்றிய விளக்கங்கள் கொண்ட அதர்வ வேதம் - இவை எல்லாவற்றுக்கும் விளக்கங்களை எழுதினார். அதன் பின்னர் பராசர ஸ்மிருதி, கீதை இவற்றின் உரைகளையும் எழுதினார். அவர் அமரகோசம் என்னும் அகராதியையும் தொகுத்ததாகக் கூறப்படுகிறது. மேலும் வானியல், மருத்துவம் போன்ற துறைகளில் மிக்கப் புலமையுடன் கட்டுரைகள் எழுதியுள்ளார். இவற்றில் கீதை உரையும் அமர கோசமும் இன்றும் கண்டுபிடிக்கப் படவில்லை.

வித்யாரண்யரின் ரிக்வேத உரை பிழையற்ற, பரந்த அறிவின் அற்புதம் என்று கூறப்படுகிறது. இதன் முன்னுரை, படிப்பவரின் அறிவுத்திறனைக் கூர்மையாக்கி, அவரது மறைந்து கிடக்கும் பொருளுணரும் சக்தியை எழுப்பும் வண்ணம் சிறப்பாக உள்ளது.

மேலை நாடுகளுக்காக இந்த விரிவுரையை முதன் முதலாக மொழி பெயர்த்தவர் மாக்ஸ்முல்லர். பின்னர் பிரெஞ்சு, ஜெர்மானிய மொழிகளிலும் மொழி பெயர்க்கப் பட்டது. இந்த உரை ஒன்றரை இலட்சம் செய்யுள்களைக் கொண்டு, உலகில் உள்ள, நம்மால் நினைக்கப்பெறும் எந்தவிதப் பொருளைப் பற்றியும் கருத்துத் தெரிவிப்பதாக உள்ளது. இதை இயற்ற வித்யாரண்ய யர்யஸ்கரின் நிருக்தம், மற்றும் ஸ்கந்தர், நாராயணர் உத்கீதர், வெங்கிட மாதவர் போன்ற முந்தைய உரையாளர்களின் விளங்கங்கள் இவற்றையே பெரிதும் துணையாகச் சார்ந்துள்ளார்.

ரிக்வேதத்திலும், வித்யாரண்யரின் உரையிலும் பலவகைப்பட்ட ஆழமான ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப் பட்டுள்ளன. ஆழ்ந்த பெருங்கடல் போன்று, அவை மேலும் மேலும் கருத்துப் புதையல்களை அளிப்பதோடன்றி, இன்னும், புரியாத மறைபொருளாகவே உள்ளன. வித்யாரண்யரின் ரிக்வேத உரைகளைப் பதிப்புக்குரிய முறையில் அமைப்பதற்கே தற்கால அறிஞர்களுக்கு இருபத்தைந்து ஆண்டுகள் ஆயின.

பெயர் பெற்ற வேத விற்பன்னர்கள், இலக்கணம், புவியியல், வானியல், மருத்துவம், சேத்திர கணிதம், கட்டிடக் கலை போன்ற அறிவுத்துறைகளில் வித்யாரண்யரின் சீரியபுலமையை உறுதிப்படுத்துகின்றனர். சிருங்கேரியில் உள்ள மாபெரும் கோவில்களின் ஈடில்லாத அழகும், அவற்றின் அமைப்புத்திறனும், அவற்றின் எளிதில் அறியவொண்ணாத உட்பொருளும், வித்யாரண்யரது சிற்பக்கலைத் திறமையையும், மந்திர சாஸ்திரப் புலமையையும் பறைசாற்றுகின்றன. இன்றைய சிருங்கேரியின் மேன்மையை உருவாக்கியதே அவர்தான். விஜயநகரை முகம்மதியர் அழித்த போது வித்யாரண்யரது

சிறந்த நூலகத்தை எரித்தனர். பிறகு தலைக்கோட்டைப் போருக்குப்பின் விஜயநகரப் பேரரசு சிதறுண்ட போது சங்கராச்சாரியார்கள் சிருங்கேரியை விட்டு வெளியேற வேண்டி வந்தது. அந்தக் குழப்பத்தில் மூலநூல்கள் உட்பட பல விலை மதிப்பற்ற கையெழுத்துப் பிரதிகள் அழிந்து போயின.

நமது வேதங்களின் கடினமான, மறை பொருளாக அமைந்துள்ள உட்கருத்துக்களையும், தெளிவாக, விரித்துரைத்து பின்வரும் சந்ததியினர் நமது தொன்மையான ஆரியக் கலாசாரத்தை அறிந்து, உயர்ந்த, நேர்மையான வாழ்வு நடத்த உதவிய பெருந்தகை வித்யாரண்யரால், வடக்கில் உஜ்ஜயினியிலிருந்து, தெற்கே கன்யாகுமரி வரை, மேற்கே துவாரகையிலிருந்து கிழக்கில் பூரி வரை, முக்கியமாக உயர்நதிகளான கங்கை, யமுனை, நர்மதை, கோதாவாரி, கிருஷ்ணா, காவேரி, தாமிரபரணிக் கரைகளில், பிராம்மண அறிஞர்களது அறிவொளி பரப்பும் குடியிருப்புக்கள் அமைக்கப்பட்டிருந்தன.

நாம் நிர்மமேந்திரரின் கலாசாரச் சந்ததியினர் - என்று உணர்வதற்காகவே மேற்கண்ட விவரங்கள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. நம்மில் பெரும்பாலோருக்கு வித்யாரண்யரின் ரிக்வேத உரை, இலக்கண ஆராய்ச்சியுரை, வித்யாரண்யம் என்னும் அவரது இஷ்ட தெய்வம் பாலாவின் மந்திர சாஸ்திரத் தெளிவுரை, உபநிஷத்துக் களின் கடினமான கருத்துக்களை உள்ளடக்கிய பிரம்ம கீதை, சக்தி வழிபாட்டின் செயல்முறைகளைக்கூறும் சௌபாஷ்ய ரத்னாகரம் - இவற்றைப் படித்து அறிதல் இயலாது. ஆனால் எளிதாக அடையக்கூடிய அறிவூற்றுக் களான பஞ்ச தசி, ஆதிசங்கர பகவத்பாதரின் வாழ்க்கைச்

சரிதமான சங்கர விஜயம், பராசர ஸ்மிருதியின் விளக்கம், மற்றும் ரிக்வேத விளத்தின் முன்னுரை, இவற்றிலிருந்து அறிவைப் பருகுதல், அவரது கலாசாரக் குழந்தைகளான நமது கடமை.

வித்யாரண்யரின் புகழ் என்றென்றும் ஒளிர்க!

## 15. அப்பய்யாசார்யார்

அப்பய்ய சிவம் என்றும் போற்றப்படும் அப்பய்யாசார்யார் சுமார் கி.பி. 1830ம் ஆண்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் பத்தமடை என்ற கிராமத்தில் பிறந்தவர். பெரிய நிலச்சுவான்தாரும், டாக்டர் பி.வி. குப்புசாமி ஐயரின் தகப்பனார் பி.எஸ். வெங்கு ஐயரின் மூத்த சகோதரருமான பண்ணை சுப்பய்யரின் பேரன் இப்பெரியார். அழகிய நிறத்துடன் கம்பீரமான தோற்றம் கொண்டவர். நல்ல உயரமும் வலுவான உடற்கட்டும் உடையவர்.

அப்பய்யாச்சார்யார் சிறந்த வடமொழிப் பண்டிதர். கடவுளை அனுபவத்தின் வாயிலாக உணர்ந்த ஞானி. உயர்ந்த சிவபக்தர். சமயம், தத்துவம் சார்ந்த பல நூல்களையும் பகவத்கீதை, உபநிஷத்துக்கள், பிரம்ம சூத்திரம் முதலிய பல வேதாந்த நூல்களுக்கு விளக்கவுரைகளும் எழுதியவர்.

சென்னை, அடையாறு பிரம்மஞான சங்கத்தைச் சேர்ந்தவரும், பம்பாய் நகரில் வெளிவந்த 'ஹெரிடேஜ்' என்ற ஆங்கில மாதப் பத்திரிகையின் ஆசிரியருமான மறைந்த கிருஷ்ண சாஸ்திரிகள் இப்பெரியாரின் சீடர்களில் ஒருவர். அவர் தன் பத்திரிகையில் அப்பைய்யாசார்யாரின் கட்டுரைகளில் பலவற்றை வெளியிட்டார். "கல்யாண கல்பதரு" என்ற பத்திரிகை இவரது வாழ்க்கைக் குறிப்பைப் பிரசுரித்தது.

அப்பைய்யாசார்யார் எப்போதும் ஆத்ம சிந்தனையில் ஈடுபட்டவர். தாமிரபரணி நதிக்கரையில் உள்ள நாராயணம்மாள்புரம் என்ற கிராமத்தில் பல வருடங்கள் வாழ்ந்தவர். கடும் தியானத்தில் தன் நேரத்தைக் கழித்தார். அவர் தனது ஆன்மீக சக்தியினால் பலரையும் ஈர்த்தார். அவர் விளம்பரத்தைத் தவிர்த்து எப்போதும் தனிமை யிலேயே வாழ்ந்தார். அவர் பிரபலமாவதை விரும்பவில்லை. அவரைப் போற்றியவர்களும், சீடர்களும், பக்தர்களும் மிகவும் செல்வந்தர்களாக இருந்த போதிலும் அவர் வறுமையையே நாடினார். சில நேரங்கள் உஞ்சவிருத்தி செய்தும் இறைவன் நாமத்தைப் பாடியும் வாழ்ந்தார். அவர் சிவபிரானைப் போன்று ஒளிர்ந்தார். அவரது வடமொழிப் பாடல்கள் எல்லாரது மனதையும் தொடுவதாக அமைந்திருக்கின்றன.

அப்பய்யாசார்யார் சங்கரரைப் போன்ற ஒரு மேதை. அவர் மன்னார்குடி ராஜுசாஸ்திரிகள், அடயபாலம் அப்பய்ய தீக்ஷிதர் இவர்களைப் போன்று புகழ்வாய்ந்தவர். புனித வேதங்களில் அவரது புலமை மிக ஆழமானது. தர்மத்தைப் பற்றியும் மத சம்பந்தமான சர்ச்சைக்குரிய விஷயங்களிலும் அவரது கருத்துக்களை அறியப் பல இடங்களிலிருந்தும் மக்கள் அவரைத் தேடி வந்தனர்.

அப்பய்யசார்யார் ஏறக்குறைய கி.பி. 1900ல் தனது 70-வது வயதில் மகா சமாதியடைந்தார்.

மகாமேதை, தீர்க்க தரிசி, உயர்ந்த பக்தர், ஞானி, சிறந்த எழுத்தாளர், கவிஞர், மேலாக ஒரு மாமுனிவர் - அத்தகைய அப்பய்யசார்யரது புகழ் வாழ்க அவரது ஆசிகள் நமக்குக் கிட்டட்டும்!

# 16. போதனா

ஆந்திரப்பிரதேசத்திலுள்ள கடப்பா ஜில்லாவில் ஒண்டிமிட்டா என்னும் கிராமத்தில் கி.பி. 1400 லிருந்து 1475 வரை வாழ்ந்தார். போதனா. அவர் முதலில் முறையான பள்ளிப்படிப்பில்லாத கல்வி அறிவில்லாத ஒருவராகவே இருந்தார். ஒரு நாள் வயலில் மாடு மேய்த்துக்கொண்டிருந்த போது யோகி ஜிதானந்தர் அவரைக் கண்டு அவருக்கு ஞான தீட்சை அளித்தார். யோகியின் ஆசியால் போதனர் அறிவுத்திறனின் விழிப்போடு ஆன்மீக ஞானமும் பெற்றார்.

தெலுங்கு தேசம் முழுவதிலும் போதனா மிக்க மதிப்புடனும் மரியாதையுடனும் போற்றப்படுகிறார். போதனாவினால் தெலுங்குச் செய்யுள் வடிவமாக இயற்றப்பட்ட பாகவதம் மிகப் புகழ் வாய்ந்தது. நாராயண சதகம், போகினி தாண்டகம், வீரபத்ர விஜயம் இவை போதனா இயற்றிய மற்ற நூல்கள்.

போதனா ஓர் ஏழ்மையான பிராம்மணக்குடும்பத்தில் பிறந்தவர். கேசனா என்பது அவரது தந்தையின் பெயர். தாய் லக்ஷ்மம்மா. வறிய நிலையிலிருந்தும் கூட போதனா தன் விருந்தினர்களை முழு மனதுடன் உபசரிப்பார். அவர் தன் சௌகரியங்களைப் பற்றிச் சிறிதும் எண்ணார். அவர் ஒரு கவிஞர் மட்டுமன்றி யோகியும்கூட. இராமபிரானது பக்தர். இராமபிரானே அவர் முன் காட்சியளித்துப் பாகவதத்தைத் தெலுங்கில் எழுதுமாறு பணித்தார்.

மிகச் சிறந்த பண்டிதரும், அரசவைக் கவியுமான ஸ்ரீநாதர் போதனாவின் உறவினர். ஒரு நாள் அவர் போதனாவைக் காண ஒரு பல்லக்கில் சென்றார். போதனா வயலில் அமர்ந்து கொண்டு பாகவதம் எழுதிக் கொண்டிருந்தார். அவரது மகன் மல்லண்ணா உழுது கொண்டிருந்தார். ஸ்ரீ நாதர் முன்னாளிருந்த பல்லக்குத் தூக்கிகளை பல்லக்கை

விட்டு விட்டு விலகுமாறு கூறினார். ஆயினும் பல்லாக்கு முன்போலவே நகரமுடிந்ததை போதனாவுக்குக் காட்டினார். உடனே போதனா தன் மகனை நுகத்தடியின் ஒரு புறத்து மாட்டை அவிழ்த்துவிடச் சொன்னார். ஆனால் கலப்பை ஒரு மாட்டுடனேயே முன்போலவே நகர்ந்தது. பின்னர் ஸ்ரீநாதர் பின்புறமிருந்த பல்லக்குத் தூக்கிகளையும் விலகச் சொன்னார். பல்லக்கு முன்போலவே நகர்ந்தது. போதனா மற்றொரு மாட்டையும் அவிழ்த்து விடச் சொன்னார் என்றும் கலப்பை தானாகவே உழுதது. இதைக்கண்ட ஸ்ரீநாதர் தன் அகந்தைக்காகவும் இறுமாப்புக் காகவும் போதனாவின் மன்னிப்பை வேண்டினார்.

ஸ்ரீநாதர், போதனாவிடம், தாம் இயற்றிய பாகவதத்தை அரசருக்கு சமர்ப்பிக்குமாறு கூறினார். இதனால் அரசரிடமிருந்து நல்ல வெகுமதி பெறலாமென்றும் போதனாவின் வறுமை நீங்கும் என்றும் கூறினார். போதனா இதற்கு முடிவான, எத்தகைய பதிலும் அளிக்காது மௌனமாக இருந்தார்.

ஸ்ரீ நாதர், போதனா தன் பாகவத நூலை அரசருக்கு சமர்ப்பிக்க இசைந்ததாக அரசரிடம் தெரிவித்தார். அவரும் இந்த நற்சைய்தியைக் கேட்டு மிகவும் மகிழ்ந்து போதனாவின் வருகைக்காக ஆவலுடன் காத்திருந்தார். ஆனால் போதனா வரவில்லை. போதனா அரசரிடமிருந்து கிடைக்கக்கூடிய வெகுமதியைத் துரும்பாக கருதித் தன் நூலை இராம்பிரானுக்கே சமர்ப்பணம் செய்தார். இதனால் கடுஞ்சினம் கொண்ட அரசர் போதனாவை பல விதங்களிலும் துன்புறுத்தலானார். போதனவைக் கைது செய்ய அனேக் படைவீரர்களை அரசர் அனுப்ப, இறைவன் பன்றி வடிவம் கொண்டு எல்லா வீரர்களையும் கொன்றார். அரசர் போதனாவின் வீட்டுக்குத் தீ வைக்குமாறு தன் வீரர்களுக்கு ஆணையிட்டார். ஆனால் ஸ்ரீ ஹனுமன்

போதனாவின் வீட்டைக் காக்க ஸ்ரீ விஷ்ணுவின் சக்கரம் போதனாவின் நூலைக் காத்தது. மாறாக, அரசரது மாளிகை தீப்பற்றி எரிந்தது.

போதனா அக்கிராமத்திலிருந்து வெளியேற்றப்பட்டார். இதன் விளைவாக அரசர் தன் செல்வத்தையும் அரசையும் இழந்தார். அரசர் தன் கொடிய செயல்களுக்காக வருந்தி போதனாவை அழைத்து மன்னிப்புக் கோரி அவருக்கு அளவில்லாத செல்வம் அளித்து அவரது கிராமத்தையும் பரிசாக அளித்தார்.

போதனாவின் பாகவதத்தில் கஜேந்திர மோட்சம் பற்றிக்கூறும் அத்தியாயத்தைப் பற்றி ஸ்ரீநாதர் சில கருத்துக்களைத் தெரிவித்தார். கஜேந்திரனைக் காப்பாற்ற வந்த ஸ்ரீ நாராயணன் தன் சார்ங்கத்தைக் கொண்டு வராதது எவ்விதம் என்று வினா எழுப்பினார். போதனா, ஸ்ரீ நாதருக்கு ஒரு பாடம் கற்பிக்க எண்ணினார். ஸ்ரீ நாதரின்மகனை பாதுகாப்பான ஓரிடத்தில் ஒளித்து வைத்துவிட்டு ஸ்ரீநாதரிடம் அவர் உணவருந்தும் வேளையில் அவர் மகன் கிணற்றில் விழுந்துவிட்டான் என்று கூறினார். உணவை விட்டு விட்டுக் கைகளைக் கழுவாமலேயே ஸ்ரீநாதர் அக்கிணற்றுக்கு ஓடி வந்தார். " ஒரு கயிறோ அல்லது வேறு ஏதாவதோ இல்லாமல் எப்படிக் குழந்தையைக் காப்பாற்றுவீர்கள்?" என்று போதனா வினவினார். பின்னர் அவர் மகன் பாதுகாப்பாக இருப்பதாகக் கூறி, ஸ்ரீ நாராயணரின் கவலை, தன் மகன் கிணற்றில் வீழ்ந்துவிட்டதாகக் கேள்விப்பட்ட ஸ்ரீநாதரின் கவலையை விட மிக அதிகம் என்றும், அந்நிலையில் எவ்விதம், எதைக் கொண்டு காப்பாற்றுவது என்று எண்ணங்கள் எழுவில்லை என்று விளக்கினார் போதனா. இவ்விளக்கம் ஸ்ரீநாதரின் உள்ளத்தைத் தொட்டது. அவருக்கு ஒரு பாடமாகவும் அமைந்தது. அதிலிருந்து அவர் இறைவனது பக்தரானார்.

இறைவனின் சேவையிலேயே தன் எஞ்சியுள்ள வாழ்நாட்களைக் கழித்துவிட்டு போதனா அழிவில்லாத ஆனந்த நிலையை அடைந்தார்.

## 17. முக்தா பாய்

பூனேயின் அருகிலுள்ள ஆலந்தியில் வசித்து வந்த விட்டல்பந்த் ருக்மாபாய் இவர்களுக்கு நான்கு குழந்தைகள் - நிவ்ருத்திநாதர், ஞானதேவர், ஸோபன், முக்தாபாய். நிவருத்திநாதர் சிவபிரானின் அவதாரமாகவும், ஞானதேவர் ஸ்ரீகிருஷ்ணரின் அவதாரமாகவும் ஸோபன் பிரும்ம தேவரின் அவதாரமாகவும் கருதப்படுகிறார்கள். முக்தாபாய் சரசுவதி அல்லது ஆதி சக்தியே மனித உருவெடுத்து வந்தாகக் கூறப்படுகிறார்.

இளமைக் காலத்திலிருந்தே விட்டல் பந்த் உண்மையை நாடுபவராக இருந்து வந்தார். வீட்டை விட்டு வெளியேறி காசிக்குச் சென்று துறவறத்தை மேற்கொண்டார். விட்டல் பந்தின் குரு இவர் மணமானவர் என்றும், இளமையான மனைவியை விட்டு விட்டு வந்தார் என்றும் அறிந்து அவரை உடனேயே தன் கிராமத்திற்குச் சென்று இல்லறத்தானாக வாழ்வை நடத்த ஆணையிட்டார். அதன்படியே விட்டல் பந்த் மனைவியுடனும் நான்கு குழந்தைகளுடனும் வாழ்வைத் தொடங்கினார். ஆனால் கிராமத்து மக்கள் இவர்களை இகழ்ச்சியுடனும் மோசமான முறையிலும் நடத்தினார்கள். இதனால் பெற்றோர்கள் மனம் உடைந்து உயிரிழக்க, குழந்தைகள் மிகச் சிறிய வயதிலேயே அநாதைகளாக ஆயினர்.

நிவர்த்திநாதன் தன் சகோதர்களையும் சகோதரியையும் வளர்த்து வரலானார். கஹினி நாதர் நிவருத்தியின் குரு நிவருத்தி ஞானதேவருக்கும் ஆசான். இவ்விதமே ஞான தேவர் ஸோபனுக்கும் முக்தாபாய்க்கும் குருவானார்.

பண்டரிபுர விட்டலரிடம் மிக்க ஈடுபாடு கொண்டு நால்வரும் பக்தியுடனும், பரிசுத்தமாகவும் வாழ்ந்தனர்.

மூத்த மகனான நிவ்ருத்திக்கு உபநயனம் செய்யும் தருணம் வந்த போது அங்கிருந்த அந்தணர்கள் அவர் ஒரு துறவியின் மகனானதால் இந்தச் சடங்கைச் செய்ய மறுத்தனர். அறியாமை மயக்கத்திலிருந்து அவர்களை விழிப்பூட்ட ஞானதேவர் தன் கைகளை ஓர் எருமையின் மீது வைத்து அதை வேதங்களை இசைக்கச் செய்தார். இதன் மூலம் பிராமணீயம் என்பது சடங்குகளோ அல்லது பிடிவாதமான கொள்கைகளோ அன்று என்றும் தூய உள்ளம், நல்லொழுக்கம் இவற்றையே சார்ந்தது என்றும் அவர்களுக்கு விளக்கினார்.

ஒருமுறை புகழ் பெற்ற இந்தச் சகோதரர்களைக் காண சங்கதேவர் ஒரு புலியின் மீதேறிச் சென்றார். ஞானதேவர் ஒரு சித்தர். எனவே சங்கதேவருக்கு இணையாகுமாறு தன் சகோதரர்களுடனும், தங்கையுடனும் தங்கள் வீட்டையே நகரச் செய்து சங்கதேவரை வரவேற்றார். சங்கதேவர் தன் அகந்தைக்கு வெட்கித் தலை குனிந்து ஞானதேவரின் சிறப்பை ஒப்புக் கொண்டார். ஞானதேவர் தன் 21 வது வயதிலேயே 'ஜீவ சமாதி'யை அடைந்தார். ஒரு குகையில் தன்னை அடைத்துக் கொண்டு தன் மூச்சை 'பிரம்மரந் திரத்திற்கு எடுத்துச் சென்றார்; கீதைக்கு அவர் எழுதிய 'ஞானேசுவரி' எக்காலத்தும் நிலைத்து நிற்கும்.

முக்தாபாய் தன் வாழ்நாள் முழுவதும் கன்னியாகவே இருந்து குற்றமற்ற முழுமை பெற்றாள். அவள் சங்க தேவரின் குரு முக்தாபாயும் அவரது சகோதரர்களும் ஆசிரமத்தில் அமர்ந்திருந்தனர். அவ்வழியே வந்த சங்கதேவருக்கு நன்கு உடையணிந்த முக்தாபாய் நிர்வாணமாகத் தோற்றமளிக்க உடனேயே அவர் திரும்பிச் சென்றார். அவர் இன்னமும் பாலுணர்வும் அதன்

காரணமாக வெட்க உணர்வும் கொண்டிருந்தார் என்றும் அவர் ஒவ்வொரு உயிரிலும் கடவுளையே காணும் முழுப் பக்குவ நிலையை அடையவில்லை என்றும் முக்தாபாய் அவருக்கு விளக்கினார். இவ்வாறு அறிவுறுத்தப்பட்ட சங்கதேவர் கடும் சாதனை செய்து தன் பலவீனத்தை வென்றார்.

ஒருமுறை பண்டரிபுரத்துக் கோவிலில் பக்தர்கள் குழாம் ஒன்றுகூடியிருந்தது சங்கதேவர், கோராகும்பர் ரோஹிதாசர், நாமதேவர், சோகமேலா போன்ற பல பக்தர்களும், ஞானிகளும் இருந்தனர். முக்தாபாய், நாமதேவரை ஞானப்பாதையில் வழிப்படுத்த நினைத்து கோராகும்பரை அங்கு கூடியிருந்த யாவரையும் முழுமை பெற்றவர்களா என்று சோதிக்கச் சொன்னார். கோராகும்பர் ஒரு குயவர். பானைகள் நன்கு பதமாக்கச் சுடப்பட்டு விட்டனவா என்று அறிய குயவர்கள் செய்யும் சோதனை அப்பானைகளைத் தட்டி நோக்குவதுதான். அதே போலவே கோராகும்பர் ஒவ்வொருவரது தலையையும் தட்டிக் கொண்டே வந்தார். நாமதேவரின் தலையையும் அவ்விதமே தட்டியபோது அவர் வலியால் கூவி விட்டார். உடனேயே கோராகும்பர் "இந்தப்பானை நன்கு சுடப்படவில்லை" என்று கூறினார். நாமதேவர் உடனேயே கண்ணபிரானிடம் ஓடிக் கூட்டத்தில் நடந்ததைக் கூறி வருந்தினார். கண்ணனும் ஆம் நாமதேவனே நீ இன்னமும் நன்கு பதப்படவில்லை. நீ இன்றும் மிக உயர்ந்த மெய்யுணர்வு அடையவில்லை. கேச்சரஸ்வாமியிடம் சென்று ஞான தீட்சை பெறுவாய்" என்றருளினார். எட்டு வருடங்கள் ஆயிரக்கணக்கான பக்தர்களை அறிவொளி கொடுத்து வழிப்படுத்தினார் முக்தாபாய். பின்னர் அவர் முடிவில்லாத எல்லையற்ற ஆனந்தத்தின் இருப்பிடமான இறைவனடி சேர்ந்தார்.

# 18. ரபியா

ஹஸரத் ரபியா ஓர் உயர்ந்த இஸ்லாமிய ஞானி. அவள் இறைவனிடம் தீவிர ஈடுபாடு கொண்டவள். தூய்மையும் கடவுள் பக்தியும் கொண்ட அவள் கடும் தவம் செய்தாள். அவள் இதயம் இறையன்பு என்னும் நெருப்பால் சுடர்விட்டு ஒளிர்ந்தது. இறைவனிடம் ஒன்றித் தன்னையே இழந்தவள். சிறுவயதிலேயே இறைவன் பால் எல்லையில்லா ஈடுபாடு கொண்டிருந்தாள்.

ரபியா கி.பி.717-ல் பாஸ்ராவில் ஒரு வறிய குடும்பத்தில் பிறந்தாள். அவளுக்கு மூன்று சகோதரர்கள் இருந்தனர். கடும் பஞ்சத்தில் அவள் பெற்றோர் இறக்க ரபியா ஒரு செல்வந்தருக்கு அடிமையாக விற்கப்பட்டாள்.

ஒரு நாள் அவள் தனது இளமைப்பருவத்தில் நடந்து கொண்டிருக்கையில் ஒரு மனிதன் அவளருகே வந்தான். அவனிடமிருந்து தப்பிக்க ரபியா ஓடுகையில் கீழே வீழ்ந்து தன் மணிக்கட்டை முறித்துக் கொண்டாள். தன் தலையைத் தாழ்த்தி மண்ணில் வைத்து அவள் கடவுளை வேண்டினாள்- "இறைவா, நான் தாய் தந்தையற்ற அநாதை ஏழை, மேலும் அடிமை. என் கையையும் முறித்துக் கொண்டுள்ளேன் எனினும் இவையாவும் என்னை வருத்தவில்லை. நான் உன் மனமகிழ நடந்து கொள்ளவே விரும்புகிறேன். நீ என் நடத்தையினால் திருப்தி அடைந்தாய் என அறிய முடிந்தால் நான் மகிழ்வேன்".

ரபியாவின் எஜமானன் ரபியாவுக்குக் கடுமையான வேலைகள் நிறையக் கொடுத்தான். இருப்பினும் ரபியா நாள் முழுவதும் உண்ணாவிரதம் இருந்து இரவின் பெரும் பகுதியை பிரார்த்தனையிலும் தியானத்திலும் கழித்தாள்.

ஒரு நாள் ரபியாவின் எஜமானன் இரவில் சில ஓசைகளைக் கேட்டு விழித்துக் கொண்டான். தன்

அறையின் ஜன்னல் வழியாகக் கீழே நோக்கிய போது ரபியா கீழே முற்றத்தில் தலை வணங்கி இறைவனைப் பிரார்த்தனை செய்வதைக் கண்டான். "போற்றுதற்குரிய என் தலைவா! என் உள்ளத்தை முன்பேயே நன்கு அறிவாய். என் விழிகள் என்றும் உன்னை நோக்கியே திரும்பியுள்ளன என்றும் உன்னை வழிபட விரும்புகிறேன். என்னை ஓர் அடிமையாக ஆக்கியுள்ளாய். நான் என்ன செய்வேன்? எவ்விதம் உனக்கு இடையறாது பணிசெய்வேன்? நான் அடிமையாதலால் இரவு மட்டுமே உன்னை வழிபட முடிகிறது".

ரபியாவின் எஜமானன் ரபியாவின் தலைக்கு மேலே காணப்பட்ட பேரொளி அவ்வீடு முழுவதற்கும் ஒளியூட்டுவதைக் கண்டு வியப்பில் மூழ்கினான். ரபியா ஒரு சிறந்த பக்தை என்பதை அறிந்தார். மறுநாளே அவளை விடுவித்ததோடன்றி அவளது மன்னிப்பையும் வேண்டினான். ரபியா உடனேயே நகரை விட்டு பாலைவனத்தின் நடுவே ஒரு குடிசையில் வசிக்கலானார். சில காலத்திற்குப் பின் அவர் பாஸ்ராவுக்குத் திரும்பிவந்துத் தன் வாழ்வின் இறுதிவரை, 50 வயது வரை, வாழ்ந்தார்.

ரபியா தனிமையையே பெரிதும் விரும்பினார். வறுமையைத் தழுவி, அவர் மிக எளிமையான வாழ்வு வாழ்ந்து வந்தார். அவரது சீடர்கள் மிகச் செல்வந்தர்களாக இருந்த போதும் ரபியா ஓர் இடிந்த குடிசையிலேயே வசித்தார். அவரிடமிருந்ததெல்லாம் ஓரிரண்டு மண்தட்டுக்களும், உடைந்த ஜாடி ஒன்றும் ஓரிரண்டு உடைகளும் மட்டுமே. அவர் அடிக்கடி உண்ணாவிரதம் மேற்கொண்டு இரவும் பகலும் பிரார்த்தனையிலும் தியானத்திலுமே கழித்தார். அவரது ஆசிகளையும், அவரிடம் ஆன்மீகம் பற்றிய போதனைகளையும் பெறப் பலரும் அவரது குடிசைக்குச் சென்றனர். ரபியாவைத் திருமணம்

செய்து கொள்ள விருப்பம் தெரிவித்துப் பலரும் வந்தனர். ஆனால் "நான் இறைவனிடம் ஈடுபாடும் விசுவாசமும் கொண்டவள். மனித உறவுகளில் எனக்கு ஆசை இல்லை. நான் கடவுளிடம் மட்டுமே சிரத்தையுடையவள். அப்படியிருக்க என் உள்ளத்தையும் எண்ணங்களையும் ஈடுபடுத்திக் கொள்ள ஒரு கணவன் எவ்விதம் தேவைப்படுவான்? ஒரு கணமேனும் இறைவனிடமிருந்து மனதைத் திருப்புவது என் மனதிற்குகந்த செயல் அன்று" என்று உறுதியாகக் கூறிவிட்டார்.

## ரபியா விளைவித்த சில அற்புதங்கள்

வெகுமதிகளை எதிர்பார்த்தோ அல்லது தண்டனைக்கு அஞ்சியோ அன்றிக் கடவுளை அவருக்காக மட்டுமே அன்பு செலுத்துவதும் வணங்குவதுமே உயர்ந்தது என்று ரபியா மிக அழுத்தமாக அறிவுறுத்தினார். கடவுள் நம் அன்பிற்குரியவன். எனவே பக்தன் தன் எல்லாவற்றையும், தன் கருத்தில் உறுதியையும் கூட, விட்டுவிட்டுக் கடவுளின் சித்தத்திற்குத் தன்னை முழுமையாக ஆட்படுத்திக் கொள்ள வேண்டும். தன் எல்லா, ஆசைகளையும், தன் விடுதலை பற்றிய ஆசையைக் கூட, துறக்க வேண்டும் என்று போதித்தார்.

ரபியா மெக்காவை நெருங்கும்போது காபாவே தன் இடத்தை விட்டு அவரை வரவேற்க வந்தது. ஆனால் ரபியாவோ "நான் வீட்டின் தலைவரையே காண வந்திருக்கிறேன். வீடு எனக்கு எப்படித் தேவையாக இருக்க முடியும்?" என்று கூறினார். ரபியா புனிதப் பயணம் செய்யும் போது அவருடைய ஒட்டகம் இறந்துவிட்டது. எனவே, பக்தர்கள் பயணத்தில் அவர் பின்தங்க வேண்டியதாயிற்று. அந்த ஒட்டகம் உடனேயே உயிர்த்தெழுந்து வந்தது.

ஒரு நாள் வீட்டில் விளக்கு இல்லை. சில மெய்ஞ்ஞானிகள் ரபியாவைக் காண வந்தனர். ரபியா தன் விரலை ஊத அது இரவு முழுவதும் ஒளியைக் கொடுத்தது. அவர் மலைகளில் நடக்கும்போது விலங்குகளும் பறவைகளும் அவரைச் சுற்றி வரும்.

## சில நிகழ்ச்சிகளும் விவரணங்களும்

ஸூஃபி என்னும் மறை மெய்ஞ்ஞானிகள் கூடியிருந்த ஒரு கூட்டத்தில் ஹஸான்"கடவுளால் அளிக்கப்படும் தண்டனையைப் பொறுமையோடு ஏற்காதவன், தான் பக்தன் என்று உரிமை பாராட்டுவதில் உண்மையானவன் அல்ல" என்று கூறினார். ரபியா "அவரது வார்த்தைகளில் 'தான்' என்னும் அகந்தை இருப்பதை உணர்கிறேன்" என்றார். ஷாகுக் பின்வருமாறு கூறினார் - "கடவுளின் தண்டனைக்காகக் கடவுளுக்கு நன்றியுள்ளவனாக இல்லாதவன் உண்மையான பக்தன் அல்லன்". ரபியா இந்தக் கூற்றை விட இன்னும் மேன்மையானதொன்று தேவை என்று விரும்பினார். மாலிஹ்தினார் "எவன் கடவுளின் தண்டனையில் மகிழ்ச்சியடையவில்லையோ அவன் உண்மையான பக்தன் அல்லன்" என்றார். ரபியா "இதுவும் அவ்வளவு பொருத்தமானதாக இல்லை" என்றார். யாவரும் ரபியாவையே பேசுமாறு கூறினார்கள். "எவனொருவன் கடவுள் தனக்குக் கொடுத்த தண்டனையை மறக்கவில்லையோ அவன் உண்மையான பக்தன் என்று உரிமை பாராட்டமுடியாது" என்று விளக்கமாகக் கூறினார் ரபியா.

தலையைச் சுற்றி ஒரு கட்டுடன் ஒருவன் அங்கிருப்பதைக் கண்டார் ரபியா. என்ன விஷயம் என்று விசாரித்த போது அவன் தனக்குத் தலைவலி இருப்பதாகக் கூறினான். ரபியா அவனது வயது என்னவென்று வினவினார். அவன் தான் 30 வயதுள்ளவன் என்று கூற ரபியா "உன் வாழ்நாளில்

பெரும் பகுதியில் இத்தகைய வலியும் தொல்லையும் இருந்தனவா?'' என்று கேட்டார். அவன் "இல்லை. இவ்விதம் நான் தலைவலியால் துன்புறுவது இதுவே முதற்தடவை'' என்றான். 30 வருடங்களாக இறைவன் உன்னை நல்ல ஆரோக்கியமுள்ளவனாக வைத்திருக்கிறார். எனினும் அவரிடம் நன்றியென்ற கட்டினை அந்த ஆரோக்கிய நிலைக்குப் போடவில்லை. ஆனால், உன் தலையில் ஓர் இரவு வலிக்குக் கடவுளிடம் குறை காணுதல் என்னும் கட்டைப் போட்டிருக்கிறாய்'' என்று சுட்டிக்காட்டினார் ரபியா.

ஒரு நாள் ரபியா ஒருவரிடம் சிறிது பணம் கொடுத்து துணியொன்று வாங்கி வருமாறு கூறினார். அம்மனிதன் திரும்ப வந்து 'அம்மா, எந்த நிறமுள்ள துணி வாங்குவது?'' என்று கேட்டான். "நிறம் பற்றிய கேள்வி இது. நிறம் புலனுணர்வைச் சார்ந்தது. எனவே பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிடு" என்று கூறிப் பணத்தைப் பெற்றுக் கொண்டு அதை டைக்ரிஸ் நதியில் வீசி எறிந்து விட்டார்.

மற்றொரு நாள் ரபியா ஒரு கையில் நெருப்பும் மற்றொரு கையில் ஒரு வாளி தண்ணீரும் ஏந்தி ஓடிச் செல்வதை மக்கள் கண்டு அவர் எங்கே செல்கிறார் என வினவினார்கள். ரபியா "நான் சொர்க்கத்திற்குத் தீவைத்து நரகத்தின் தீயை அணைக்கப் போகிறேன். அப்போதுதான் புனிதப்பயணிகளுக்கு இரண்டு திரைகளும் மறைந்து அவர்களுடைய நோக்கம் தெளிவாகும். கடவுளின் பணியில் சொர்க்கத்தைப் பற்றிய நம்பிக்கையோ அல்லது நரகத்தைப் பற்றிய அச்சமோ இல்லாமல் கடவுளை கடவுளாகவே அறிவார்கள்'' என்று விளக்கினார்.

ரபியாவை கடவுளை ஏன் வணங்குகிறீர் என்று கேட்ட போது அவர் "எனக்குக் கைகள் இருக்கின்றனவே, கடவுளை வணங்குவதற்கு இந்தக் காரணம் போதாதா? எந்த

உள்நோக்கமுமின்றி வணங்கத்தக்கவர் இறைவன்" என்றார் மற்றொரு சமயம் ரபியா "நான் நரகத்தின் பயம் காரணமாக வழிபடவில்லை. அப்படிச் செய்திருந்தால் நான் ஒரு கேவலமான கூலிக்காரனாவேன். சொர்க்கத்தின் மோகம் காரணமாகவும் கடவுளை வணங்கவில்லை. அப்படியிருந் தால் நான் ஒரு விசுவாசமில்லாத சேவகன் ஆவேன். நான் எந்தவித வெகுமதி கருதியும் இறைவனுக்குப் பணிவிடை செய்யவில்லை. அவரிடம் கொண்ட அன்பு காரணமாகவே நான் அவருக்குப் பணி செய்துள்ளேன்" என்று தெளிவாக உரைத்தார்.

ஒரு செல்வந்தர் ரபியாவுக்குப் பணம் அளிக்க முன் வந்தார். "உண்மையைச் சொல்லப் போனால் நான் இந்த உலகம் முழுவதையும் தனதாகக் கொண்ட இறைவனிட மேயே இகவாழ்வுக்குரிய பொருட்களை யாசிப்பதில் வெட்கம் அடைகிறேன். அப்படியிருக்க இந்தப் பொருட்களை அவற்றுக்குச் சொந்தமில்லாத ஒருவரிடமிருந்து எப்படிப் பெற்றுக் கொள்வேன்?" என்று கூறி மறுத்தார். மற்றொருவர் ஓர் அழகிய வீட்டைக் கட்டி ரபியாவை அங்கே வசிக்க வேண்டினார். ரபியா அங்கே சென்று அந்த வீட்டின் நேர்த்தியைக் கண்டு அதைப் பாராட்டி விட்டு உடனேயே "என் விருப்பத்தை மறந்துவிட்டு இந்த வீட்டிடம் மனதைப் பிணைத்துக் கொண்டு விடுவேன் என்று அஞ்சுகிறேன். கடவுளின் சேவையில் என்னை அர்ப்பணம் செய்து கொள்வதே என் விருப்பம்" என்று கூறித் திரும்பிவிட்டார்.

"எப்போது கடவுளின் சேவகன் உண்மையாக, முழுமையாக, எதிர்ப்பின்றிக் கடவுளை ஏற்றுக் கொள்கிறான்?" என்று ஒருவர் கேட்க, ரபியா "எப்போது துரதிருஷ்ட நிலையில் அவன் அடையும் துன்பமும் வளமிக்க நிலையில் அடையும் இன்பமும் சமமாக உள்ளதோ அப்போது" என்று பதிலளித்தார்.

சில ஸூஃபிகள் "எவன் தட்டுகிறானோ அவனுக்குக் கதவு திறக்கப்படுகிறது" என்று சொன்னார்கள். ஆனால் ரபியாவோ" எவ்வளவு காலம் நீ தட்டுவாய்? யார் திறப்பார்கள்? யார் மூடியது?' என்று வாதம் செய்தார்.

ஒருவன் ரபியாவிடம் நீங்கள் என்ன விரும்புகிறீர்கள்?" என்று வினவினான். ரபியா அதற்குப் பின்வருமாறு பதிலளித்தார். "நான் ஒரு சேவகன். ஒரு சேவகன் எவ்வாறு ஆசையுள்ளவனாக இருக்கமுடியும்? நான் ஒரு பொருளை வேண்ட இறைவன் சித்தம் வேறாக இருந்தால் அது என் நம்பிக்கையின் குறைவாகும். எது கடவுள் சித்தமோ அதுவே வேண்டப்பட வேண்டும். அப்போதுதான் நாம் கடவுளின் உண்மையான சேவகனாக ஆவோம்"

### ரபியாவின் கூற்றுக்கள்

இந்த உலகை இழிவாகக் கருதுங்கள். ஏனெனில் நீங்கள் உலகை ஏளனமாக நோக்கும் போது தான் அது உங்களுக்கு இனிமையானதாக இருக்கும்!

பக்தன் தன் தலைவனுக்கு அருகில் இருக்க விரும்பினால் இவ்வுலகில் அவனைத் தவிர வேறொன்றையும் தனக்கென உடைமையாக்கிக் கொள்ளக் கூடாது.

நீங்கள் உங்கள் தீய செய்கைகளை மறப்பது போல நீங்கள் செய்யும் நல்ல செய்கைகளையும் மறக்க வேண்டும்.

## 19. ஆவுடையக்காள்

சிவபக்தர்கள் சிவபிரான், காலடியில் ஆதிசங்கராச் சார்யாராக அவதரித்தார் என்று பொதுவாக நம்புகிறார்கள். அவ்விதமே தாயார் பார்வதி செங்கோட்டையைச் சேர்ந்த ஸ்ரீ ஆவுடையாராக அவதரித்தார் என்று நம்பப்படுகிறது. இக்கலியுகத்தில் பெண்களும் தன்னறிவு பெற்றுய்ய முடியும் என்பதை நிரூபிக்கவே அவர் அவதாரம் செய்தார் என்று கருதப்படுகிறது.

தென் இந்தியாவில் உள்ள செங்கோட்டையில் சைவ, வடம இனத்தைச் சேர்ந்த மிகப் பக்திமான்களான பெற்றோருக்குப் பிறந்தவர் ஆவடை. சிறுவயதிலேயே அவளிடம் மிக உயர்ந்த மனநிலையை அடைவாள் என்பதன் அறிகுறிகள் காணப்பட்டன. அவள் பிறர் சொன்னாலன்றித் தானாகவே ஏதும் செய்யமாட்டாள். கொடுக்கப்பட்ட உணவை உட்கொள்வாள். அளிக்கப்பட்ட ஆடையை அணிவாள். எங்கு போகுமாறு பணிக்கப் படுகிறாளோ அங்கு போவாள். எதைச் செய்யுமாறு சொல்லப்படுகிறாளோ அதைச் செய்வாள். அவள் சிறுமியாக இருக்கும் போதே ஒரு பிராம்மணப் பையனுக்கு மணமுடிக்கப்பட்டாள்...

ஆவடை வயதிற்கு வந்ததும் அவளது பெற்றோர்கள் அவளது சாந்தி முகூர்த்தத்திற்கு நாள் குறித்தனர். அழகாக அலங்கரிக்கப்பட்டு ஆவடை அவளது உறவினர்களால் மணவறைக்கு அழைத்துச் செல்லப்பட்டாள். அவளை உள்ளே அனுப்பிவிட்டுக் கதவை அடைத்துவிட்டுத் திரும்பிவிட்டனர். அவளது கணவன் படுக்கையில் அமர்ந்து கொண்டு அவளையே கவனித்துக் கொண்டிருந்தான். ஆவடையோ தன்னை உறவினர்கள் விட்டுச் சென்ற இடத்திலிருந்து நகரவில்லை. மணமகன் படுக்கையிலிருந்த பூமாலையை எடுத்து முகர்ந்தான். அதிலிருந்த ஒரு விஷமுள்ள நாகம் அவனைத் தீண்ட அவன் நினைவிழந்து வீழ்ந்தான். சிறிது நேரத்தில் ஆவடையின் கணவன் இறந்தான்.

மறுநாள், வழக்கத்தில் இருந்த முறைப்படி வீட்டின் பெண்கள் மணவறைக் கதவைத் திறந்து உள்ளே வந்தனர். ஆவடை அவர்கள் விட்டுச் சென்ற அதே இடத்திலேயே வேரூன்றியது போல நின்று கொண்டிருந்ததைக் கண்டு வியப்படைந்தனர். ஏன் அவ்விதம் நின்று கொண்டிருந்தாள் என அவளை வினவ, "என்ன, நீங்கள் தானே என்னை

இங்குநிற்கச்சொன்னீர்கள்?" என்று ஆவடை பதிலளித்தாள். அவள் கணவனைக் கண்ட அப்பெண்கள் சிறிது சந்தேகத்துடன் படுக்கை அருகே சென்று நோக்க அவன் இறந்து போயிருந்ததைக் கண்டனர் இந்தத் துயர நிகழ்ச்சிக்கு ஆவடையின் துரதிருஷ்டமே காரணம் என்று அவர்கள் கருதினார்கள். அவளையும் அவளது கணவன் உடலையும் அறைக்கு வெளியே கொண்டு வந்தனர்.

இறுதிச் சடங்குகள் முறைப்படி செய்யப்பட்டன. ஆவடையின் தலையில் முடி நீக்கப்பட்டு, அணிகள் அகற்றப்பட்டு, அவளுக்கு வெண்ணிற ஆடை கொடுக்கப்பட்டது. ஆவடைக்குத் தன் கணவன் இறந்ததால் ஏற்பட்ட இழப்பைக் குறித்து எவ்விதமான உணர்ச்சியும் இல்லை. சமூகம், அவளை ஒரு விதவை என்றும், அபசகுனத்தின் உருவம் என்றும் அறிவித்தது; அவள் தன் அறையை விட்டு வெளியே வருவதோ, எந்தக் கொண்டாட்டத்திலும் கலந்து கொள்வதோ கூடாது என்றும் தடை செய்தது. ஆவடை அதிகாலையிலேயே எழுந்து நதியில் நீராடிச் செல்ல வேண்டும். ஏனெனில் பிறர் எழுந்திருக்குமுன்பே அவள் தன் வீடு திரும்பிவிட வேண்டும்.

ஒரு நாள் ஆவடை நதிக்கு நீராடச் சென்றாள். நீராடு முன்பு அங்கு கிடந்த மாவிலை ஒன்றை எடுத்துப் பற்களைச் சுத்தம் செய்ய ஆரம்பித்ததுமே ஒரு அற்புதமான, அறிவிற்கு அப்பாற்பட்ட உள்ளுணர்வின் அனுபவம் அவளுக்கு ஏற்பட்டது. நடந்தது என்னவென்றால், அன்று காலை சதாசிவ பிரம்மனின் புகழ்மிக்க குருவான அய்யாவாள் என்னும் ஞானி அரசமரத்தடியில் அமர்ந்து தியானம் செய்து கொண்டிருந்தார். அந்த நதிக்கரையில் தன் பற்களைச் சுத்தம் செய்த மாவிலையை எறிந்திருந்தார். ஆவடை அந்த மாவிலையையே எடுத்து உபயோகித்திருக்க அந்த

ஞானியின் புனிதமான எச்சத்தை விழுங்கியதால், அவளது ஆத்ம ஒளியை மறைத்திருந்த சிறிது தூசும் கழுவப்பட்டுவிட்டது. தன்னுள் இருக்கும் ஆன்மாவை உடனேயே உணர்ந்தார் ஆவடை. உள்ளுணர்வு உந்த அரசமரத்தடியில் அமர்ந்திருந்த ஞானியின் பாதங்களை வந்தடைந்து சிரம்பட வணங்கினார். தன் திருக்கையை ஆவடையின் சிரசின்மீது வைத்து, அவர், 'பிரம்ம சத்யம்' என்ற மந்திரத்தை உச்சரித்தார்.ஆவடையின் இதயத்தில் ஒளி பரவியது. விவரிக்க இயலாத, உணர்விற்கு அப்பாற்பட்ட, சமாதி நிலையில் ஆழ்ந்தார் ஆவடை. சிறிது நேரத்திற்குப் பிறகு அய்யாவாள் ஒரு லிங்கத்தை ஆவடையிடம் வழிபடுவதற்காகக் கொடுத்து விட்டுச் சென்றார்.

அந்த விநாடியே சரசுவதி, ஆவடையின் நாவை இருப்பிடமாகக் கொண்டாள். ஆவடையின் அறிவுகடந்த அனுபவ நிலை தெய்வீகமான, உள்ளத்தை ஊக்கி எழுப்பும் பாடல்கள் மூலம் வெளிப்பட்டது. அவர் தனது அசாதரணமான அறிவுத் திறத்தால் யாவரையும் வியப்பில் ஆழ்த்தினார். அவர் எதைச் சொன்னாலும், எதைப் பாடினாலும் அது அவருடைய உள்ளொளியையே காட்டியது. அறிவில்லாத மக்கள் அவர் மனம் பேதலித்துவிட்டார் என்று எண்ணி அவரை, அவரது அறையிலேயே அடைத்து வைத்தனர்.

இதற்கிடையில் ஆவடையின் பெற்றோர் மறைந்தனர். இது, ஆவடைக்கு, அவரது அடைபட்ட வாழ்விலிருந்து வெளியே வந்து இயங்க விடுதலை அளித்தது. ஆவடை, தன் அறைக்கதவைத் திறந்து தன் வீடான இந்தப்பரந்த உலகிற்கு வந்தாள். இந்த இளவயதுப் பெண், ஒவ்வொரு இடமாகத் தனியாகச் சென்று, அறிவொளி வீசி, அறிவைப் பாடித் தன் அருகில் வந்தவர் எவருக்கும் அறிவைப் பரிமாறினார்.

இங்குநிற்கச்சொன்னீர்கள்?" என்று ஆவடை பதிலளித்தாள். அவள் கணவனைக் கண்ட அப்பெண்கள் சிறிது சந்தேகத்துடன் படுக்கை அருகே சென்று நோக்க அவன் இறந்து போயிருந்ததைக் கண்டனர் இந்தத் துயர நிகழ்ச்சிக்கு ஆவடையின் துரதிருஷ்டமே காரணம் என்று அவர்கள் கருதினார்கள். அவளையும் அவளது கணவன் உடலையும் அறைக்கு வெளியே கொண்டு வந்தனர்.

இறுதிச் சடங்குகள் முறைப்படி செய்யப்பட்டன. ஆவடையின் தலையில் முடி நீக்கப்பட்டு, அணிகள் அகற்றப்பட்டு, அவளுக்கு வெண்ணிற ஆடை கொடுக்கப்பட்டது. ஆவடைக்குத் தன் கணவன் இறந்ததால் ஏற்பட்ட இழப்பைக் குறித்து எவ்விதமான உணர்ச்சியும் இல்லை. சமூகம், அவளை ஒரு விதவை என்றும், அபசகுனத்தின் உருவம் என்றும் அறிவித்தது; அவள் தன் அறையை விட்டு வெளியே வருவதோ, எந்தக் கொண்டாட்டத்திலும் கலந்து கொள்வதோ கூடாது என்றும் தடை செய்தது. ஆவடை அதிகாலையிலேயே எழுந்து நதியில் நீராடிச் செல்ல வேண்டும். ஏனெனில் பிறர் எழுந்திருக்குமுன்பே அவள் தன் வீடு திரும்பிவிட வேண்டும்.

ஒரு நாள் ஆவடை நதிக்கு நீராடச் சென்றாள். நீராடு முன்பு அங்கு கிடந்த மாவிலை ஒன்றை எடுத்துப் பற்களைச் சுத்தம் செய்ய ஆரம்பித்ததுமே ஒரு அற்புதமான, அறிவிற்கு அப்பாற்பட்ட உள்ளுணர்வின் அனுபவம் அவளுக்கு ஏற்பட்டது. நடந்தது என்னவென்றால், அன்று காலை சதாசிவ பிரம்மனின் புகழ்மிக்க குருவான அய்யாவாள் என்னும் ஞானி அரசமரத்தடியில் அமர்ந்து தியானம் செய்து கொண்டிருந்தார். அந்த நதிக்கரையில் தன் பற்களைச் சுத்தம் செய்த மாவிலையை எறிந்திருந்தார். ஆவடை அந்த மாவிலையையே எடுத்து உபயோகித்திருக்க அந்த

ஞானியின் புனிதமான எச்சத்தை விழுங்கியதால், அவளது ஆத்ம ஒளியை மறைத்திருந்த சிறிது தூசும் கழுவப்பட்டுவிட்டது. தன்னுள் இருக்கும் ஆன்மாவை உடனேயே உணர்ந்தார் ஆவடை. உள்ளுணர்வு உந்த அரசமரத்தடியில் அமர்ந்திருந்த ஞானியின் பாதங்களை வந்தடைந்து சிரம்பட வணங்கினார். தன் திருக்கையை ஆவடையின் சிரசின்மீது வைத்து, அவர், 'பிரம்ம சத்யம்' என்ற மந்திரத்தை உச்சரித்தார்.ஆவடையின் இதயத்தில் ஒளி பரவியது. விவரிக்க இயலாத, உணர்விற்கு அப்பாற்பட்ட, சமாதி நிலையில் ஆழ்ந்தார் ஆவடை. சிறிது நேரத்திற்குப் பிறகு அய்யாவாள் ஒரு லிங்கத்தை ஆவடையிடம் வழிபடுவதற்காகக் கொடுத்து விட்டுச் சென்றார்.

அந்த விநாடியே சரசுவதி, ஆவடையின் நாவை இருப்பிடமாகக் கொண்டாள். ஆவடையின் அறிவுகடந்த அனுபவ நிலை தெய்வீகமான, உள்ளத்தை ஊக்கி எழுப்பும் பாடல்கள் மூலம் வெளிப்பட்டது. அவர் தனது அசாதரணமான அறிவுத் திறத்தால் யாவரையும் வியப்பில் ஆழ்த்தினார். அவர் எதைச் சொன்னாலும், எதைப் பாடினாலும் அது அவருடைய உள்ளொளியையே காட்டியது. அறிவில்லாத மக்கள் அவர் மனம் பேதலித்துவிட்டார் என்று எண்ணி அவரை, அவரது அறையிலேயே அடைத்து வைத்தனர்.

இதற்கிடையில் ஆவடையின் பெற்றோர் மறைந்தனர். இது, ஆவடைக்கு, அவரது அடைபட்ட வாழ்விலிருந்து வெளியே வந்து இயங்க விடுதலை அளித்தது. ஆவடை, தன் அறைக்கதவைத் திறந்து தன் வீடான இந்தப்பரந்த உலகிற்கு வந்தாள். இந்த இளவயதுப் பெண், ஒவ்வொரு இடமாகத் தனியாகச் சென்று, அறிவொளி வீசி, அறிவைப் பாடித் தன் அருகில் வந்தவர் எவருக்கும் அறிவைப் பரிமாறினார்.

ஆவடை திருவனந்தபுரம் அடைந்தார். வழக்கம் போல் குளத்தில் நீராடி லிங்கத் திருப்பூசை செய்ய விரும்பினாள். ஆவடையைப் பற்றியும், அவர் லிங்கத்திற்கு வில்வ இலைகளால் தவறாது பூசை செய்வதையும் கேள்விப் பட்டிருந்த அரசர் அவர் வழிபாட்டிற்காக ஒரு கூடை நிறையத் தங்க இலைகளை அனுப்பினார். ஆவடை நீராடி விட்டுத் தங்க இலைகளால் பூசை செய்தார். வழிபாடு முடிந்ததும் தங்க இலைகளைச் சேர்த்து, பூசை செய்த மலர்களை வழக்கமாக எறிவது போல, நீரில் எறிந்து விட்டார். இதைக் கேட்ட அரசன் ஆச்சரியமடைந்தார். ஆவடையின் உலகப் பற்றின்மையை நன்கு அறிந்து கொண்டார். ஆவடைக்குப் பொன்னும் இலையும் சமமே.

திருவனந்தபுரத்திலிருந்து ஆவடை பல்வேறு மதப் பிரிவுகளின் தலைவர்களது கூட்டத்திற்குச் சென்றிருந்தார். அங்கு தன் மிக உயர்ந்த ஞானத்தால் சபையோர்களைச் சிலிர்க்கச் செய்து, எல்லா மதங்களுக்கும் உள்ள ஒருமைத் தன்மையை நிலை நாட்டினார். முதலில் அங்குள்ளோர் ஆவடையைக் கேவலமாகப் பேசி அவரை "மொட்டை" என்று கீழ்த்தரமாக விளித்தனர். ஆவடை, உடனேயே, "யார் மொட்டை? என் உடலா? என் மனமா? என் மூச்சா? என் உயிரா? அல்லது என் ஆன்மாவா? நான் யார்? நான் எப்படி 'மொட்டை' யாவேன்?" என்று தக்க எதிருரை அளித்தார். முடிவில் யாவரும் அவரது தெய்வீக ஞானத்தைப் பெரிதும் புகழ்ந்து அவரை வணங்கினார்கள்.

மற்றொருமுறை ஒரு மாநிலத்தின் அரசன் ஆவடையைத் தன் அவைக்கு அழைத்து அவரைத் தான் மணக்க விரும்புவதாகக் கூறினான். "இத்தனை அழகும் இளமையும் கொண்ட நீ இவ்விதம் திரியக்கூடாது. என்னை மணந்து, என் அரசியாக எல்லாவித அதிகாரங்களும் கொண்டு என் மாளிகையில் இருப்பாய்" என்றான். ஆவடை இதற்கு ஒப்புக்

கொள்வது போல நடித்து, அரசன் தன் கேள்விகளுக்குப் பதிலளிக்க வேண்டும் என்று கூறினார். ஆவுடை கேட்ட கேள்விகள் மிக உயர்ந்தனவாகவும், மேலான கருத்துள்ளவையாகவும் இருந்தன. அரசர் தன் செய்கைக்கு வெட்கி ஆவுடையிடமே ஞான தீட்சை பெற்றுக் கொண்டார்.

ஆவுடை தன் குருவான ஸ்ரீ அய்யாவாளை மீண்டும் சந்தித்து, அவரது சீடர்கள் குழுவில் சேர்ந்தார். அந்தக் கூட்டத்தில் பெண் சீடர் ஆவுடை மட்டுமே. மற்றவர்கள் அவரைக் கேவலமாக, மிஞ்சிய உணவை அளித்துப் பராமரிக்கும் ஒரு நாயைப் போன்று நடத்தினார்களே அன்றி, ஆசிரமத்தைச் சேர்ந்த ஒரு சீடராக நடத்தவில்லை. ஸ்ரீ அய்யாவாள் அவர்களுக்குப் பாடம் புகட்ட எண்ணினார்.

ஒரு நாள் சீடர்கள் யாவரும் காவேரியின் நடுவே இருந்த ஒரு மணல் திட்டுக்குச் சென்று அங்கே தியானத்தில் அமர்ந்தார்கள். திடீரென்று நதியில் நீர்மட்டம் உயர்வதை அவர்கள் கண்டார்கள். உடனேயே ஆபத்து வருவதை அறிந்த அவர்கள் கரைக்குத் திரும்ப விரும்பினார்கள். ஆவுடை மட்டும் ஆழ்ந்த சமாதி நிலையில் இருந்தார். மற்றவர்கள் அவரைச் சோதிக்க எண்ணி, அவரை அங்கேயே விட்டுவிட்டுக் கரை திரும்பிவிட்டனர். நதியின் நீர் மிக வேகமாக உயர்ந்தது. ஆவுடை நீரில் மூழ்கியிருப்பார் எனத் தோன்றியது. அவர் சமாதியிலிருந்து எழுந்ததும் மற்றவர்கள் யாவரும் சென்று விட்டதை அறிந்தார். தன் குருதேவரை நோக்க அவர்தன் கையை உயர்த்தி "அங்கேயே நில்' என்று சைகை செய்தார். ஆவுடை அவர் ஆணைக்குக் கீழ்ப்படிந்தார். என்ன அற்புதம்! ஆவுடை மூன்று நாட்கள் அங்கேயே நிற்க, வெள்ளம் அவரது பாதங்கள் இருந்த அந்த மணல் திட்டை

மட்டும் விட்டு விட்டு உயர்ந்தது. மூன்று நாட்களுக்குப் பிறகு வெள்ளம் வடிய ஆவுடை கரை திரும்பினார்.

இதன் மூலமாகவும், இவை போன்ற மற்ற நிகழ்ச்சிகளினாலும் ஆசிரமத்திலிருந்த ஒவ்வொருவரும் இந்தப் பெண்ஞானியின் சிறப்பை அறிந்தனர். ஸ்ரீ அய்யாவாளும் ஆவுடையின் உயர்வையும், பெருமையையும் ஒளிக்காது பிறருக்கு எடுத்துரைத்தார். மக்கள் ஆவுடையாரது ஆசிகளைப் பெறக் கூட்டமாக வந்தனர். ஆவுடை பாடிக் கொண்டே வாழ்ந்தார். உபநிஷத்துக்களின் தெய்வீக ஞானம் அவரது பாடல்களின் நீரோட்டமாக உள்ளது.

## 20. புல்லா ஷா

புல்லாஷா ஒரு ஸூஃபி ஞானி. பஞ்சாபின் புகழ்பெற்ற ஞானி. மியான்மீரின் சீடர்.

ஸூஃபி தத்துவம் வேதாந்தத்தைப் பெரிதும் ஒத்தது. இதிலும் நாயகன்-நாயகி உறவு கூறப்படுகிறது. ஒரு ஸூஃபி ஞானி மதவெறியற்றவர். அவர், ஒரு வேதாந்தியைப் போல, அமைதியாகக் கலக்கமற்று, சாந்தமாக உள்ளவர். ஒரு முனிவர். அன்பும், அருளும், கருணையும் நிறைந்தவர்.

புல்லா ஷா புக்காரா நகரின் அருகிலுள்ள புலக் என்ற ஊரின் பாதுஷாவாக இருந்தார். அவர் மணமானவர். ஏராளமான செல்வமும், சொத்தும் உடையவர். ஆனால் அவர் சிற்றின்பத்தில் திளைத்த வாழ்வு நடத்தவில்லை. அவர் இம்மைக்குரிய பொருட்கள் அவரைக் கவரவில்லை. அவர் கலக்கமற்ற மனநிலையும், சீர்தூக்கி அறியும் நுண்ணறிவும் கொண்டவர். எளிமையான வாழ்வு நடத்தி வந்தார். அவரது எண்ணங்கள் உயர்ந்தவை, மேலானவை. கடவுளின் தரிசனம் கிட்ட வேண்டுமென்று பெரும் அவாக் கொண்டிருந்தார். முழுமையான விடுதலை, குறையற்ற முழுமை, என்றும் நிலைக்கும் ஆனந்தம் இவற்றையே விழைந்தார்.

இதற்கு வேண்டிய உணர்ச்சிபூர்வமான ஊக்கமும், உற்சாக எழுச்சியும் புல்லாஷாவுக்கு வந்துவிட்டன. ஆன்மீக உணர்வுத்தீ அவரது உள்ளத்தில் தூண்டப்பட்டது. இவ்வுலக வாழ்வின் சாரமற்ற வெறுமைத்தன்மையை உணர்ந்தறிந்தார். இங்கே எல்லாமே நிலையற்றவை, எளிதில் மறையக் கூடியவை என நன்கு அறிந்தார். துறவறத்தின் கலை அவரது உள்ளத்தில் எரியத் தொடங்கியது.

ஞானி மியான்மீரின் புகழையும் சிறப்பையும் பற்றிக் கேள்விப்பட்டார் புல்லா ஷா. தன் இளைய மகனை பாதுஷாவாக அமர்த்திவிட்டு, லாகூருக்குக் கிழக்கே, மூன்று மைல்கள் தூரத்தில் இருந்த மியான்மீரின் குடிசைக்கு நூறு வேலையாட்களுடனும், ஓர் அமைச்சருடனும் சென்றார். அந்த அருட் தொண்டரின் இருப்பிடத்தில் நுழைந்ததுமேயே அவர் மனதில் இறைவன்பால் அன்பு பெருகியது. அவர் உள்ளத்தில் அன்பும் ஈடுபாடும் நிறைந்தன. அந்த ஞானியைக் காணப் பெரும் அவாக் கொண்டு, அவரைத் தரிசிக்க அனுமதி கேட்டார். ஆனால் அனுமதி மறுக்கப்பட்டது.

புல்லா ஷா தன் குருவின் தாமரைப்பாதங்களில் சரணடையத் தீர்மானித்தார். தன் வேலையாட்களையும், அமைச்சரையும் ஊருக்குத் திரும்பச் சொன்னார். தான் கொண்டு வந்திருந்த செல்வமனைத்தையும் பிறருக்குக் கொடுத்துவிட்டார். அந்தக் கடுங்குளிரில் தன்னை ஒரு போர்வையில் சுற்றிக் கொண்டு ஸூஃபி பிரிவைச் சேர்ந்த ஏழை நாடோடியாக ஆனார்.

அரசச் செல்வச் சிறப்புடைய புல்லாஷா ஏழ்மையைத் தழுவினார். ஒரு காசு கூட இல்லாத வறியவர் ஆனார். மறுபடியும் ஞானியின் தரிசனத்தை வேண்டினார். ஆனால் மியான்மீர் தக்க தருணம் இன்னும் வரவில்லையென்றும் ரவி நதிக்கரையில் வசிக்கும் ஒரு பக்கீரிடம் சென்று 12

வருடங்கள் கடுமையாகத் தன்னைக் கட்டுப்படுத்திப் பயிற்சி செய்து பிறகு தன்னிடம் வருமாறும் கூறிவிட்டார்.

புல்லாஷா இதற்கு முழுமையாகக் கீழ்ப்படிந்தார். ரவி நதிக்கரைக்குச் சென்று அந்தப் பக்கீரைக் கண்டார். சாத்துவீக உணவு உண்டு மிகக் கடுமையாக யோகப்பயிற்சி 12 வருடங்கள் செய்தார். தீய குணங்களையெல்லாம் வெளியேற்றித் தன் மனதைத் தூய்மைப்படுத்திக் கொண்டார். தெய்வீகக் குணங்களைத் தன் உள்ளத்தில் கொண்டு ஒரே நோக்குடன் கூரிய, நுண்மையான மனங்கொண்டவராக உண்மையை அறிய முற்பட்டார். பக்கீர், "புல்லாஷா, நீ இப்போது நன்கு பக்குவப்பட்டு விட்டாய், குரு மியான்மீரைச் சந்திக்கச் செல். உனக்குக் காட்சி அளித்து மேலும் ஆன்மீகப் போதனை அளிப்பார். காலந்தாழ்த்தாது உடனே செல்" என்றார்.

புல்லாஷா குரு மியான்மீரின் உறைவிடத்திற்குச் சென்றார். அவரை அன்போடும், கனிவோடும் வரவேற்று உண்மையின் அரிய மறை பொருட்களை உபதேசித்து ஆசியளித்தார். மானுடர்களின் நல்வாழ்வுக்கும், மேலான நன்மைக்கும் உழைப்பதற்குத் தன் வாழ்வின் பணியைத் தொடர மிகப் பொருத்தமான கருவி புல்லாஷா என்று கண்டு கொண்டார் ஞானி.

ஒருமுறை மௌல்விகள் புல்லாஷாவை அவர் யாரென வினாவினார்கள். "நான் அவனே" என்று பதிலளித்தார் புல்லாஷா. இந்தப் பதில் மௌல்விகளைச் சினமூட்ட, அவர்கள் புல்லாஷாவைக் கைது செய்து நவாபிடம் தண்டனைக்காக இட்டுச் சென்றனர். நவாப் புல்லா ஷாவை ஒரு தேர்ந்த ஞானி என அறிந்து அவரை உடனேயே விடுதலை செய்தார். மற்றொரு முறை புல்லாஷா தான் சக்கரவர்த்தி என்று அறிவித்துக் கொண்டார். இதைக் கேட்ட மௌல்விகள் மிகவும் வெறுப்படைந்தனர். அவரை

நவாபிடம் அழைத்துச் சென்றனர். நவாபிடம், புல்லாஷா தன் சாம்ராஜ்யம், எல்லையற்றதும், முடிவற்றதும், கால வரம்பற்றதுமான, தன்னுள் உள்ள ஆத்மாவின் சாம்ராஜ்யம் என்று விளக்கினார். இந்த ஞானியின் ஆன்மீக உயர்வையும், மேன்மையையும் நன்கு அறிந்து கொண்ட நவாப் எவரும் புல்லாஷாவின் அமைதியைக் குலைக்கவோ, அவரது பணிகளில் குறுக்கிடுவதோ கூடாது என்றும், எவராவது இந்த ஆணையை மீறினால் அவர் கடுமையாகத் தண்டிக்கப்படுவார் என்றும் அறிவித்தார்.

புல்லாஷாவின் பாடல்கள் அத்வைத வேதாந்தத்தின் அடிப்படைத் தத்துவங்களை உள்ளடக்கி உள்ளன.

## 21. அஸிஸியின் புனித பிரான்ஸிஸ்

புனிதர் பிரான்ஸிஸ் அஸிஸியின் சிறிய ஏழை என்று அழைக்கப்படுகிறார். இத்தாலியில் அஸிஸி என்னும் ஊரில் கி.பி. 1182-ல் அவர் பிறந்தார். அவர் தந்தையின் பெயர் பென்டோன். பென்டோன் அஸிஸியின் மிகச் செல்வாக்குடைய வியாபாரி. பிரான்ஸிஸ் மிக அழகான பையன். அவன் எப்போதும் மகிழ்ச்சியாகவும் மென்மையான இதயமுள்ளவனாகவும் இருந்ததால் அவனுக்கு நிறைய நண்பர்கள் இருந்தனர். எல்லாச் செல்வந்தர்களின் மகள்களும் அவனது நண்பர்கள்.

பிரான்ஸிஸ் எல்லாவித செல்வாக்கு சௌகரியங் களுடனும் ஆடம்பரமாகவும், மகிழ்ச்சியுடனும் வளர்க்கப் பட்டான். தன் செல்வத்தின் பெரும்பகுதியை, நாட்டின் அரசகுமாரர்களுடன் மதுவருந்துதல் போன்ற ஊதாரித் தனமான கேளிக்கைகளில் விரயம் செய்தான்.

ஒரு நாள் பிரான்ஸிஸ் தன் நண்பர்களுடன் சிரித்து மகிழ்ந்து கொண்டிருந்தான். ஒரு பிச்சைக்காரன் பிச்சை கேட்டு

வந்தான். மிகவும் இரக்க குணமுள்ள பிரான்ஸிஸ் தன் பையிலிருந்த பணம் முழுவதையும் அப்பிச்சைக்காரனுக்குக் கொடுத்துவிட்டான். அவனது நண்பர்கள் இந்தத் தர்மச் செயலுக்காக அவனை எள்ளி நகையாடினார்கள். பிரான்ஸிஸ் அமைதியுடனும் கலக்கமற்றும் சிந்தித்தான். அப்பிச்சைக்காரனைக் கண்டது, இவ்வுலக வாழ்வில் உள்ள வறுமையும் துன்பமும் பற்றி பிரான்ஸிஸைச் சிந்திக்க வைத்தது. ஏழைகளுக்கு ஏராளமான பொருளைக் கொடுத்தான். பிரான்ஸிஸின் தந்தை அவன் பணத்தை விரயம் செய்வதாக எண்ணி அவனைக் கண்டித்தார்.

சிறிது காலத்திற்குப் பிறகு பிரான்ஸிஸ் ஒரு கடும் நோய்வாய்ப்பட்டுப் பல மாதங்கள் படுக்கையில் இருந்தான். அவன் இறக்கும் தறுவாயில் இருந்தான். ஆனால் பிரான்ஸிஸ் ஒரு குறிப்பிட்ட பணியைச் செய்ய விதிக்கப்பட்டவராதலால் கடவுள் அவனைக் காப்பாற்றினார். இதற்குப் பின் பிரான்ஸிஸின் இயற்கைத் தன்மையே முற்றிலும் மாறிவிட்டது. அவர் தன் எதிர்கால வாழ்க்கைக்கு ஒளி காட்டவும், திசைகாட்டவும் கடவுளைப் பிரார்த்தித்தார். ஏசுபிரானின் தரிசனம் அவருக்குக் கிடைத்தது. தன் பழைய வாழ்க்கை முறையைத் துறந்து, தூய வாழ்வை நடத்தி, மக்கள் சேவையில் தன் வாழ்வை அர்ப்பணிக்கக் கடும் உறுதி பூண்டார்.

உடல் நலம் தேறியதும் பிரான்ஸிஸ் தன் பெற்றோரிடம் தன் தீர்மானத்தைக் கூறினார். ஏமாற்றமடைந்த அவர்கள் பிரான்ஸிஸிடம் கடுஞ்சினங் கொண்டனர். தன் முந்தைய வழக்கங்களையும், வாழ்க்கை முறைகளையும் தவிர்த்து பிரான்ஸிஸ் கடவுள் சேவை செய்யத் தொடங்கினார். அவர் ஏழைகளுக்குப் பொருட்களும் பணமும் வழங்கினார். அவர் தந்தை இதனால் பெரிதும் கோபம் கொண்டு "இதுதான் நீ எனக்குக் காட்டும் நன்றியா? கடுமையாக உழைத்து

இவ்வளவு செல்வத்தைத் திரட்டினேன். அதை, நீ இந்தத் தகுதியற்ற கீழ் மக்களுக்காகச் செலவிட்டு வீண் செய்கிறாய்" என்று கடிந்துரைத்தார்.

பிரான்ஸிஸின் நண்பர்கள் அவரை இகழ்ந்துரைத்து வருத்தினர். அவரது தந்தையோ அவரை வீட்டை விட்டுத் துரத்திவிட்டார். பிரான்ஸிஸ் ஒரு பிச்சைகாரனைப் போல வாழ்ந்தார். அவரது நண்பர்கள் அவர் மீது கற்களையும் மண்ணையும் எறிந்து துன்புறுத்தினர். அவர் எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டார். ஒரு முரட்டு உடை அணிந்து எளிய உணவு உண்டு வாழ்ந்தார்.

அஸிஸியின் மலைகளிடையே ஒரு குகையில் பிரான்ஸிஸ் தன் நேரம் முழுவதையும் வழிபாட்டிலும் தியானத்திலும் கழித்து இரண்டு வருடங்கள் வாழ்ந்தார். சில இரக்க குணமுள்ள மனிதர்கள் அவருக்கு உணவளித்தனர். ஆனால் பிரான்ஸிஸ் பெரும்பாலும் உணவின்றியே கழித்தார்.

பிரான்ஸிஸ் தன் உடலைக் "கழுதை சகோதரர்" என்று குறிப்பிட்டார். தன் கழுதை சகோதரரை முற்றிலும் கட்டுப்பாட்டிலும், ஒழுங்கிலும் வைத்திருந்தார். பலமுறைத் தன் கழுதை சகோதரனை உணவும் நீருமின்றி வைத்ததோடு மிகவும் விருப்பமான உணவைக் கொடுக்காமலும் கட்டுப்படுத்தி வைத்தார்.

பிரான்ஸிஸ் மிகவும் அடக்கமுள்ளவர். கடவுளின் சிருஷ்டிகள் எல்லாவற்றையும் நேசித்தார். பறவைகளிடமும் விலங்குகளிடமும் அன்புசெலுத்தினார். நலிவுற்றோரையும், சமூகத்தில் ஒதுக்கப்பட்டோரையும் நேசித்தார். பறவை களையும் விலங்குகளையும், எல்லா உயிரினங்களையும் தன் சகோதர சகோதரிகளாக நடத்தினார்.

பிரான்ஸிஸ் ஒவ்வொரு கிராமமாகச் சென்று கடவுளின் அன்பைப் போதித்தார். அவர்களுக்கு உடன்பாடாக

இருந்தால், எல்லோரையும் தன்னுடன் சேர்ந்து சேவை வாழ்வில் ஈடுபட அழைத்தார். பெர்நாட் என்னும் செல்வந்தர் பிரான்ஸிஸின் புனித குணத்தால் ஈர்க்கப்பட்டுத் தன் செல்வமனைத்தையும் கடவுளின் சன்னிதியில் அர்ப்பணம் செய்தார். மேலும் பதினோறு பேர் பிரான்ஸிஸைச் சேர்ந்துத் தங்கள் செல்வமனைத்தையும் கடவுளின் சன்னிதியில் அர்ப்பணம் செய்தார்கள். மேலும் பதினோறு பேர் பிரான்ஸிஸைச் சேர்ந்துத் தங்கள் செல்வமனைத்தையும் ஏழைகளுக்கு வழங்கினர். பிரான்ஸிஸும் அவரைப் பின்பற்றியவர்களும், மக்களுக்கு நல்ல போதனைகளைச் செய்தும், அவர்களது நோய்களைத் தீர்த்தும், ஆசிகள் வழங்கியும் இத்தாலி முழுவதும் பிரயாணம் செய்தனர்.

பிரான்ஸிஸின் நல்வாக்கான அன்பும் கருணையும் ஐரோப்பாவில் எங்கும் பரவி அவருக்குப் புனிதர் பிரான்ஸிஸ் என்ற பெயரைப் பெற்றுக் கொடுத்தது. மக்கள் அவரை அஸிஸியின் சிறிய ஏழை என்று அழைத்தனர். அவர் மக்களின் இதயத்தில் என்றும் வாழ்ந்தார்.

புனிதர் பிரான்ஸிஸ் தன்னைப் பின்பற்றுபவர்களைச் சேர்த்து 'யாசித்து வாழும் துறவிகளின் அமைப்பு' அல்லது பிரான்ஸிஸின் சீடர்கள் என்னும் வகுப்பை நிறுவினார். இந்த வகுப்பின் அங்கத்தினர்கள் வறுமையை ஏற்றுக் கொண்டு அன்பைப் பரப்பும் உறுதிமொழியை எடுத்துக் கொள்ள வேண்டும்.

1225-ல் புனிதர் பிரான்ஸிஸ் தன் பூத உடலை நீத்தார். அவரது சீடர்கள் அஸிஸியில் அவருக்கு மிகவும் விருப்பமான குன்றின் மீது ஓர் அழகிய கோயிலை எழுப்பினார்கள். அவரது தாக்கமும், அவர் வாழ்ந்த வாழ்வின் இனிய மணமும் என்றும் நிலைத்து நிற்கும்.

அஸிஸியின் சிறிய ஏழை, புகழ் மிக்க அருளாளர். புனிதர் பிரான்ஸிஸின் புகழ் வாழ்க!

# 22. புனிதர் பிரான்ஸிஸ் சேவியர்

கி.பி. 1506-ல் ஸ்பெயின் நாட்டில் உள்ள நவார்னே என்னும் சிற்றரசில் பிறந்தார் புனிதர் சேவியர். ஒன்பது வயதிலேயே தன் தந்தையை இழந்தார். அவரது இரு சகோதரர்களும் போர்வீரர்கள். ஆனால் பிரான்ஸிஸ் சேவியர் ஒரு படைவீரனின் வாழ்வை விரும்பவில்லை. அவர் ஒரு பேராசிரியராக விரும்பினார். பாரிஸ் பல்கலைக் கழகத்தில் சேர வேண்டுமென்பது அவரது விருப்பம்.

அவ்விதமே 1525ல் பாரிஸ் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து 11 வருடங்கள் படித்தார். அவர் சிறந்த விளையாட்டு வீரர். அழகான தோற்றமுடையவர். 1530ல் கலைத் துறையில் பட்டம் பெற்றார். கிறிஸ்துவ சபையில் பதவியும் அதிகாரமும் பெறவேண்டுமென்று மிகவும் விரும்பினார்.

சேவியர் பன்மொழிப் பண்டிதர். லத்தீன், ஸ்பானிஷ், பிரெஞ்சு, பாஸ்க் இவற்றோடு போர்த்துக்கீசிய மொழியும் பேசக்கூடியவர். அவர் நன்கு கற்றறிந்த தத்துவ ஞானி. இறைமையில் விற்பன்னரும் கூட உயர்ந்த ரசனையுடையவர், உணர்ச்சி மிக்கவர், தன்னலமற்றவர், நேர்மையானவர், பகட்டும் ஆடம்பரமுமின்றி, எளிமையும், பணிவும் கொண்டவர்.

இக்னேஷியஸ் லயோலா பல்கலைக் கழகத்திற்கு வந்தார். அவர் ஒரு படை வீரராக இருந்தார். போரில் குண்டடி பட்டு, கால் நசுங்கி, முடமானார். இப்போது ஏசுவின் சபையின் சத்தவீரர். அவர் பிரான்ஸிஸிடம் பலமுறை உரையாடினார். அவர்"பிரான்ஸிஸ்' இந்த உலகையே அடைந்து, தன் ஆத்மாவை இழத்தல் ஒரு மனிதனுக்கு எந்த விதத்தில் இலாபம் பயக்கும்?" என்று அடிக்கடி கூறுவார். பிரான்ஸிஸ், இக்னேஷியஸின் நட்பையும், அவருடன் நடத்தும்

உரையாடல்களையும் பெரிதும் விரும்பினாலும் உலகவாழ்வில் அவர் அடைய எண்ணியவற்றைக் கைவிட விரும்பவில்லை. பிரான்ஸிஸ் இளமையான, ஆற்றல் நிறைந்த ஆசிரியர் அரிஸ்டாட்டிலைப் பற்றி அவர் நிகழ்த்தும் உரைகளைக் கேட்க அனேகர் வந்தனர். அவருக்கு நல்ல ஒளிமயமான எதிர்காலம் இருந்தது. புகழும், கௌரவமும் அவருக்குக் கிடைக்க இருந்தன. ஆனால் "இந்த உலகையே அடைந்து தன் ஆத்மாவை இழத்தல் ஒருவனுக்கு எவ்விதம் இலாபம் பயக்கும்?" என்ற இக்னேஷியஸின் வார்த்தைகள் அவர் காதில் ஒலித்துக் கொண்டேயிருந்தன.

இக்னேஷியஸின் வார்த்தைகளில் ஆழ்ந்த பொருளைப் பற்றித் தீவிரமாகச் சிந்தித்தார் பிரான்ஸிஸ் சேவியர். உலக வாழ்வு சார்ந்த குறிக்கோள்கள், பதவி, வருவாய் யாவையும் உதறி எறிந்தார். பல்கலைக் கழகத்தின் பேராசிரியர் பதவியின் மீது அவருக்கு இருந்த கவர்ச்சி மறைந்தது. ஏழ்மையைத் தழுவி, பிரம்மசர்யத்தைக் கடைப்பிடித்து ஏசுவுக்காக மட்டுமே வாழ்வதென்று உறுதிபூண்டார். சலனமற்ற மனநிலையும், கூர்ந்த பகுத்தறிவும் அமையப் பெற்றார். இம்மைப் பொருட்கள் எந்தவிதத்திலும் அவரை ஈர்க்கவில்லை. அவர் மனது இறைவன்பால் திரும்பியது. இக்னேஷியஸ் அவரது வழிகாட்டியாகவும் ஆன்மீகக் குருவாகவும் ஆனார். சேவியர் தன் நேரத்தின் பெரும்பகுதியைத் தியானத்திலும் பிரார்த்தனையிலும் செலவிட்டார். ஜெருசலத்திற்குப் புனிதப் பயணம் செய்தார். சேவியர் தன் உடைமையெல்லாம் ஏழைகளுக்கு வழங்கினார். முரட்டு உடைகளை அணிந்தார். கையில் ஒரு தடியை எடுத்துக் கொண்டு, தோளில் ஒரு தோல் அங்கியை அணிந்து வெனிஸுக்குக் கால்நடையாகச் சென்றார். வழியில் அனேக துன்பங்களை அனுபவித்தார். பிரான்ஸின் மழையையும் , ஜெர்மனியின் பனிக்காலக் கடுங்குளிரையும் பொறுத்துக் கொண்டு ஆல்ப்ஸ் மலைகளின் பனியைக்

கடந்து சென்றார். ஓர் அரசத் தூதுவரின் செயலாளர் ஆல்ப்ஸ் பனியைக் கடக்கும் போது சேவியருடன் சென்றார். அவர் தவறி விழ ஒரு பெரிய பனிப்பாறையால் மூடப்பட்டார். அது ஒரு வழுக்கும் செங்குத்தான மலையில் இருந்தது. கீழே வேகமாகச் செல்லும் பனியாறு. அந்தச் செயலாளரின் நண்பர்கள் அவரது உயிரைக் காப்பாற்ற முன் வரவில்லை. ஆனால், சேவியர் அவரதுயிரைத் தன்னுயிரெனக் கருதி அவர் வீழ்ந்த இடத்திற்குச் சென்று பனியிலிருந்து அவரை இழுத்தார். இவ்விதம் செய்ததில் தன்னுயிரையே பணயம் வைத்தார். சேவியர் எத்தகைய பரந்த கருணை இதயம் கொண்டவர். சேவியர் 1537-ல் வெனிஸுக்கு வந்து சேர்ந்தார். கடுமையான பயணத்தினாலும், கடுங்குளிரினாலும் அவர் மிகவும் சோர்ந்திருந்தார். எனினும் உடனேயே வெனிஸ் நகரில் தன் சேவையைத் தொடங்கினார். மருத்துமவனையிலிருந்த நோயாளிகளை நன்கு கவனித்து, அனேக, குணப்படுத்த முடியாத நோயாளிகளுக்கும் பணிவிடை செய்தார். நோயாளிகளைக் கனிவோடு பராமரித்து அவர்களுடன் கடவுளைப் பிரார்த்தித்தார். ஏசுவின் அன்பைப் பற்றிப் பிறருக்கு எடுத்துரைத்தார். சிறைக்குச் சென்று, அங்குள்ள கைதிகளுக்கு உதவிகள் செய்து, அவர்களுக்காகவும், அவர்களுடன் பிரார்த்தனை செய்தார். ரோம் நகருக்கு நடந்தே சென்றார். இடைவிடாத மழை பெய்து நாடு எங்கும் வெள்ளம். சில வேளைகளில், சேவியர் இடுப்புவரைத் தண்ணீரில் நடந்து செல்ல வேண்டியிருந்தது. எனினும் சேவியர் என்றும் மகிழ்வோடிருந்தார். கிராம மக்களைச் சந்தித்து அவர்களிடம் ஏசுவின் அறிவுரைகளை எடுத்து ரைத்தார். அவர் மக்களிடம் எதையும் வேண்டவில்லை. அவருக்குப் பிறர் அளித்த பரிசுகளையும் மறுத்தார். இச்செய்கை மக்கள் மனதில் சேவியரைப் பற்றிய ஒரு நல்ல அபிப்பிராயத்தைத் தோற்றுவித்தது. சேவியர், முற்றிலும்

தன்னலமற்றவர் என்றும், மிகப்பரந்த மனதுடன் எந்தவிதப் பாரபட்சமுமின்றி பிறரது நன்மைக்கும், தளைகளிலிருந்து விடுபடும் நிலைக்காகவுமே உழைத்து வந்தார் என்றும் மக்கள் அறிந்து கொண்டனர்.

சேவியர் நோய்வாய்ப்பட்டார். நோயின் கடுமையால் அதிகத் துன்பமுற்றார். உடல் வெளிறி, இளைத்து, பல நாட்களாக அவர் கடைப்பிடித்து வந்த வறுமையினாலும் நோயினாலும் உருமாறிப் போனார். அவர் ஒரு சடலம் போலவே காட்சியளித்தார். அப்போது அவருக்கு 32 வயது தான்.

1541ல் சேவியர் லிஸ்பனிலிருந்து மூன்று, நான்கு உடைகளுடனும் இரண்டு புத்தகங்களுடனும் இந்தியா வரக் கப்பலேறினார். அவர் கிழிந்த உடைகளே அணிந்திருந் தாலும், அரசகுமாரன் அல்லது தெய்வீக மகனின் தோற்றமும் பாவனையும் கொண்டிருந்தார்.

போர்ச்சுகலின் அரசர் ஜான் சேவியருக்குப் பயணம் செய்ய ஒரு முதல் வகுப்பை ஏற்பாடு செய்திருந்தார். ஆனால் சேவியர் கப்பலில் ஒரு மருத்துவராக, நோயாளிகளைக் கவனிக்கும் தாதியாக, மதப்பிரசாரகராக, பிரயாணிகளின் சௌகரியங்களைக் கண்காணிப்பவராக, ஆசிரியராக, சமையற்காரராக, எந்தத் தாழ்ந்த வேலையாக இருந்தாலும் பிரயாணிகளுக்குப் பணிபுரிபவராக இருந்தார். தன் அறையை ஒரு நோய்ப்பட்டிருந்த பிரயாணிக்குக் கொடுத்துவிட்டுத் தான் ஒரு கயிற்றுச் சுருளின் மீது படுத்துக் கொண்டார். ஏழைப் பயணிகள், நோயாளிகள், இவர்களது உடைகளைத் துவைத்துக் கொடுத்தார். அவர் கப்பலில் உயர் அதிகாரிகளோடும், உயர் மக்களோடும் உணவருந்த அழைக்கப்பட்டார். ஆனால் அவரோ சாதாரண மக்களோடு உணவருந்தினார். அவருக்குச் சிறப்புணவு அனுப்பப்படும். ஆனால் அதை நோயாளிகளுக்குக் கொடுத்துவிடுவார்.

நோயாளிகளை நீராட்டி, அவர்களது உடைகளைத் துவைத்துத் தன் கைகளினாலேயே அவர்களுக்கு உணவளித்துப் பராமரித்தார். மிகக் கடும் நோய்ப் பட்டவர்களை உற்சாக மூட்டி, தேறுதல் மொழிகளைக் கூறி, குணம் அடையும் நம்பிக்கையும் கொடுத்தார்.

1542-ல் சேவியர் இந்தியாவில் இறங்கி, கோவாவை அடைந்தார். அப்போது அவர் 36 வயதுடையவர். எப்போதுமே கடினமான வாழ்வு வாழ்ந்ததாலும், பயணத்தின் போது அவருக்கு அடிக்கடி வந்த காய்ச்சலாலும் அவரது உடல் மிகவும் பலவீனமாக இருந்தது. ஆனால், அவர் குறையற்ற ஆர்வமும், ஊக்கமும், மக்கள் சேவையில் ஆவலும் எல்லையற்ற அன்பும் கொண்டிருந்தார்.

துறைமுகத்தருகே இருந்த ஒரு மருத்துவமனையில் வசித்தார் சேவியர். இரவில் மிகவும் ஆபத்தான நிலையில் இருந்த நோயாளிகளின் படுக்கை அருகேயே அவர்கள் கூப்பிட்டால் உடனேயே அவர்களை அடையும் வண்ணம் தரையில் படுத்துறங்குவார். இதுவே உண்மையான சேவை. கடவுளின் சந்நிதியில் அர்ப்பணம் செய்யத்தக்க உண்மையான மலர் இதுவே. புதிதாகத் தங்களை இறைப்பணிக்கு ஆட்படுத்திக் கொள்ள விழைபவர்கள் சேவியரின் சேவை மனப்பான்மையைத் தங்கள் மனதில் கிரகித்துக் கொண்டு, கர்மயோகத்தின் பாதையில் சேவியரின் அடிச்சுவட்டிலேயே செல்ல வேண்டும். இத்தகைய சேவைகளே, மனதைத் தூய்மைப்படுத்தி, மென்மையாக்குவதோடு, கடவுளின் ஒளியையும் அருளையும் பெறத்தக்கவாறு, பக்குவப்படுத்தும்.

சேவியர் கிராமம் கிராமமாகச் சென்று தொழு நோயாளிகளுக்காகவும், கைதிகளுக்காகவும் வறியவர் களுக்காகவும் பொருளிரந்து, ஏழை எளியவர்களுக்காக ஒரு பெரும் தொகையைச் சேர்த்தார்.

சேவியர் அணிந்து வந்த பழைய உடை மிகவும் நைந்துவிட்டதால் அவருக்கு ஒரு பட்டு அங்கி கொடுக்கப் பட்டது. ஆனால் அவர் அதை அணிய மறுத்துவிட்டார்.

சேவியர், கைதிகளுக்கு போதனை செய்யவும், அவர்களுக்கு மதச் சடங்குகள் மூலம் தொண்டு செய்யவும், சிறைச் சாலைகளுக்குச் சென்றார். பள்ளிகளில் மாணவர் களுக்கு பிரார்த்தனைகளையும் மதக்கட்டளைகளையும் கற்றுக் கொடுத்தார். எங்கும் காலணியின்றி வெறுங் காலுடனும் கிழிந்த உடையுடனும் தான் செல்வார். ஒரு குடையை மட்டும் ஒரு முறை உபயோகித்தார். அவர் உபயோகித்த ஒரே ஒரு சௌகரியமான வாழ்க்கைக்குரிய பொருள் அதுதான்!யாவரும் சேவியரை மிகவும் நேசித்தனர். கரையோரமாக 45 கோயில்கள் நிறுவுவதற்குக் காரணமாக இருந்தார். மரமொன்றில் ஏறி அங்கிருந்து 6000 பேர் அடங்கிய கூட்டத்திற்கு அந்தப் பிரதேச மொழியிலேயே பேசுவார், பெரும் எண்ணிக்கையில் மதமாற்றம் செய்தார்.

புனித சேவியர் எண்ணற்ற துன்பங்களைப் பொறுத்தார். வேனிற்காலத்தில் சுடும் மணற்பரப்பின் குறுக்கே முன்னும் பின்னுமாக ஒரு பெரிய ஜில்லாவில் நடந்தே பிரயாணம் செய்தார். மழை ஆரம்பித்ததும் அங்கிருந்து செல்வார். மிகக் குறைந்த அளவும் ஒரே மாதிரியான சுவையற்றதுமான உணவைப் புசிப்பார். சிறிதளவு அரிசிச் சோறும், பருப்புமே உட்கொண்டார். ஒரு நாளில் ஒரு முறையே உண்பார். மதுவை அருந்தார். இரவில் இரண்டு அல்லது மூன்று மணி நேரமே உறங்குவார்.

சேவியர் மலாக்காவுக்கும், (மலேசியா) இலங்கைக்கும் சென்றார். பின் 1549-ல் அங்கிருந்து ஜப்பான் சென்றார். உயர்ந்த எதிர்ப்பார்ப்புக்களோடு சென்றார். ஆனால் அவர் பணி போர்த்துக்கீசியரின் கொடுமைச் செயல்களால் நாசம் செய்யப்பட்டது. யஜிரோ தான் அவரால் மதமாற்றம்

செய்யப்பட்ட முதல் ஜப்பானியர். ஆனால் மதமாறிய ஜப்பானியரின் எண்ணிக்கை மிகவும் குறைவே. புனிதர் சேவியர் இந்தியாவுக்குத் திரும்பினார். சைனா நாட்டில் ஏசு தர்மத்தைப் பரப்ப எண்ணினார். ஆனால், சைனா செல்லும் கப்பலில் இடம் கிடைப்பது கடினமாக இருந்தது. அவர் உடல் நலம் குன்றி, இருக்க இடமுமின்றித் துன்புற்றார். சில தோத்திரப்பாடல்களை இசைத்துக் கொண்டே, மதப்பிரசாரகர் புனிதர் ஜானின் திருவிழாவன்று அமைதியாக உயிர்நீத்தார். அவர் 45 வருடங்கள் மட்டுமே இவ்வுலகில் வாழ்ந்தார்!

## 23. ஸ்ரீ ராகவேந்திர சுவாமி

இந்தியா எண்ணற்ற மகான்களைத் தோற்றுவித்துள்ளது. அவர்களது வாழ்க்கைச் சரித்திரத்தைப் பலரும் திரும்பத் திரும்ப எழுதியுள்ளனர். எதற்காக? இத்தகைய புனித மகான்களின் உயரிய வாழ்க்கைகளும் போதனைகளும் புத்தகங்களின் பக்கங்களை நிரப்புவதற்காக வென்று வீணாக எழுதப்பட்டவை அல்ல. மாறாக அத்தகைய மகான்கள் புகட்டிய உயரிய கருத்துக்களை இலட்சியமாகக் கொண்டு வாழவேண்டும் என்று மக்களுக்கு விடுக்கப்படும் அறைகூவல்கள் அவை ஆகும். அவர்கள் பட்ட உடல் கஷ்டங்கள் மற்றும் அவர்கள் பெற்ற அற்புத சித்துக்கள் மக்களின் மனதில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தி அவர்களை நல்வழியில் திருப்புவதில் அதிசயிக்கத்தக்க ஆற்றலைப் பெற்று விளங்குகின்றன.

இத்தகைய மகான்களில் ஒருவரே 17ம் நூற்றாண்டில் வாழ்ந்த ஸ்ரீராகவேந்திர சுவாமி. ஒவ்வொரு வருடமும் சிராவண கிருஷ்ண த்விதீயத்தில் இவ்வுலகிலிருந்து அவர் மறைந்த தினம் கொண்டாடப்படுகிறது.

## குருவைத் தேடி

தென்னிந்தியாவில் புவனகிரி கிராமத்தில் வாழ்ந்த திம்மண்ணபட்டருக்கு கடைசி மகனாகப் பிறந்தவர் தான் ராகவேந்திர தீர்த்தர். இவரது இயற்பெயர் வேங்கடபட்டர். அவர் அவரது மூத்த சகோதரரின் பாதுகாப்பில் இருந்தார். அவரது ஏழாவது வயதில் அவருக்கு உபநயனம் செய்விக்கப்பட்டது. சமஸ்கிருதக் கல்வி பெறுவதற்காக அவர் மதுரைக்கு அனுப்பப்பட்டார். பாடங்களைக் கற்பதில் அவருக்கு அபாரமான ஆற்றல் இருந்தது. ஆழ்ந்த புலமை பெற்ற அவர் பல மொழிகளிலும் பாண்டித்தியம் பெற்று விளங்கினார். இதுவரை உள்ள அவரது வாழ்வில் எந்தவிதமான குறிப்பிடத்தக்க எந்தவித நிகழ்ச்சிகளும் நிகழவில்லை.

வேதாந்தத்தில் புலமை பெற வேண்டும் என்ற நோக்கத்துடன் தெளிந்த குருவை தேடிய வேங்கடபட்டர் கும்பகோணத்தைச் சேர்ந்த புகழ்பெற்ற ஸுதீந்திரதீர்த்தரை அணுகினார். அந்நாட்களில் அவரது புகழ் பலரையும் அவர்பால் ஈர்த்தது. தமது குருவின் பாதங்களில் விழுந்து வணங்கிய வேங்கடபட்டரை குரு அன்புடன் வரவேற்றார். வேங்கடப்பட்டரிடம் காணப்பட்ட அசாதாரணமான குணங்களையும் திறமைகளையும் கண்டு அதிசயித்த அந்த இலட்சிய குரு அத்தகையதொரு சீடரை தம்மிடம் அனுப்பியதற்காக இறைவனுக்கு நன்றி செலுத்தினார். ஏனெனில் பிற்காலத்தில் அந்த சீடர் ஒரு மாபெரும் ஆச்சாரிய புருஷராகத் திகழ்வார் என்பதை அவர் உணர்ந்தார்.

குருவின் மனதைப் பெரிதும் கவர்ந்த வேங்கடபட்டரைப் பற்றி அவரது சகசீடர்கள் அவர் நேரத்தை வீணாக்குகிறார், பாடங்களைப் படிப்பதேயில்லை என்று குருவிடம் புகார் செய்தனர். அவர்களது புகார்கள் எந்த அளவுக்கு உண்மை என்பதை தெரிந்து கொள்ள விரும்பிய குரு ரகசியமாக

சீடர்களது தங்கும் அறைகளைக் கண்காணித்தார். அங்கே அவரது சீடர்கள் விதம்விதமான சொகுசு மெத்தை தலையணைகளுடன் படுத்து உறங்குவதை அவர் கண்டார். அங்கே இரவில் அவர்கள் புத்தகங்களைப் படித்தார்கள் என்பதற்கு ஆதாரமாக விளக்கோ, புத்தகமோ எதுவுமே காணப்படவில்லை. ஆனால் அந்தசீடர்களின் குழுவில் வேங்கடபட்டரைக் காணாமல் குரு திகைத்தார். தமது அன்புக்குரிய சீடரைத் தேடிக் கொண்டு குரு சென்றார். அந்த இளம் சீடர் ஒரு மூலையில் முடங்கிக் கிடந்ததைக் கண்ட குருவின் இதயம் இளகியது. பூமியே அவரது படுக்கை. அவரது கையே தலையணை. பனிக் காற்றிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ள அவரிடம் எந்தவிதமான போர்வையும் இல்லை. அவருக்கு அருகில் அவர் படிப்பதற்கு உதவியாக இருந்த தீ மூட்டப்பயன்பட்ட காய்ந்த இலைச்சருகுகள் கிடந்தன. அருகில் 'நியாயஸுதா' என்ற ஏட்டுச் சுவடி நூலும் இருந்தது.

## அவரது 'நியாய ஸுதா' பாஷ்யம்

சீடனின் இந்தப் பரிதாப நிலையைக் கண்ட குருவின் மனம் பெரிதும் இளகியது. சீடனின் அபரிமிதமான எளிமையும் பணிவும் குருவைப் பெரிதும் கவர்ந்தன. குளிர் அதிகமாக இருந்ததால் தூங்கிக் கொண்டிருந்த சீடனின் மீது குரு தமது க்காஷாயத் துணியைப் போர்த்தினார். அருகில் கிடந்த பனை ஓலைச் சுவடிகளை அவர் தம்முடன் எடுத்துச் சென்றுவிட்டார். அந்த ஓலைச் சுவடிகளில் என்ன எழுதியிருக்கிறது என்பதை அறிய அவர் ஆர்வம் கொண்டார். அவற்றை அவர் படித்துப் பார்த்தபோது நியாய ஸுதாவிற்கான அற்புதமான பாஷ்யம் அது என்பதை அறிந்து அவர் பெரும் ஆச்சரியத்தில் ஆழ்ந்தார். உணர்ச்சியை அவரால் அடக்கமுடியாமல் அவரது கண்களிலிருந்து கண்ணீர் ஆறாய்ப் பெருகியது. இதயத்தில்

எழுந்த உணர்ச்சிப் பெருக்கை அவரால் அடக்க முடியவில்லை.

14ம் நூற்றாண்டைச் சேர்ந்த பெரும் மகான் ஜயதீர்த்த சுவாமியின் த்வைத சித்தாந்தத்தைப் பற்றிய அற்புதமான படைப்பே ந்யாயஸுதா ஆகும். அந்த நூலைப் பண்டிதர்களாலேயே படிப்பது மிகவும் கஷ்டம். இளம் சீடர்களைப் பற்றிக் கேட்பானேன்? எந்த ஒரு நூலை சீடன் குருவிடம் பாடம் கேட்டுக் கொண்டிருந்தாரோ, அதே நூலுக்கு அவர் வ்யாக்யானம் எழுதிக் கொண்டிருந்தார் என்பதைக் கண்ட குருவின் ஆச்சரியம் பன்மடங்கு அதிகமாயிற்று. அவரது பாராட்டைத் தெரிவிக்கும் வகையில் குரு ஒரு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்து தமது இளம் சீடரை அனைவருக்கும் அறிமுகம் செய்வித்து அவரது நூலுக்கு 'ஸுதா பரிமளம்' என்ற பெயரும் இட்டார்.

## சன்யாசத்திற்கு அழைப்பு

குரு ஸுதிந்திரரிடமிருந்து வேங்கடபட்டருக்கு சன்யாசத் திற்கான அழைப்பு வந்தது. முதலில் சீடர் இதை மறுத்தார். இருப்பினும் சரஸ்வதி தேவி அவரது கனவில் தோன்றி அவருக்கு வைராக்ய ஞானத்தை அருளி சன்யாசத்திற்கான அழைப்பை அவர் ஏற்கவைத்தார். குருவிடமிருந்து அவர் தீட்சை பெற்றார். குரு அவருக்கு ராகவேந்திர தீர்த்தர் என்ற பெயரையும் இட்டார். இவ்விதம் தஞ்சாவூரில் கி.பி. 1623ம் ஆண்டில் ஸ்ரீ ராகவேந்திரர் சன்யாசம் ஏற்றார். தமது வாழ்வின் இலட்சியத்தை அவர் உணர்ந்தார். இறை பணியிலும் மானிட சேவையிலும் அவர் தம் வாழ்வைக் கழித்தார். தூய சக்தியின் ஆற்றலைப் பரப்புவதையே அவர் தாம் பிறப்பெடுத்ததன் நோக்கமாகக் கொண்டார். இதற்காக ஸ்ரீராகவேந்திரர் தமது சுகபோகங்களனைத்தையும் மறந்தார். தேசத்தின் பல ஸ்தலங்களுக்கு அவர் தீர்த்தயாத்திரை சென்று பல அதிசயங்களை நிகழ்த்தினார்.

## பஞ்சத்தை நீக்குதல்

ஒரு சமயம் தஞ்சாவூர் சமஸ்த்தானத்தில் கொடும் பஞ்சம் நிலவியது. அரண்மனை களஞ்சியம் காலியாகியது. மன்னன் மக்களைக் காப்பாற்ற என்னவெல்லாமோ செய்தும் ஒன்றும் பலனில்லை. ராகவேந்திரரின் புகழைக் கேட்ட அம் மன்னன் அவரது பாதங்களில் வீழ்ந்து பஞ்சத்தைப் போக்கி அருளுமாறு வேண்டினான். உடனே சுவாமிகள் தஞ்சாவூருக்குப் புறப்பட்டுச் சென்றார். அங்கே களஞ்சியத்தில் தம் கைப்பட சமஸ்கிருதத்தில் 'ஸ்ரீ' என்று எழுதினார். அவர் அங்கேயே சில நாட்கள் தங்கி தினமும் இதை எழுதி பூஜையும் செய்தார். சில நாட்களுக்குள் பெருமழை பெய்தது. பஞ்சம் நீங்கியது. அறுவடை மகசூல் அமோகமாக இருந்தது.

## அவரது பெரும் படைப்புகள்

பொதுவாக இந்திய தத்துவத்திற்கும் குறிப்பாக த்வைதவேதாந்தத்திற்கும் ராகவேந்திரர் படைத்த அரும்பெரும் படைப்புகள் இன்றும்கூட அனைவராலும் பாராட்டப்படுகின்றன. எளிய இனியநடையில் அவர் சுமார் நாற்பத்தாறு நூல்களை எழுதியிருக்கிறார். படிப்பவர் மனத்தில் எழும் ஐயங்களை அந்த நூல்கள் வியக்கத்தக்க விதத்தில் அகற்றி உதவின. உபநிடதங்களின் பேரில் அவர் அற்புதமான கண்டார்த்தங்களை எழுதியிருக்கிறார். பல்வேறு அரிய நூல்களைப் பற்றிய அவரது குறிப்புரைகள் புகழ்பெற்றவையாகும்.

பக்தி கலந்த ஞானமே ராகவேந்திரரது நூல்களின் மையக் கருத்தாகும். ராகவேந்திர ஸ்தோத்திரத்தில் அவர் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்தர் என்று அவரது காலப் பெரியவர் ஒருவரால் அவர் பாராட்டப்படுகிறார்.

## இறைவனில் லயித்தல்

நாற்பத்தேழு ஆண்டுகள் மடாதிபதியாக இருந்தபின் ஸ்ரீராகவேந்திரர் பெல்லாரி ஜில்லாவிற்குச் சென்றார். துங்கபத்திரா நதிக்கரையில் தமக்கு ஒரு பிருந்தாவனம் (சமாதி) அமைக்கும்படி தமது சீடர்களிடம் கேட்டுக் கொண்டார். கி.பி. 1671ம் ஆண்டில் இந்த பெரிய மகான் ஸ்ரீ கிருஷ்ணர் பெயரில் அமைந்த ஒரு பாடலை இனிமையாகப் பாடிக் கொண்டே, ஆயிரக்கணக்கான ஆண் பெண்கள் கண்ணீர் மல்கப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே பிருந்தாவனத்தினுள் புகுந்தார். சென்னை பம்பாய் ரயில் மார்க்கத்தில் துங்கபத்திரா ரயில் நிலையத்திலிருந்து ஒன்பது மைல் தொலைவில் இருக்கும் மந்திராலயத்தில் இந்த பிருந்தாவனம் அமைந்துள்ளது. அந்த பிருந்தாவனத்தில் தாம் 700 ஆண்டுகள் வசித்து துயருறும் மக்களின் துயரங்களைப் போக்கி அருள்வார் என்று அவர் பிருந்தாவனத்தினுள் புகும்முன் மக்களிடம் சொன்னார்.

## நித்திய வாழ்வின் நிருபணம்

இன்றும் எண்ணற்ற அவரது பக்தர்களால் ராகவேந்திர சுவாமி குலதெய்வமாகப் போற்றப்படுகிறார். பல்வேறு பிரிவுகளைச் சார்ந்த பக்தர்களும் அறிஞர்களும் புனித மந்திராலயத்திற்கு தினமும் விஜயம் செய்கின்றனர். அவர்கள் சுவாமிகளின் பிருந்தாவனத்திற்குத் தொண்டு செய்து மிகுந்த திருப்தியுடன் வீட்டிற்குத் திரும்புகின்றனர். ராகவேந்திர சுவாமி இன்னும் உயிருடன் இருக்கிறார் என்பதில் ஏதேனும் ஐயமுண்டோ?

இத்தனைக்கும் பின் தற்கால விமர்சகர் இந்த நம்பிக்கை குறித்து ஒரு ஏளனச் சிரிப்பை உதிர்ப்பாராகில் அவர் 1916ல் மறுபதிப்பு செய்யப்பட்ட கீழ்க்காணும் அரசுக் குறிப்பை பார்க்கவேண்டும். சென்னை ஜில்லா கெஜட் - தொகுதி! -

அத்யாயம் 15- பெல்லாரி ஜில்லா - அதோனி தாலுகா - பக்கம் 213. ஸமாதியிலிருந்து ஸ்ரீராகவேந்திரர் எழுந்துவந்து அப்பொழுது அந்தப் பகுதியில் கலெக்டராக இருந்த வெளிநாட்டவரான ஸர் தாமஸ் மன்றோவுடன் உரையாடினார் என்று அந்தக் குறிப்பு கூறுகிறது. பிருந்தாவனத்திற்குக் கொடுக்கப்பட்ட சொத்துக்களை திரும்பப் பெறுவது குறித்த நீதிமன்ற வழக்கு சம்பந்தமாக 1900 ஆண்டில் அங்கிருந்த பிரதான கலெக்டர் அங்கே சென்ற சமயம் இது நிகழ்ந்தது என்று கூறப்படுகிறது. தமது அனுபவத்திற்குப் பிறகு ஸர்தாமஸ் மன்றோ சொத்துக் களைத் திரும்பப் பெறும் உத்தரவை ரத்து செய்துவிட்டார்.

## 24. சுவாமி தயானந்த சரஸ்வதி

சுவாமி தாயனந்தா சன்யாசி ஆவதற்கு முன் அவரது பெயர் மூல்சங்கர் என்பதாகும். குஜராத்தில் உள்ள ஒரு சிறிய மாநிலமான கத்தியவாரின் தலைநகரான மோர்வியில் 1824ல் பிறந்தார். அம்பாசங்கர் அவரது தந்தை. அவர் ஒரு பணக்கார பிராம்மண ஜமீன்தார். மிகுந்த சமய நம்பிக்கை கொண்ட ஒரு லேவாதேவிக்காரர் அவர்.

மூல்சங்கருக்கு ஐந்து வயதாயிருக்கும் பொழுது அவருக்கு தேவநாகரி அரிச்சுவடி சொல்லிக் கொடுக்கப்பட்டது. புனித நூல்களிலிருந்து பல முக்கியமான சுலோகங்களை அவர் மனப்பாடம் செய்திருந்தார். அவரது எட்டாவது வயதில் அவருக்கு உபநயன சம்ஸ்காரம் செய்விக்கப்பட்டது. அவரது 14ம் வயதில் சிவராத்ரி தினத்தன்று ஆன்மீக உணர்வு அவரது மனத்தில் விதைக்கப்பட்டது.

அவரது சகோதரியும் மாமனும் இறந்த பொழுது மூல்சங்கர் பெரும் அதிர்ச்சிக்குள்ளானார். உலகின் நிலையாமை குறித்து அந்நிகழ்ச்சி அவருக்குப் பாடம் புகட்டியது. உலக வாழ்வு நிலையில்லாதது என்பதை மூல்சங்கர் உணர்ந்தார்.

சமஸ்கிருத இலக்கியம் மற்றும் புனித சமஸ்கிருத நூல்களைப் படிப்பதற்காக அவர் காசி மாநகருக்குச் செல்ல விரும்பினார். ஆனால் அவரது தந்தை அதற்கு மறுத்துவிட்டார். பக்கத்துக் கிராமத்திலிருந்த ஒரு பாடசாலைக்கு அவரை அனுப்பினார்.

மூல்சங்கரின் தந்தை அவரது மகனது திருமணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்யலானார். அதை அறிந்த மூல்சங்கர் வீட்டைவிட்டே ஓடிவிட்டார். அவருக்குத் திருமணத்தில் நாட்டமில்லை. திருமணம் ஒரு பெரிய பந்தம் என அவர் நினைத்தார்.

சயாலா என்ற கிராமத்தைப் போயடைந்தார் மூல்சங்கர். அங்கே அவர் ஒரு மதப் பிரிவின் தலைவராக விளங்கிய ஒரு பிரம்மச்சாரியைச் சந்தித்தார். தன்னை நைஷ்டிகப் பிரம்மச்சாரியாக ஏற்றுக் கொள்ளுமாறு அவரிடம் மூல்சங்கர் வேண்டினார். மூலசங்கருக்கு காவி உடை தரப்பட்டு சுத்த சைதன்யர் என்ற பெயர் அளிக்கப்பட்டது.

பரிவிராஜகராக அவர் சுற்றி வருகையில் சித்தாபூர் என்ற ஊரில் நிகழும் வருடாந்திர மேளாவில் பங்கு கொண்டார். அங்கே அவர் அவரது தந்தைக்குப் பழக்கமான ஒரு பைராகியைக் கண்டார். உடனே பைராகி மூல்சங்கரரது இருப்பிடத்தை அவரது தந்தைக்குத் தெரிவித்தார். அதை அறிந்த அம்பாசங்கர் சித்தாபூருக்கு வந்து ஒரு கோவிலில் இருந்த தமது மகனைக் கண்டார். தமது மகனுடைய காவி உடையைக் கிழித்தெறிந்தார். அவரது பிட்சா பாத்திரத்தை சின்னாபின்னமாக உடைத்தார். மூல்சங்கருக்கு புதிய உடைகள் அணிவிக்கப்பட்டன. பல வேலையாட்களின் கண்காணிப்பில் அவர் வைக்கப்பட்டார். அந்த சேவகன் இரவில் அயர்ந்து தூங்கிவிட்டான். அந்த சமயத்தில் மூல்சங்கர் ஒரு உயரமான அரசமரத்தில் ஏறி இரவு முழுவதும் கிளைகளுக்குள் தன்னை மறைத்துக் கொண்டார்.

மறுநாள் காலையில் தந்தையும் சேவகர்களும் மூல்சங்கரைத் தேடினார்கள். அவரைக் காணாமல் அவர்கள் வீடு திரும்பினார்கள்.

மூல்சங்கர் அஹமதாபாத் மற்றும் பரோடாவிற்குச் சென்றார். அதன் பின் அவர் நர்மதை நதிக் கரையில் இருந்த ஒரு புனிதத் தலத்திற்குச் சென்றார். அங்கே பரமஹம்ஸ பரமானந்தர் என்ற ஒரு சன்யாசியிடம் பல வேதாந்த நூல்களைக் கற்றார். ஜீவாத்ம பரமாத்ம ஐக்கியத்தில் அவருக்குப் பூரண நம்பிக்கை இருந்தது.

சுவாமி பூர்ணானந்த சரஸ்வதி என்பவர் அவருக்கு சன்யாசதீட்சை அளித்தார். சுவாமி தயானந்த சரஸ்வதி என்று அவரது பெயர் மாற்றப்பட்டது. அவருக்கு அப்பொழுது வயது 24.

சுவாமி தயானந்த சரஸ்வதி அடுத்த 12 வருடங்களை தலயாத்திரை, நூல்கள் வாசித்தல், தவம் மற்றும் யோகப் பயிற்சிகளில் கழித்தார். வட இந்தியாவில் இருந்த எல்லா புனித தலங்களுக்கும் அவர் சென்றார். தலயாத்திரை அவரிடம் மிகுந்த பொறுமையை வளர்த்தது. பல நாட்கள் அவர் பட்டினி கிடந்தார். காடுகளில் தூங்கினார்.

தமது 36வது வயதில் சுவாமி தயானந்தா மதுராவிற்குச் சென்றார். அங்கே அவர் ஒரு பிரபல சம்ஸ்கிருத அறிஞரும் சன்யாசியுமான சுவாமி விரஜானந்தா என்பவரைச் சந்தித்தார். அவர் வைசூரி தாக்கியதால் இளமையிலேயே குருடராய்விட்டார். அவர் ஒரு பஞ்சாபி. தமது பெரும்பான்மையான நேரத்தை தியானத்தில் செலவிட்டார். பல தடவைகள் சுவாமி விரஜானந்தா சுவாமி தயானந்தாவை அடித்தார்.

சுவாமி தயானந்த சரஸ்வதி தமது குருவிற்கு பலவிதங்களில் தொண்டு செய்தார். வெகு

தொலையிலிருந்து குருவிற்கு அவர் தண்ணீர் கொண்டு வந்தார். அவரது அறையைச் சுத்தம் செய்தார். அவரது உடைகளைத் துவைத்தார். தமது குருவுடன் அவர் இரண்டரை ஆண்டுகள் வசித்தார்.

அவரிடமிருந்து விடைபெறும் நாள் வந்தது. தயானந்தா தன் கையில் கொஞ்சம் லவங்கத்தை வைத்துக் கொண்டு குருவிடம் சென்று "என் வணக்கத்திற்குரிய குருவே! நான் ஒரு ஏழை. என்னிடம் இதைத் தவிர உமக்குக் கொடுப்பதற்கு வேறு எதுவும் இல்லை", என்றார். "உன்னிடம் எது இப்பொழுது இருக்கிறதோ அதனுடன் நீ விடை பெறவேண்டும் என்பது என் விருப்பம்", என்று சுவாமி விரஜானந்தா சொன்னார்."குருவே! என்னுடையது அனைத்தும், எனது உயிர் அனைத்தும் உம்முடையது குருவே', என்று தயானந்தர் சொன்னார். "நீ பெற்ற கல்வியை நன்கு பயன்படுத்துவாயாக. உனது அறிவை எங்கும் பரப்பு. இருளை அகற்று. தங்களது உண்மைச் சமயத்தை ஹிந்துக்கள் மறந்துவிட்டார்கள். வேத சமயத்தை அவர்களுக்கு கற்பிப்பாயாக", என்று விரஜானந்தா சொன்னார்.

தயானந்தா தமது குருவை வணங்கி, வேத தர்மப் பிரச்சாரத்திற்காகவே தமது வாழ்க்கையை அர்ப்பணிக்கப் போவதாக அவருக்கு வாக்குறுதி அளித்தார். அவர் குருவிடமிருந்து விடைபெற்று உடனே தமது பணியைத் தொடங்கினார்.

சுவாமி தயானந்தா ஆக்ராவிற்குச் சென்று அங்கே சில சொற்பொழிவுகள் ஆற்றினார். அங்கிருந்து குவாலியருக்கும் ஜய்பூருக்கும் சென்றார். ஜய்பூர் மகாராஜா சுவாமி தயானந்தரை மிகுந்த மரியாதையுடன் வரவேற்றார்.

ஹரித்வார், வாரணாசி மற்றும் கல்கத்தாவில் தயானந்தா பல சொற்பொழிவுகளை ஆற்றினார். தேவேந்திர நாத் டாகுர், பாபு கேசவ சந்திரசென் போன்றோரை அவர் சந்தித்தார். சமஸ்கிருதத்திலும் ஹிந்தியிலும் அவர் உரை நிகழ்த்தினார். விக்கிரக வழிபாட்டைக் கண்டித்து அவர் பேசியதால் ஆசார பண்டிதர்கள் அவரை எதிர்த்தனர்.

சுவாமி தயானந்தா அலகாபாத் மற்றும் பம்பாயில் சொற்பொழிவுகள் ஆற்றினார். பம்பாயில் அவர் முதல் ஆர்ய ஸமாஜத்தை நிறுவினார். அதன் பின் அவர் புனாவிற்குச் சென்று அங்கிருந்த ஹிந்து கிளப் கட்டடத்தில் தொடர் சொற்பொழிவாற்றினார். பண்டிதர்கள் அவரைக் குறை கூறினார்கள். அவர் தாக்கப்பட்டார். ஆனால் தகுந்த சமயத்தில் போலீஸ் தலையீட்டால் அவர் காப்பாற்றப் பட்டார்.

அதற்குப் பிறகு தயானந்தா பஞ்சாபிற்குச் சென்றார். லாகூரில் அவருக்கு மகத்தான வெற்றி கிட்டியது. பஞ்சாபின் ஒவ்வொரு முக்கிய நகரத்திலும் அவர் ஆர்ய ஸமாஜக் கிளைகளை நிறுவினார். பிறகு உத்தரபிரதேசத்திற்கும் ராஜஸ்தானிற்கும் சென்று அங்கே பிரச்சாரம் செய்தார். ஜோத்புர் யச்வத்சிங்மகாராஜா தீய பழக்கங்கட்கு அச்சமயம் உட்பட்டிருந்தார். அவர் ஒரு தாசியின் வசப்பட்டிருந்தார். அந்தப் பெண்ணின் பிடியிலிருந்து சுவாமி தயானந்தா மகாராஜாவை விடுவித்தார். அதனால் சினம் கொண்ட அந்தப் பெண் சுவாமியின் உணவில் விஷத்தைக் கலந்துவிட்டாள். அதன் காரணமாக 1883ம் ஆண்டு அக்டோபர் 30ம் தேதி தீபாவளி இரவில் காலமானார்.

தர்க்கவாதியாக சுவாமி தயானந்தாவுக்கு எதிரி கிடையாது. வாதிடுவதில் அவருக்கு நிகர் எவருமில்லை. அவர் வாதிடுவது மிகவும் அற்புதமாக இருக்கும். அவர் ஒரு பெரும் சொற்பொழிவாளர்.

சுவாமி தயானந்தரின் 'ஸத்யார்த்த பிரகாஷ்' (உண்மை விளக்கம்) மிகவும் பிரபலமானதொரு நூல். சுவாமி தயானந்தரின் போதனைகள் அதில் அடங்கியுள்ளன.

பாரதத்தில் ஆர்ய ஸமாஜம் மிகுந்த சமூகத் தொண்டு புரிந்துள்ளது. பல இடங்களில் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், அனாதாசிரமங்கள் உள்ளன. காங்கிரி குருகுலமும், டேராடூன் டி.ஏ.வி. கல்லூரியும் மிகச் சிறந்த நிறுவனங்களாகும். சுவாமி தயானந்தரின் சீடரான சுவாமி சிரத்தானந்தா காங்கிரி குருகுலத்தை ஏற்படுத்தினார். கிறிஸ்தவ, முஸ்லீம்களை மீண்டும் ஹிந்து மதத்திற்குத் திருப்பும் சுத்தி இயக்கத்தை அவர் தொடங்கி வைத்தார்.

சுவாமி சிரத்தானந்தா ஒரு சுய சிந்தனையாளர். அவருக்கு ஒத்துவராததையெல்லாம் அவர் வெளிப்படையாக எதிர்த்தார். அவர் ஒரு ஆற்றல் மிக்கவராக விளங்கினார். அவரது ஆழ்ந்த ஆன்மீக நாட்டமும் உண்மைக்கான வேட்கையும், உலக நாட்டத்தையெல்லாம் அவரை விடச் செய்து, வேதப் படிப்பிலும் ஒழுக்கவாழ்க்கையிலும் அவரது நாட்டத்தை அதிகரித்தது.

சுவாமி சிரத்தானந்தா ரிக்வேதத்தைப் பற்றி ஒரு விரிவான விளக்க உரை எழுதினார்-அவர் வெகுகாலம் ஆர்யஸமாஜத்தின் தலைவராக இருந்தார். அவரது துறவு வாழ்க்கை, கவர்ச்சியான தோற்றம், அனைவரையும் அரவணைக்கும் இதயம், சமூகத்தின் பாலும், தேசத்தின் பாலும் ஆழ்ந்த அன்பு, மற்றும் அபரிமிதமான செயலாற்றல் அனைத்தும் ஆர்யஸமாஜ அபிவிருத்தியில் பெரிதும் உதவின. 1926ம் ஆண்டில் தமது 71ம் வயதில் சுவாமி சிரத்தானந்தர் காலமானார்.

### சுவாமி தயானந்தரின் போதனைகள்

1. உண்மை அறிவின் ஆரம்பம் பரம்பொருளே

2. இறைவன் அனைத்து உண்மை மற்றும் அனைத்து அழகு சொரூபி. அவன் எங்கும் நிறைந்தவன், எல்லாம் அறிந்தவன், எல்லாம் வல்லவன். அவன் உருவமற்ற வன், நியாயமானவன், உதாரமானவன், பிறவாதவன், அந்தமற்றவன், எல்லையற்றவன், மாறாதவன், ஆரம்ப மில்லாதவன், அனைத்திற்கும் ஆதாரம், மறையாதவன், பயமற்றவன், சாஸ்வதமானவன், பிரபஞ்சத்தின் ஒரே இயக்குநர். அவரே வழிபடத் தகுந்தவர்.

3. வேதமே உண்மை அறிவின் நூல். ஒவ்வொரு ஆரியனின் மகத்தான கடமை வேதத்தைப் படித்து, கேட்டு, பரப்புவதேயாகும்.

4. உண்மையை ஏற்று பொய்யை விடுங்கள்.

5. சரி, தவறு என்பதைச் சரிவரப் புரிந்து கொண்டு தர்மத்திற்கேற்ப உங்கள் செயல்களைச் செய்யுங்கள்.

6. ஆர்ய ஸமாஜத்தின் முக்கிய நோக்கமே உலகிற்கு நலம் செய்வதும், ஒவ்வொருவரது பௌதிக, சமூக மற்றும் ஆன்மீக நலத்தை மேம்படுத்துவதுமேயாகும்.

7. பிறரிடம் நீங்கள் பழகுவது அன்பு, நேர்மை, மற்றும் நியாயத்தின் அடிப்படையில் அமைய வேண்டும்.

8. அறியாமையை அகற்றி பௌதிக, ஆன்மீக தொண்டை வளருங்கள்.

9. பிறர் நலத்தில் உங்கள் நலத்தைக் காணுங்கள்.

10. அனைவரது நலத்தையும் ஊக்குவிக்கும் சமூக நியதிகளைப் பின்பற்றுங்கள்.

# 25. ஸ்ரீ நாராயண குரு

கேரளாவின் சிறந்த துறவி, சமூக சீர்திருத்தவாதி மற்றும் ஆன்மீகத் தலைவரான ஸ்ரீ நாராயணகுரு மலபாரில் 1854ல் பிறந்தார். அவர் சமஸ்கிருதம், மலையாளம் மற்றும் தமிழில் பிரபல அறிஞர் ஆவார். வாழ்வின் சிக்கலுக்கான தீர்வைக் காண்பதற்காக அவர் ஆன்மீக நாட்டம் கொண்டு பல இடங்களுக்கும் யாத்திரை செய்தார். அவரது இளமைக் காலத்தைப் பற்றி அவ்வளவாகத் தகவல் இல்லை.

தெற்கு திருவிதாங்கூரில் நெய்யாற்றின் கரை என்னும் ஊரில் அவரது முப்பதாவது வயதில் அவர் அலைந்து திரியும் ஒரு சன்யாசியாக மக்களால் கண்டுபிடிக்கப்பட்டார். பக்தி சிரத்தையுடன் கிராம மக்கள் அவருக்குத் தொண்டு செய்தனர்.

ஆலயங்களில் ஹரிஜனங்களை பிரவேசிக்காமல் தடுத்ததைக் கண்டு ஸ்ரீ நாராயணகுரு தமது சிறுவயதிலேயே மனம் வருந்தினார். அதனால் அந்த ஜனங்கள் பால் அவருக்குப் பரிவு ஏற்பட்டது. ஹரிஜனங்களுக்காக அவர் ஒரு ஆலயத்தை உண்டாக்கினார். இதுவே அவரது முதல் பொதுத் தொண்டு. அவர் தமது அறிவாற்றலால் அனைத்து எதிர்ப்பையும் சமாளித்தார். கேரளா முழுவதும் அவரது போதனைகளின் அடிப் படையில் பல கல்வி ஸ்தாபனங்கள் உருவாயின. அவரது பெயரால் பல பள்ளிக்கூடங்கள், மருத்துவமனைகள் மற்றும் ஆசிரமங்கள் இப்பொழுது நன்முறையே செயல்பட்டுக் கொண்டிருக் கின்றன. அவைகள் ஒவ்வொன்றிலும் ஒற்றுமை உணர்வு பிரதிபலிக்கிறது.

ஸ்ரீநாராயணகுரு பழக்க வழக்கங்கள் எனும் தடித்த திரையைக் கிழித்தார். ஊழல் எனும் சக்தியைக் களைந்தார். அறியாமைத் திரையை அகற்றி சுதந்திர அமிருதத்தைக் கொடுத்தார்.

ஸ்ரீ நாராயண குரு அன்பாகவும், அடக்கமாகவும் இருந்தார். வேடிக்கையாகப் பழகினார். கூரிய அறிவுத் திறனையும், திடமான சித்தத்தையும் அவர் பெற்றிருந்தார்.வேதாந்தத்தின் உருவகம் அவர். தியாக உணர்வுடன் கூடிய செயல்களால் கேரளாவில் உள்ள ஆயிரக்கணக்கான அவரது சீடர்களை அவர் கவர்ந்தார்.

மாணவர்களையும், நடுத்தர வர்க்க மக்களையும் அவர் சமஸ்கிருதம் மற்றும் மேனாட்டு விஞ்ஞானத்தை கற்க ஊக்குவித்தார். ஒரு கூட்டுறவு சமுதாயத்தை உருவாக்குவதே அவரது இலட்சியம். இயல்பான பொதுத் தொண்டினால் அனைவரும் விரும்பும் இதய ஒற்றுமை மலரும்.

அவரது பிற்பகுதியில் ஸ்ரீநாராயண குருவின் புகழ் பாரதம் முழுவதும் பரவியது. புகழ்பெற்ற பலர் அவருக்கும் கேரளத்தில் அவரது தொண்டு மையத்துக்கும் பாராட்டுத் தெரிவித்தனர். ஸ்ரீரவீந்திரநாத் தாகூர் மற்றும் மஹாத்மா காந்தி அவரது ஆசிரமத்திற்கு விஜயம் செய்தனர். வருடந்தோறும் ஸ்ரீநாரயண குரு தென்னிந்தியா மற்றும் ஸ்ரீலங்காவில் சுற்றுப் பயணம் செய்தார்.

செப்டம்பர் மாத ஆரம்பத்தில் ஸ்ரீநாராயணகுருவின் ஆண்டு விழா தென்னிந்தியா மற்றும் இலங்கையில் கொண்டாடப்படுகிறது. அந்த விழாவில் ஊர்வலங்கள், கூட்டங்கள் போன்றவை இடம் பெறுகின்றன.

ஸ்ரீ நாராயண குருவின் வாழ்வும் வாக்கும் உலகளாவிய தாயிருந்தன. அவரது போதனைகளும் போற்றத்தக்க உதாரணமும் மனிதகுலம் முழுவதற்கும் உரியனவாகும்.

ஸ்ரீ நாராயணகுரு ஒரு நடைமுறை யோகியாகத் திகழ்ந்தார். பாரதத்தின் மறைநூல்களை அவர் ஆழ்ந்து படித்திருந்தார். அவர் சிறந்த செயல்வீரராகத் திகழ்ந்தார். வேதாந்தக் கொள்கைகள் அன்றாட வாழ்க்கையில்

கடைப்பிடிக்கக் கூடியவை என்பதை அவர் வாழ்ந்து காட்டினார். அவரது வாழ்வு முழுவதுமே நடைமுறை சாத்தியமான கொள்கைகளின் விளக்கமாயமைந்தது.

அத்வைதத்தின் உருவமாகத் திகழ்ந்த ஸ்ரீநாராயண் குருவிற்கு கேரளம், பாரதம் - ஏன்- உலகம் முழுவதுமே வெகுவாகக் கடன்பட்டுள்ளது. அவரது கொள்கைகளை வாழ்வில் கடைப்பிடிப்பது ஒன்று தான் நாம் அவருக்குச் செய்யும் சிறந்த அஞ்சலியாகும்.

# 26. ஸ்ரீ அரவிந்த கோஷ்

1871 ஆகஸ்டு 15ம் தேதி அதிகாலை 5மணிக்கு வங்காளத்தில் உள்ள கல்கத்தாவில் புகழ்பெற்ற கொன்னகர் கோஷ் குடும்பத்தில் ஸ்ரீ கிருஷ்ணதான் - ஸ்வர்ணலதா தம்பதியினருக்கு மகனாக ஸ்ரீஅரவிந்தர் பிறந்தார். இங்கிலாந்திற்குச் சென்ற ஸ்ரீ கிருஷ்ணதான் சிறந்த எம்.டி. பட்டம் பெற்றுத் திரும்பினார்.

வங்காள இலக்கியத்தில் ஸ்ரீ நாராயணன்போஸ் ஒரு புகழ் பெற்ற அறிஞர். 'மாடர்ன் ரிவியூ'வில் அவர் ஒரு எழுத்தாளர். இந்திய சுதந்திரப் போராட்டத்தின் பிதாமகரான அவரே ஸ்ரீ அரவிந்தரின் தாய்வழித் தாத்தா. அரவிந்தர் அவரது ஆன்மீக சுபாவம் மற்றும் உயர்ந்த இலக்கிய ரசனைக்கு அவரது தாய்வழிக்கே மிகவும் கடமைப் பட்டுள்ளார்.

## மாபெரும் அறிஞர்

அவருக்கு நான்கு வயதாயிருக்கும் பொழுது டார்ஜிலிங்கில் இருக்கும் லொரட்டோ கான்வெண்ட் பள்ளிக் கூடத்திற்கு அரவிந்தர் அனுப்பப்பட்டார். சிறுவயதில் அரவிந்தர் இங்கிலாந்தில் ஒரு பிரபல பள்ளியில் கல்வி கற்றார். "என்னிடம் கடந்த 25 அல்லது 30 ஆண்டுகளாக

கல்வி கற்றுச் சென்ற எத்தனையோ மாணவர்களுள் அரவிந்தரைப் போன்ற ஒரு புத்திசாலியான மாணவனை நான் பார்த்ததில்லை", என்று அந்தப் பள்ளியின் வயதான தலைமை ஆசிரியர் சொன்னார்.

பள்ளிப் படிப்பை முடித்த அரவிந்தர் கேம்பிரிட்ஜ் அரசர் கல்லூரியில் ஐரோப்பிய இலக்கியம் கற்ற மாணவராகத் திகழ்ந்தார். 1890ல் அவர் ஐ.ஸி.எஸ். தேர்வில் சிறப்பாகத் தேர்வு பெற்றார். ஆனால் குதிரை ஏற்றத்தில் போதிய தேர்ச்சி இல்லாத காரணத்தினால் இந்திய அரசில் சேர்வதற்கான தகுதியை இழந்தார். இந்தியா திரும்பிய அவர் பரோடா மாநிலக் கல்லூரியில் உதவி முதல்வரானார். அவர் பரோடா மகாராஜாவின் அன்பிற்குப் பாத்திரமானார்.

அரவிந்தரின் மதிநுட்பம் விரைவில் அனைவரையும் கவர்ந்தது. பரோடா மாநிலத்தில் படித்த பெருமக்களால் அவர் பெரிதும் விரும்பப்பட்டார். பொதுமக்களிடம் அவருக்கு நல்ல செல்வாக்கு இருந்தது. ஸ்ரீ கே.எம். முன்ஷி அவரது மாணவர்களில் ஒருவர். அரவிந்தரை முன்ஷி பெரிதும் நேசித்தார். இளைஞர்களுக்கு அரவிந்தர் தெய்வமாகத் தென்பட்டார். 'அருதா' (அரவிந்தர் அண்ணா) என்று அவர் அழைக்கப்பட்டார். அரவிந்தர் மிருணாளினி தேவியை மணந்தார்.

அரவிந்தர் கிரேக்க மொழியில் பேரறிஞராகத் திகழ்ந்தார். லத்தீனிலும் அவர் புலமை பெற்று விளங்கினார். பிரெஞ்சு மொழியையும், ஜெர்மன், மற்றும் இத்தாலி மொழிகளையும் அவர் கற்று கெதே, டான்டே ஆகியோரின் மூலநூல்களையும் கற்று அறிந்தார். நமது புராதன வேதநூல்களையும் நன்கு கற்றுத் தேர்ந்தார்.

ஸ்ரீ அரவிந்தர் சரித்திரத்திலும் கவிதையிலும் பேரறிஞர். ஆங்கிலம், லத்தீனிலும் புலமை பெற்றிருந்தார். 14

வருடங்கள் அவர் இங்கிலாந்தில் இருந்தார். அவருக்கு வயது ஏழாயிருக்கையில் டாக்டர் கே.டி. கோஷ் மேலைநாட்டுக் கல்வியில் அவர் தேர்ச்சி பெற வேண்டி அவரை இங்கிலாந்திற்கு அனுப்பி வைத்தார். அரவிந்தர் தாய்நாட்டுப் பழக்க வழக்கங்களை மறந்து மேலைநாகரிகத்தில் திளைத்துப் போவார் என்பதுதான் அந்தச் சிறுவயதில் அவர் அனுப்பப்பட்ட காரணம்.

## இந்திய தேசியத்தின் உருவகம்

1893ல் அரவிந்தர் இந்தியாவிற்குத் திரும்பி வந்தார். பரோடா கல்வித் துறையில் அவர் ரூ. 750/- சம்பளம் பெற்றார். 1893 முதல் 1906 வரை அவர் சமஸ்கிருத மற்றும் வங்காள இலக்கியத்தையும், தத்துவம், அரசியல் விஞ்ஞானத்தையும் கற்றுத் தேர்ந்தார். பிறகு அவர் தமது வேலையை ராஜினாமா செய்துவிட்டு, வங்காள தேசியக் கல்லூரியில் 150 ரூ சம்பளத்தில் வேலைக்குச் சேர்ந்தார். விடுதலைப் போராட்டத்தில் அவர் முழு மூச்சுடன் ஈடுபட்டார். சுதந்திரப் போராட்டவீரர்களில் அவர் ஒரு முக்கிய தலைவராக விளங்கினார்.

ஆங்கில தினசரியான 'வந்தே மாதரம்' பத்திரிகையின் ஆசிரியராக இருந்து அவர் அச்சமற்ற துணிகரமான தலையங்கங்களை எழுதினார். அடுத்த சில மாதங்களிலேயே அவர் 'தர்மம்' என்ற ஆங்கில வாராந்தர பத்திரிகையை தொடங்கினார். "நமது சுயராஜ்யம் என்பது அன்னிய பிடியிலிருந்து முற்றிலும் விடுபட்ட பூரண சுதந்திரமே!, என்ற செய்தியை அவர் பரப்பினார். அந்த நாட்களில் பிரிட்டிஷ் பொருள்கள், பிரிட்டிஷ் நீதிமன்றங்கள் மற்றும் பிரிட்டிஷ் சம்பந்தப்பட்ட அனைத்தையும் பகிஷ்கரிக்குமாறு வெளிப்படையாக பிரச்சாரம் செய்தார். அமைதியான போராட்டத்திற்குத் தயாராகுமாறு அவர் எப்பொழுதும் மக்களைக் கேட்டுக் கொண்டார்.

## தெய்வீகப் பணிக்கு திருப்பப்பட்டார்

புகழ்பெற்ற அலிபூர் குண்டு வெடிப்பு வழக்கு ஸ்ரீ அரவிந்தர் வாழ்க்கையில் திருப்பத்தை ஏற்படுத்தியது. ஒரு வருடம் அலிபூர் மத்திய சிறையில் தனிமையில் ஸ்ரீ அரவிந்தர் கழித்தார். அந்தத் தனிமை சிறை வாழ்க்கையில்தான் அவர் தமது எதிர்கால வாழ்வு பற்றியும் தனக்கு இறைவன் இட்ட கட்டளை பற்றியும் கனவு கண்டார்.

அரவிந்தர் மோசமான உணவு, அரை குறை உடை, போதிய காற்று, ஒளி இன்மை, தனிமை போன்ற பல்வகை சிறைக் கொடுமைகளை சகித்துக் கொண்டார். இந்த சமயத்தை அவர் பகவத்கீதையை ஆழ்ந்து ஆராய்வதில் கழித்தார். சித்தரஞ்ஜன்தாஸ் ஸ்ரீ அரவிந்தருக்காக வாதாடினார். பல நாட்களுக்குப் பின் அரவிந்தர் விடுதலை செய்யப்பட்டார்.

## அவரது யோகப் பயிற்சி

1904ல் அரவிந்தர் தமது யோகத்தைத் தொடங்கினார். பரோடாவில் லேலே என்ற ஒரு மகாராஷ்டிரிய யோகியை சந்திக்கும் வரை அவர் யோகத்தில் எவரையும் உதவியாகக் கொள்ளவில்லை. யோகியுடன் அரவிந்தர் மூன்று நாட்கள் தியானம் பழகி மனதை அடக்கவும் எண்ண சுமையிலிருந்து விடுபடும் வழிபற்றியும் ஆராய்ந்தார்.

தமது யோகப் பயிற்சி பற்றி ஒரு முறை ஸ்ரீ அரவிந்தர் தாமே ஒரு கடிதத்தில் எழுதினார் :" குரு எவரும் இல்லாமல் நான் யோகியிடம் முக்கிய உதவி பெற்று, எனது சாதனையின் அடித்தளத்தை அமைத்துக் கொண்டேன்". கங்கா மடத்தைச் சேர்ந்த பிரம்மானந்தரின் சீடர் ஒருவரிடமிருந்து அவர் நியதிகளைக் கற்று தாமே யோகத்தைத் தொடங்கினார். முதலில் தினமும் ஆறு மணி

நேரத்திற்கும் மேலான கடினமான பிராணாயாமப் பயிற்சியாக அமைந்தது. அரவிந்தர் கீதை, உபநிஷதங் களின் போதனைகளைக் கற்று அவற்றை தியானித்தார்.

## பாண்டிச்சேரியில் ஆசிரமம்

கல்கத்தாவிலிருந்து சந்திரா நகருக்கு ஸ்ரீ அரவிந்தர் முதலில் சென்று பிறகு 1910ம் வருடம் ஏப்ரல் 4ம் தேதி பாண்டிச்சேரியைச்சென்றடைந்தார்பாண்டிச்சேரியில்முதலில் ஒரு நண்பரின் வீட்டில் தங்கினார். ஆரம்பத்தில் அவர் அங்கே நான்கைந்து நண்பர்களுடன் வசித்தார். படிப்படியாக நண்பர்களின் எண்ணிக்கை அதிகரித்தது. அவரைச் சுற்றி ஒரு ஆசிரமம் உருவானது. இப்பொழுது நூற்றுக்கணக்கான ஆசிரமவாசிகள் நூற்றுக்கும் மேலான வீடுகளில் தங்கவைக்கப்படுகின்றனர். ஆசிரமவாசிகள் ஆசிரமத்துடன் தொடர்புடைய பல்வேறு காரியங்களில் ஈடுபடுகின்றனர் - சிலர் மாட்டுப்பண்ணையில், சிலர் காய்கறித் தோட்டத்தில், சிலர் சலவைக்கூடத்தில், சிலர் பேக்கரியில், பல இளம் பெண்கள் ஆசிரம அச்சகத்தில் பணிபுரிகின்றனர். ஆசிரமத்தில் வசிப்பவர்களுக்கு ஆசிரமத்தின் அனைத்து வேலைகளும் சாதனையின் ஒரு அம்சமாக ஆகின்றன. இங்கே வாழ்க்கை தனித்தனி பகுதிகளாகப் பிரிக்கப்படாத ஒரு முழு அம்சமாகும்.

ஆசிரமத்தில் ஒரு பள்ளிக் கூடமும் அமைந்துள்ளது. இங்கே தேகப் பயிற்சிக்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. 14 முதல் 18 வயது வரை உள்ள மாணவ மாணவியருக்கு கைத்தொழில் கல்வி அளிக்கப்படுகிறது.

1920ம் ஆண்டு பால்ரிச்சர்டு என்பவரின் மனைவியான மீரா என்ற ஒரு பிரெஞ்சு பெண்மணி ஸ்ரீ அரவிந்தரின் தத்துவத்தால் ஈர்க்கப்பட்டு அவரது குழுவுடன் சேர்ந்தார். அவர் ஆசிரமத்தின் அன்னையாகி ஆசிரமத்தின்

பொறுப்புக்களுக்குத் தலைமை ஏற்றார். அவரது அறையை அடுத்து உள்ள திறந்த வெளியிலிருந்து அவரைக் காணக் கூடியிருந்த பக்தர்களுக்கு அவர் அதிகாலையில் தரிசனம் கொடுத்தார். ஆசிரமத்தின் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் அவர் உன்னிப்பாகக் கவனித்தார்.

ஸ்ரீ அரவிந்தாசிரமத்தில் உள்ளவர்கள் சன்யாசிகளல்ல. அரவிந்தரே சன்யாசி அல்ல, அவர் ஒரு ரிஷி.

ஆசிரமம் ஒரு பல்சமயக் கூட்டமைப்பு. அங்கே கிறிஸ்தவர்கள், சொராஸ்தர்கள், முஸ்லிம்கள் மற்றும் பல்சமயங்களைச் சார்ந்த அன்பர்கள் உளர்.

வருடத்தில் நான்குமுறை ஸ்ரீ அரவிந்தர் பக்தர்களுக்குக் காட்சி கொடுத்தார்.

ஆசிரமத்தின் எல்லா காரியங்களும் சாதகர்களாலேயே நிர்வகிக்கப்படுகின்றன.

அன்னை மற்றும் பால் ரிச்சர்டு தலைமையில் 'ஆர்யா' என்ற ஒரு ஆங்கில ஆன்மீக மாத ஏட்டை ஆசிரமம் தொடங்கியது. அரவிந்தரின் முக்கிய படைப்புக்கள் தொடர் கட்டுரைகளாக அதில் வெளிவந்தன. ஆறரை வருடங் களுக்குப் பிறகு 'ஆர்யா' வெளிவருவது நின்று விட்டது.

ஒரு முறை ரவீந்திரநாத் தாகூர் அரவிந்தாசிரமத்திற்கு விஜயம் செய்து அரவிந்தரிடம், "உங்களிடம் ஆற்றல் உள்ளது. அதை உங்களிடமிருந்து பெற நாங்கள் காத்திருக்கிறோம். இந்தியா உங்கள் குரலின் மூலம் உலகிற்குப் பேசும்", என்று கூறினார்.

## ஸ்ரீ அரவிந்தரின் கொள்கைகள்

ஸ்ரீ அரவிந்தரின் தத்துவம் நடைமுறை சாத்தியமானது. அது உண்மைகள், அனுபவம் மற்றும் ஒரு ரிஷியின் தீர்க்கதரிசனத்தை அடிப்படையாகக் கொண்டது.

அரவிந்தரின் ஆன்மீகம் பகுத்தறிவுக்கு முற்றிலும் பொருந்தியதாகும்.

மனிதனைப் பிணைக்கும் பந்தங்களிலிருந்து மட்டும் அவனை விடுவிப்பது ஸ்ரீ அரவிந்தரின் இலட்சியமல்ல. இறைவனின் திட்டத்தை உலகில் செயல்படுத்துவது, வாழ்வை ஆன்மீக மயமாக்குவது, தெய்வீக வாழ்க்கையை சமுதாயத்தின் மானசீக, பௌதிக மட்டத்தில் கொணருவதே அவரது இலட்சியமாகும்.

"கீழிருந்து எழும் உறுதியான தவறாத கோரிக்கையும், மேலேயிருந்து விடை அளிக்கும் மேலான கருணையும் இணையும்பொழுது இது சாத்தியமாகும். மாற்றம் ஒருமித்ததாக இருக்கவேண்டுமெனில் அவற்றைச் சார்ந்தவை அனைத்தையும் விடுவதும் ஒருமித்ததாக இருக்க வேண்டும்", என்கிறார் ஸ்ரீ அரவிந்தர்.

"நாம் கடவுளின் சாயலில், கடவுளிடம், கடவுளுடன் வாழவேண்டும். அவனது மகிழ்ச்சி பாயும் வாய்க்காலாக நாம் விளங்க வேண்டும். அனைத்து தீமைகளிலிருந்தும் விடுபட்டு நாம் அந்த தெய்வீக மின்சாரத்தின் கேந்திரங்களாக செயல்பட வேண்டும். அந்த மின்சக்தியை மனித சமூகத்தின் மூலம் செயல்பட அனுமதிக்க வேண்டும். அத்தகைய நம்மவரில் எவராவது ஒருவர் எங்காவது நின்றால் நம் சக்தி, மகிழ்ச்சியால் நிரப்பப்பட வேண்டும். சர்ச்சுகள், கொள்கைகள், தத்துவங்கள் மனித சமுதாயத்தை காப்பாற்ற தவறிவிட்டன. ஏனெனில் அவை வெறும் அறிவு சார்ந்த கொள்கைகளையும், நிறுவனங்களையும் வளர்ப்பதிலேயே முழுமூச்சுடன் செயல்பட்டுவிட்டன. இவை தான் மனித சமுதாயத்தைக் காக்கமுடியும் என அவை நம்பின. ஆனால் ஆன்ம சக்தியையும், ஆன்ம சுத்தியையும் புறக்கணித்துவிட்டன", என்கிறார் ஸ்ரீ அரவிந்தர்.

உலகிலுள்ள பலரது எண்ணத்தையும் ஆட்கொண்டுள்ள ஒரு மாபெரும் நூல் அரவிந்தரின் 'தெய்வீக வாழ்க்கை' ஆகும். கீதைக் கட்டுரைகள், இலட்சியமும் முன்னேற்றமும், ஈசா உபநிஷதம், உயர்ந்த மனிதன், பரிணாம வளர்ச்சி, ஹெராக்ளிடஸ்" கர்மயோகியின் லட்சியம், இந்தியாவின் மூளை, பாரதத்தில் மறுமலர்ச்சி, யோகத்தின் அடிப்படை, காளிதாசன், விக்கிரமோர்வசீ, கவிதைகள், இவ்வுலகின் புதிர் போன்றவை அவரது சில படைப்புகளாகும்.

## அரவிந்தரின் மகாசமாதி

பாண்டிச்சேரியில் 1950ம் வருடம் டிசம்பர் 5ம் தேதி இரவு 1.50க்கு ஸ்ரீ அரவிந்தர் மகாசமாதி அடைந்தார். அப்பொழுது அவருக்கு வயது 78. இரண்டு வார காலம் அவர் சிறுநீரகக் கோளாறினால் கஷ்டப்பட்டார். டாக்டர் பிரபாகர ஸென் அவருக்குச் சிகிச்சை அளித்தார்.

பாரதத்தாயினிடம் மேலும் ஒரு புகழ்பெற்ற புதல்வன் ஐக்கியமானார். கற்பூரம் தீயில் கரைவதுபோல், உலகெங்கும் தெய்வீக ஞானத்தைப் பரப்பிய ஒரு விளக்கு அணைந்தது. ஸ்ரீ அரவிந்தர் பிரபஞ்சத்தின் காரணனான தாமரைக் கண்ணனான ஸ்ரீ அரவிந்தனுடன் ஐக்கியமானார்.

ஸ்ரீஅரவிந்தர் ஒரு கவிஞர், அரசியல்வாதி, தத்துவ அறிஞர். அவரது படைப்புகள் - கவிதைகளாகட்டும் அல்லது தத்துவங்களாகட்டும் - அடிப்படையில் இந்தியத் தன்மையையும், அமைப்பு மற்றும் நடையில் மேற்கத்தியத் தன்மையையும் கொண்டு விளங்கின. நம் காலத்திய மாபெரும் அறிஞரும், ஆன்மீக வாழ்வின் ஒரு பிரதான சக்தியாகவும் அவர் விளங்கினார். அரசியலுக்கும், தத்துவத்திற்கும் அவர் ஆற்றிய தொண்டை பாரதம் என்றும் மறக்காது. சமயம் மற்றும் தத்துவத்திற்கு அவரது ஒப்பற்ற படைப்புகளுக்காக உலகம் அவருக்கு என்றென்றும் நன்றியுடையதாக இருக்கும்.

உலகப் பிரமுகர்களில் ஸ்ரீ அரவிந்தர் மிகவும் முக்கியமானவர். பாரதத்தின் தேசியவாதிகளுக்கு அவர் ஒரு உணர்ச்சி ஊட்டுபவராக இருந்தார். சமயத் தலைவர் என்ற முறையில் அவரது படைப்புகள் உலகம் உள்ளளவும் நிலைத்து நிற்கும்.

நவீன பாரதத்தின் மகுடம், தேசப்பற்றுள்ளவர்களில் மிகவும் ஆண்மை படைத்தவர், அறிஞர்களில் மிகவும் நுட்பமான அறிவு படைத்தவர், ஞானியரில் கூரிய மதிநுட்பம் வாய்ந்தவர், வேதரிஷிகளின் வழியில் வந்த பாரதம் அனைத்து அயல் பண்பாடுகளையும் தன்னுள் உட்கிரகிக்கவல்லது என்பதை ஸ்ரீ அரவிந்தர் நிரூபித்துக் காண்பித்தார். எவ்வித முரண்பாடும் இன்றி கீழை, மேலை கலாசாரங்கள் இணைந்து செல்லமுடியும் என்பதை அவர் நிரூபித்தார். அரவிந்தர் வாழ்ந்த மற்றும் பிரச்சாரம் செய்த தெய்வீக வாழ்க்கை மனித சமுதாயத்தை என்றென்றும் ஊக்குவிக்கும். அவரை எதிர்காலம் வேதரிஷிகளில் ஒருவராக போற்றிப் பாராட்டும். அவரது ஒளி என்றும் பிரகாசிக்குமாக!

## 27. சுவாமி ஸ்வயம் ப்ரகாச பிரம்மேந்திர சரஸ்வதி

சுவாமி ஸ்வயம்பிரகாச பிரம்மேந்திரஜியின் இயற்பெயர் கிருஷ்ணமூர்த்தி என்பதாகும். ஏழை வேத அறிஞரான ராமஸ்வாமி சாஸ்திரிகள் மற்றும் ஆசார அனுஷ்டானம் மிக்க ஜானகி தம்பதியருக்கு தமிழ்நாட்டில் தென்ஆற்காடு ஜில்லாவில் கல்பட்டு என்ற ஊரில் 1871 நவம்பர் 28ம் தேதி அவர் பிறந்தார்.

திருவிடைமருதூர், கும்பகோணம், மற்றும் திருவனந்தபுரம் ஆகிய மூன்று இடங்களில் சுவாமி பிரம்மேந்திரஜி கல்வி கற்றார். அவர் மெட்ரிகுலேஷன் தேர்வில் தேர்ச்சி பெற்று

சமஸ்கிருதத்தையும் கற்றார். பால சரஸ்வதி பட்ட ஸ்ரீ நாராயண சாஸ்திரிகள் என்ற பேரறிஞரிடம் அவர் கற்றார். பிறகு அவர் தமிழ்க் கவிதையும் கற்றார். அவரது நினைவு சக்தி அபாரமானது. நீண்ட பகுதிகளை குறிப்புகளுடன் அவர் ஒப்புவிக்கும் திறன் பெற்று விளங்கினார்.

அருகிலுள்ள கிராமத்தில் ஒரு பள்ளி ஆசிரியராக கிருஷ்ணமூர்த்தி பணி புரிந்தார். அதன் பின் மாதம் 50 ரூபாய் சம்பளத்தில் அவர் செட்டில்மென்ட் இலாக்காவில் குமாஸ்தாவாக சேர்ந்தார்.

கிருஷ்ணமூர்த்தி திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று அவரது சகோதரர் அவரை வற்புறுத்தினார். ஆனால் உறுதியாக கிருஷ்ணமூர்த்தி அதை மறுத்துவிட்டார். அவர் தமது வேலையை விட்டு விட்டு குருவை நாடி வடக்கு நோக்கி சென்றார். காசியில் அவர் சுவாமி தக்ஷிணா மூர்த்தியை சந்தித்து அவருடன் மூன்று வருடங்கள் தங்கினார். அவரிடம் வேதாந்தத்தை முழுமையாகக் கற்றார். காசியில் மௌனத்தை மேற்கொண்டு அவர் ஆறுமாதம் குருவிற்குத் தொண்டு செய்தார்.

அதன்பின் திருநெல்வேலி ஜில்லாவில் பாபநாசத்திற்கு அருகில் பாணதீர்த்தம் என்னுமிடத்தில் உள்ள ஒரு குகையில் ஜட்ஜ்சுவாமிகள் என்று அழைக்கப்பட்ட அவதூத சத்குரு பிரம்மேந்திர சரஸ்வதி சுவாமிகளை தேஜோமய மான சன்யாசியை சந்தித்தார்.

கிருஷ்ண மூர்த்தியை சோதிப்பதற்காக அவதூத சுவாமி அவர் மீது கற்களை எறிந்தார். அனைத்தையும் கிருஷ்ண மூர்த்தி பொறுமையுடன் சகித்துக் கொண்டார். தம்மீது எறிவதற்காக கற்களைப் பொறுக்கி அவர் சுவாமிகளிடம் கொடுத்தார். தீட்சை அளிப்பதற்கு கிருஷ்ணமூர்த்தி பக்குவம் பெற்றுவிட்டதாக சுவாமிகள் உணர்ந்தார்.

சுவாமியின் அறிவுரைப்படி 1891ம் ஆண்டு ஜுன் மாதம் பௌர்ணமி அன்று கிருஷ்ணமூர்த்தி அவர்து சொந்த ஊரான கல்பட்டுக்குச் சென்று அங்கே தன் தாயாருடன் மூன்று மணி நேரம் தங்கினார். அவரது உடலிலிருந்து ஆடைகள் தாமாகவே கழன்று விழுந்தன. அவர் உடனே அவதூத ஆசிரமத்தில் சேர்ந்தார்.

. சுவாமி ஸ்வயம்பிரகாச பிரம்மேந்திர சரஸ்வதி இங்குமங்கும் அலைந்து திரிந்தார். பசித்த பொழுது கிடைத்ததை உண்டு, தூக்கம் வந்த பொழுது உறங்கினார். சதாசிவப் பிரம்மேந்திரரின் சமாதி உள்ள நெரூரை அவர் சென்றடைந்தார். தஞ்சாவூர் ஜில்லாவில் உள்ள பல கிராமங்கள் வழியாக அவர் சென்றார். திருவண்ணா மலையில் உள்ள ஒரு குகையில் அவர் சில மாதங்கள் தங்கினார். பாரதம் முழுவதும் அவர் சுற்றினார். பத்ரிநாத்திற்கும் அவர் சென்றார்.

சுவாமி பிரம்மேந்திரர் உடையின்றி இருந்ததால் காவல் துறையினர் அவரை சிறையில் வைத்தனர். ஆனால் கிருஷ்ணஸ்வாமி என்ற ஒரு பிரபல வக்கீலின் உதவியால் அவர் வெளியே வந்தார்.

சுவாமி பிரம்மேந்திரருக்கு விஷம் கொடுக்கப்பட்டது. அவரது தலைமுடியும் தாடியும் தீ வைக்கப்பட்டன. தீயவர்களால் கொணரப்பட்ட வேசியரால் அவர் தூண்டப்பட்டார். அவரது இடுப்பைச் சுற்றி கயிற்றைக் கட்டி தெருவில் கொளுத்தும் வெயிலில் அவர் இழுத்துச் செல்லப்பட்டார். கடைசியாக சேலம் ஜில்லாவில் உள்ள சேந்தமங்கலம் கிராமத்திற்குச் சென்று அவர் கொல்லிமலைப் பகுதியில் சுற்றித் திரிந்தார். தமது உறைவிடத்திற்காகவும் தவத்திற்காகவும் அவர் சேந்தமங்கலத்தில் ஒரு குன்றினைத் தேர்ந்தெடுத்தார். அங்கே ஓய்வு பெற்ற ஒரு உயர்நீதிமன்ற நீதிபதியான K. சுந்தரம் செட்டியார் பக்தி சிரத்தையுடன் அவருக்குத் தொண்டு செய்தார்.

ஆன்மீக முன்னேற்றத்தின் ஒரு நடைமுறை விளக்கமாக சுவாமி பிரம்மேந்திரர் விளங்கினார். அவதூத ஆசிரமத்தின் கடுமையான தவநெறிகளை அவர் பின்பற்றினார். நிர்வாண நிலையில் அவர் இருந்ததால் அவருக்கு அளிக்கப்பட்ட தொல்லைகள் ஏராளம். அறியாத சிறுவர் களாலும் பாமரர்களாலும் அளிக்கப்பட்ட துன்பங்களை பொறுமையுடன் அவர் ஏற்றுக் கொண்டவிதம் அதிசயமானது. அவர் இளமையிலேயே உலக சுகங்களையும் போகங்களையும் விட்டுவிட்டார். ஆன்மஞானத்திற்கான தீராத வேட்கையுடன் அவர் கத்திமுனைக்கீடான நிவிருத்திமார்க்கத்தை மேற்கொண்டார். தமது சத்குருவின் அருளுடன் மிகுந்த உறுதியுடன் அவர் தமது ஆன்மீகப் பாதையைக் கடந்தார். அநேகம் சீடர்களுக்கு அவர் குருவாகத் திகழ்ந்தார். ஆண், பெண், குழந்தைகள் அனைவரும் அவரது ஆசியைப் பெற்றனர்.

ஜனங்களின் மனதில் பக்தி சிரத்தையை ஏற்படுத்துவதற்காக சுவாமிஜி தத்தாத்ரேயரின் விக்கிரத்தை அவரது ஆசிரமத்தில் பிரதிஷ்டை செய்தார். சுவாமிஜி உயிரோடிருக்கும் பொழுதே அவரது மூத்த சீடரான சுவாமி சங்கரானந்தா சுவாமிஜியின் பால் அவர் கொண்டு விளங்கிய அபரிமிதமான அன்பினாலும் மதிப்பினாலும் ஆசிரமத்தில் இருந்த குன்று ஒன்றின் மீது தத்தாத்ரேய விக்ரகம் ஒன்றையும் சுவாமிஜியின் பளிங்குச்சிலை ஒன்றையும் நிறுவ ஏற்பாடு செய்தார். இரண்டு அடுக்கு கட்டடத்தில் உள்ள தத்தாத்ரேய விக்ரகமும் சுவாமிஜியின் சிலையும் அவற்றை உருவாக்கிய சிற்பிகளின் கலைத்திறமையை வெளிப்படுத்துகின்றன. அமைதியான இனிய சூழலுடன் கூடிய இந்தக் கோவில் சுவாமி சங்கரானந்தரின் பொறுமைக்கும் திறமைக்கும் எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

சன்யாசிக்கரடு அல்லது சன்யாசிக்குன்றில் குஹாலயம் அமைக்கப்பட்டிருக்கிறது இந்தக் குன்று தத்தகிரி என்று இப்பொழுது அழைக்கப்படுகிறது. 1948ல் மகாசமாதி அடைந்த சுவாமிகளின் நினைவாக சேந்தமங்கலத்தில் உள்ள குஹாலயம் என்றென்றும் அவரது பெருமையைப் பறை சாற்றுவனவாக விளங்கும்.

## 28 சுவாமி ராமதீர்த்தர்

பிரபலமான ஹிந்தி ராமாயணத்தை இயற்றிய கோசாமி துளசிதாஸரின் நேரடி வாரிசான ராமதீர்த்தர் பஞ்சாபில் குஜரான்வாலா ஜில்லாவில் முரளிவாலா என்ற ஊரில் 1873ல் அவதரித்தார்.

ராமதீர்த்தர் மிகவும் புத்திக் கூர்மை உள்ள மாணவர். கணக்கின் பாலும், தனிமையின் பாலும் ஆர்வம் கொண்ட அவர் தியானத்தில் நாட்டம் உள்ள சீரிய அறிவாளியாக விளங்கினார். பி.ஏயில் முதல் மாணவராக தேறி அவர் எம்.ஏ. கணிதத்தில் பட்டமும் பெற்றார்.

லாகூர் போர்மன் கிறிஸ்டியன் கல்லூரியில் கணிதப் பேராசிரியராக இரண்டு வருடங்கள் பணியாற்றிய அவர், பின்னர் லாகூர் ஓரியண்டல் கல்லூரியில் ரீடராகப் பணிபுரிந்தார்.

1900ம் ஆண்டில் ராமதீர்த்தர் காட்டிற்குச் சென்றார். துறவை ஏற்றார். அவர் அமெரிக்காவிற்கும் ஜப்பானிற்கும் சென்று அந்நாட்டு மக்களை தமது உணர்ச்சியூட்டும் சொற்பொழிவுகளால் பெரிதும் கவர்ந்தார். எகிப்தில் முகம்மதியர்கள் அவருக்கு சிறப்பான வரவேற்பு அளித்தனர். அங்கே அவர் மசூதியில் பாரசீக மொழியில் சொற்பொழிவாற்றினார். ராமதீர்த்தர் எப்பொழுதும் மகிழ்ச்சியுடனும் சிரித்த முகத்துடனும் ஒளிமிக்க கண்களுடனும் இருப்பார். பாரசீகம், ஆங்கிலம், ஹிந்தி,

உருது, மற்றும் சமஸ்கிருத இலக்கியங்களில் அவர் பெரும் புலமை பெற்று விளங்கினார்.

ராமதீர்த்தர் ஒரு பெரும் துறவி மற்றும் விவேகம் கைவரப்பெற்ற ஞானி. ரவி நதிக்கரையில் அவர் யோகம் பயின்றார். பிறகு அவர் ரிஷிகேசத்திலிருந்து ஐந்து மைல் தூரத்திலுள்ள கங்கை நதிக்கரையில் இருந்த பிரம்மபுரிக் காடுகளில் அவர் தவம் செய்து ஆத்மஞானம் பெற்றார்.

இன்று ராமதீர்த்தர் அவரது பூத உடலுடன் நம்மிடையே இல்லை எனினும் உலகின் ஆன்மீக சரித்திரத்தில் அவர் ஒரு ஒளிமிக்க நட்சத்திரமாக அழியாப் புகழுடன் விளங்குகிறார். அவர் பரமானந்தத்துடன் சச்சிதானந்தப் பெருநிலையில் யாண்டும் திளைத்திருந்தார். பண்டைய மற்றும் நவீன ரிஷிகள் பரம்பொருளின் இந்த ஒப்பற்ற தன்மையை தர்க்க அறிவால் அன்றி பிறருக்கு உணர்த்த இயலாத நேரடி அனுபவத்தால் உணர்ந்தனர். இத்தகைய பரமானந்தத்தை அனுபவித்தவர்களுள் சுவாமி ராமதீர்த்தரும் ஒருவர். சுவாமி ராமதீர்த்தரின் நேரடி சீடரான ஸ்ரீ ஆர். எஸ். நாராயணசுவாமி அவர்களின் புனித மேற்பார் வையில் லக்னோவில் ராமதீர்த்தர் வெளியீட்டு நிறுவனம் ஏற்படுத்தப்பட்டது. ஸ்ரீராமதீர்த்தரின் உத்வேகமான எழுத்துக்களின்பால் பற்றுக் கொண்ட அவரது ஒவ்வொரு பக்தரும் சீடரும் ராமதீர்த்தரது வெளியீடுகளை உலகிற்கு அளிக்க மிகுந்த சிரமம் எடுத்துக் கொண்டுள்ள ஸ்ரீ நாராயண சுவாமிஜிக்கு மிக்க நன்றிக் கடன் பட்டுள்ளார்கள்.

பாரதம் ஈன்றெடுத்துள்ள அறிஞர்களுள் ஸ்ரீ சுவாமி ராமதீர்த்தர் மிகவும் புகழ்வாய்ந்தவர். இந்திய மறுமலர்ச்சிக்கு வித்திட்டு சக்தி வாய்ந்த ஆன்மீக அலைகளைப் பரப்பிய புகழ்பெற்ற தத்துவ ஞானிகளுள் ராமதீர்த்தர் தலையாயவர்.

பாரத நாட்டில் அவரது வருகையானது தற்கால மனிதனுக்கு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது ஆகும்.

ஸ்ரீ ராமதீர்த்தரிடமிருந்து பாரதம் வேதாந்த தைரியம், மற்றும் ஆன்மீக தேசப்பற்று என்ற இரண்டையும் பெற்றுள்ளது. ஸ்ரீராமதீர்த்தரின் ஆன்மீக தேசப்பற்று தனித்தன்மையும் பெருமையும் வாய்ந்தது. பாரதத்தின் ஒவ்வொரு குடிமகனும் அதைத் தன்னுடையதாக்கிக் கொள்ள வேண்டும். உங்களிடம் ஆழ்ந்த தேசப்பற்று இருக்குமானால், நீங்கள் தாய்நாட்டை தெய்வீகமாக்கி, பாரதநாட்டை அம்பிகையின் சொரூபமாகவே வழிபட வேண்டும். "இறைவனுடன் நீங்கள் ஒற்றுமையை விரும்பினால், முதலில் தேசம் முழுவதுடன் உங்களது ஒற்றுமையை உணருங்கள். இந்த தேசத்தில் உள்ள ஒவ்வொரு உயிரினத்திடத்தும் உள்ள உங்களது ஒருமைப்பாடு உங்கள் உடலில் உள்ள ஒவ்வொரு நாடி நரம்பிலும் உணரப்பட வேண்டும். பாரதம் முழுவதும் அவளது ஒவ்வொரு குடிமகனிடத்தும் உள்ளது என்ற தேசீய ஒருமைப்பாட்டை அனைவரும் உணர வேண்டும். மரங்களும், நதிகளும், கற்களும் உருவகப்படுத்தப்பட்டு இந்தியாவில் தியாகம் செய்யப்படுகின்ற பொழுது, உங்களைப் போஷித்துக் காப்பாற்றும் தாய்த் திருநாட்டை ஏன் நீங்கள் தெய்வமாக்கி வழிபடக்கூடாது? பிராண பிரதிஷ்டையின் மூலம் நீங்கள் ஒரு களிமண் அல்லது கல்விக்ரகத்தை சக்திவாய்ந்ததாக ஆக்குகின்றீர்கள். அப்படியாயின் பாரதத் தாய்த் திருநாட்டிடம் அவளது இயல்பான புகழையும் பெருமையையும் உணர்வதில் உங்களுக்கு எவ்வளவு அதிகம் ஆர்வம் இருக்க வேண்டும்?", என்கிறார் ஸ்ரீராமதீர்த்தர். இவ்விதம் தேசீய தர்மம் அல்லது தாய்நாட்டுப்பற்று விராட் அன்பு அல்லது ஆன்மீக தர்மமாக ஸ்ரீராமதீர்த்தரிடம் இருந்தது. இன்று ஒவ்வொரு இந்தியனும் இந்த ஒரு பெரும் கொள்கையை மனமார ஏற்றுக் கொள்ள வேண்டும். உங்களது இந்தச் செயலால் அந்தப் பெரிய ஞானியின்

தீர்க்கதரிசனத்திற்கு உங்களது பாராட்டைத் தெரிவியுங்கள். இவ்வாறு நீங்கள் அவரது வாழ்வையும் போதனையையும் பெருமைப்படுத்தலாம்.

நீங்கள் பிறந்த நாட்டுடன் உங்களை முழுக்கவும் ஒன்றுபடுத்திக் கொள்வதுவே தேசப்பற்றின் உச்சகட்ட உணர்வாகும். "உங்களது தேசம் மற்றும் மக்களுடன் உங்களை அன்பால் இணைத்துக் கொள்ளுங்கள்", என்ற அவரது வார்த்தைகளை நீங்கள் நினைவில் வையுங்கள். ஒரு ஆன்மீக வீரராக விளங்குங்கள். உங்களது ஆணவத்தை இல்லாதாக்கி உங்கள் நாட்டிற்காக உயிரை தியாகம் செய்யத் தயாராகுங்கள். தேசத்திற்கு எதெல்லாம் தேவையோ அதையெல்லாம் நீங்களும் நேசியுங்கள். நீங்கள் முன்னேற தேசம் உங்களைப் பின்பற்றும். இதுவே உண்மையில் நடைமுறை வேதாந்தம் ஆகும்.

இப்புவியில் பிறந்து உழல்வதற்காக நாம் வரவில்லை, மகிழ்ச்சிகரமாக வாழ்வதற்காகப் பிறந்திருக்கிறோம் என்றதொரு புத்துணர்ச்சியை மக்கள் மனதில் ராமதீர்த்தர் ஊட்டினார். வாழ்க்கைக் கடலில் நெடும் பயணம் செய்து ஏதோ ஒரு நீரற்ற பாலைவனத்தை நாம் அடைவதில்லை என்பதை அவர் எடுத்துரைத்தார். அவர் நடைமுறை வேதாந்தத்தை வாழ்ந்து காட்டினார். அதன் மூலம் ஆத்மானந்தத்தை ஒவ்வொருவரும் தங்கள் வாழ்வின் ஒவ்வொரு செயலிலும் இன்றே, இன்னே உணரமுடியும் என்பதை வலியுறுத்தினார்.

வேதாந்த வாழ்க்கையில் ஸ்ரீராமதீர்த்தர் ஒரு உதாரண புருஷராவார். அவர் ஒரு வீரமான நடைமுறை வேதாந்தி. ஆன்மீக வாழ்க்கையில் அவர் ஒரு துடிப்பான வாழ்க்கை வாழ்ந்தார். அவரது இலட்சியங்கள் மிக உயர்ந்தவை. அவரது கொள்கைகள் மிக உயர்ந்தவை. அவரது அன்பு இயற்கையானது. அவர் தெய்வ சொரூபம், அன்பின்

உருவகம், ஒவ்வொரு சாதகர் வாழ்விலும் ஆன்மீக ஒளியைப் பரப்பி இன்றும் அவர் ஒரு மாபெரும் ஆன்ம சக்தியாக விளங்குகிறார். அவரது போதனைகள் உணர்ச்சி ஊட்டுபவை, ஊக்கமளிப்பவை, முன்னேற்றத்திற்கு வழிவகுப்பவை.

ராமதீர்த்தரின் போதனைகள் நேரடியானதாகவும், சக்திமிக்கதாகவும் தனித்தன்மையுடன் விளங்குகின்றன. ராமதீர்த்தர் ஏதாவது பிரத்யேகமான யோகத்தையோ அல்லது சாதனையையோ அல்லது தத்துவத்தையோ போதிக்கவில்லை. வேதாந்தம், யோகம் மற்றும் சாதனையை எவ்வாறு வாழ்ந்து காட்டுவது என்பதை அவர் போதித்தார். அவர் தாமே வாழ்ந்து காட்டி இதை போதித்தார். ஒளிமயமான வாழ்விற்கான வழியை அவர் காண்பித்தார். அவரது கம்பீரமான தோற்றம், உத்வேகமூட்டும் சொற்பொழிவுகள் ஆகியவை டோக்யோ முதல் டொரான்டோ வரை உள்ள லட்சக்கணக்கானவர்களைத் தட்டி எழுப்பின.

மேனாட்டவர்களுக்கு ஸ்ரீராமதீர்த்தர் வெறும் கீழை நாட்டு அறிஞராக மட்டும் தோற்றமளிக்காமல், கிழக்கத்திய ஞானமே உருவெடுத்தது போல தோற்றமளித்தார். ஆன்மீக உணர்வுடன் கூடிய ஒரு பேரின்ப ஊற்றாக அவர் விளங்கினார். அவரது ஆனந்தம் எளிதில் எங்கும் பரவும் தன்மையது. அவரது பார்வை வேதாந்தத்தை பரப்பியது. அவரது புன்னகை ஆத்மானந்தத்தை அள்ளி வீசியது. அவரது உணர்ச்சிமயமான சொற்களிலும் அவரது வாழ்க்கை முழுவதிலும் வேதாந்தம் பெருக்கெடுத்தது. அவரது ஒவ்வொரு செயலிலும், அசைவிலும் வேதாந்த உணர்வு வெளிப்பட்டது.

வேதாந்தத்தை எப்படி வாழமுடியும் என்பதை ராமதீர்த்தர் செய்து காட்டினார். பொங்கும் இன்பம், மற்றும் நிறைந்த மனதுடன் அர்த்தமுள்ள வாழ்வு வாழ்வது எப்படி என்பதை

நிரூபிப்பதாக அவரது வாழ்வு அமைந்தது. வேதாந்தத்தை அறியும் ஒன்றாக இல்லாமல், வாழும் ஒன்றாக அவர் விளக்கினார். வேதாந்தத்தை ஒரு எளிய மிகச் சிறந்த வாழ்க்கை நெறியாக ஆக்கியபெருமை அவரைச் சாரும். மக்களை வேதாந்தத்திற்கு அவர் இட்டுச் செல்லவில்லை. மாறாக சாதாரண மனிதனிடம் வேதாந்தத்தை இட்டுச் சென்றார். அமைதியான இல்லங்கள், பரபரப்பான அலுவலகங்கள், ஜனசந்தடி மிக்க தெருக்கள், மற்றும் மேற்கத்திய நாடுகளின் இரைச்சல் மிகுந்த சந்தைகளிலும் அவர் வேதாந்தத்தைக் கொணர்ந்தார்.

கீழை, மேலை நாடுகள் இரண்டிற்குமே ராமதீர்த்தரது வாழ்க்கை ஒரு வரப்ரஸாதமாக அமைந்தது. அவர் தமது உத்வேகம் பொருந்திய வாழ்க்கையிலிருந்து பெற்ற ஊக்கத்தினால் வேதாந்தத்தை பாரதமெங்கும் பரப்பினார். மூடப் பழக்கங்கள், தவறான கருத்துக்களிலிருந்து அவர் இந்தியாவை விடுவித்தார். அமெரிக்கர்களை ஆத்மீக வாழ்க்கைக்கு தட்டி எழுப்பினார். பெரும் பெரும் காரியங்கள் அனைத்திற்கும் அடிப்படையாக ஒருமை, ஆனந்தம் நிறைந்த தெய்வீக விதியே விளங்குகிறது என்பதை அவர் வெளிப்படுத்தினார்.

சுயநலம் நீக்கி பரந்த மனப்பாங்குடன் செயல்படுவதே தெய்வீக வாழ்வின் அடிப்படையாகும். "நீங்கள் உங்கள் சச்சிதானந்த சொரூபத்தை உணருங்கள். உடனேயே உங்களிடமிருந்து இனிய வீரமான செயல், ஞானம் மூலம் நிலையான ஆனந்தம் வெளிப்படும். இதுவே ஊக்கமான வாழ்க்கை, உங்கள் பிறப்புரிமையும் கூட", என்று அவர் தம் நாட்டு மக்களுக்கு அறை கூவல் விடுத்தார்.

ராமதீர்த்தர் அமெரிக்கர்களுக்கு பூரண ஒழுக்கத்தையும் அடக்கத்தையும் கற்றுக் கொடுத்தார். உடலை சுறுசுறுப்பான வேலையில் ஈடுபடுத்தி, பிரம்மச்சர்யத்தைக் கடைப்பிடித்து,

மனதையும் அமைதிப்படுத்தி வாழ்வது என்பது இவ்வுலகிலேயே துக்கம், சோகம் நீங்கி வாழ்வது சாத்தியம். பூரணப்பொருளுடன் நமது ஐக்கியத்தை உணருவது என்பதுவே உண்மையான ஆத்மானுபவமாகும். அமெரிக்க நாட்டில் ஸ்ரீராமதீர்த்தரது போதனை இதுவேயாகும்.

தெய்வீக ஒருமை மற்றும் அன்பின் விளக்கமாகவே ஸ்ரீராமதீர்த்தரது வாழ்வு அமைந்தது. கேளுங்கள்! ஸ்ரீ ராம தீர்த்தரது ஒலி கேட்கிறது : "ஆசிர்வதிக்கப்பட்டவர்களே! ஒளியின் ஊற்றாக, மகிழ்ச்சியின் இருப்பிடமாக, அனைத்தின் ஆன்மாவாக நீங்கள் ஒளிரவேண்டும். அப்பொழுது உங்களிடம் ஆற்றலும், செயலும் வெளிப்படும். மலர் மலர்கிறது மணம் அதாகவே நாற்புறமும் பரவுகிறது". பாரதமே! விழித்தெழு! ராமதீர்த்தரின் இந்த கோரிக்கைக்குச் செவிமடுங்கள். வாருங்கள், ஆத்மனில் வாழுங்கள். இந்த வினாடியிலிருந்து ராமதீர்த்தர் உங்களுக்குள் புகுந்து செயல்களையும் வாழ்க்கையையும் ஊக்குவிக்கட்டும். அவரது தெய்வீக ஆன்மா உங்களைப் பெருநிலைக்கு உயர்த்தட்டும்! ஓமில் வாழுங்கள்.

## 29. ஸ்ரீ ரமண மஹரிஷி

1879 டிசம்பர் 30ம் தேதியன்று ஸ்ரீ ரமண மகரிஷி பிறந்தார். அவரது இயற்பெயர் வெங்கட்டராமன். ஆசாரம் மிகுந்த ஒரு நடுத்தரக் குடும்பத்தில் பிறந்த அவர் ஒரு கிறிஸ்தவ மிஷினரி பள்ளியில் சேர்ந்து சிறிது ஆங்கிலம் கற்றார்.

### வீட்டை விட்டு ஓடுதல்

1896ம் ஆண்டு ஆகஸ்டு 29ம் தேதி மதுரை ஜில்லாவில் உள்ள தன் வீட்டை விட்டு அருணாசலேச்வரரான தனது தந்தையைத் தேடிச் சென்று 1896ம் ஆண்டு செப்டம்பர் 1ம் தேதி அவரைக் கண்டு கீழ்க்கண்டவாறு பிரார்த்தித்தார்.

இறைவா! உன் அழைப்பை ஏற்று

அனைவரையும் துறந்து வந்துற்றேன் நான் இங்கே

எனக்கு வரம் ஒன்றும் வேண்டாம்,

என்னை ஏற்று உன்னுடையதாக்கிக் கொள்ளமாட்டாயா? அந்த நாளிலிருந்து அவரது பூவுலக வாழ்வில் இறுதி வரை அவர் அருணாசலத்தை (திருவண்ணாமலை) தனது உறைவிடமாக ஆக்கி, ஆணவமற்று, மௌன மொழியின் மூலம் பூமியின் நான்கு மூலைகளிலும் பேருண்மையைப் பரப்பினார்.

தனது அண்ணன் மீது கோபம் கொண்ட வெங்கட்டராமன் ஒரு குறிப்பை எழுதி வைத்தார். "அவரது உத்தரவுப்படி என் தந்தையைத் தேடி நான் இங்கிருந்து கிளம்பிவிட்டேன். இது ஒரு நல்ல காரியத்தில் பிரவேசித்திருக்கிறது. இதற்காக எவரும் வருந்த வேண்டாம், இதைத் தேட வேண்டாம். இதைத் தேட பணம் எதுவும் செலவழிக்க வேண்டாம்".

## பெரும் விழிப்பிணர்வு

அவர் எவ்விதம் மாற்றம் அடைந்தார் என்று பக்தர்கள் கேட்டதற்கு ஸ்ரீரமண மஹரிஷி,"1896ம் ஆண்டு மத்தியில் நான் மதுரையை விட்டு வந்த பொழுது என்னிடம் அந்தப் பெரும் மாற்றம் ஏற்பட்டது. அது திடீரென்று அமைந்தது. ஒருநாள் எனது மாமாவின் வீட்டின் முதல் மாடியில் நான் தனியே அமர்ந்து கொண்டிருந்தேன். எனது ஆரோக்கியமும் நல்ல நிலைமையில் இருந்தது. ஆனால் திடீரென்று மரணத்தைப்பற்றிய இனம் புரியாத பயம் என்னைப் பற்றிக் கொண்டது. நான் மரணமடையப் போவதாக உணர்ந்தேன். உடனே நிகழப்போவது அனைத்தையும் உணர்ந்தேன். டாக்டரோ, மூத்தவரோ அல்லது தலைவரோ யாரையும்

நான் இந்த விஷயத்தில் கலந்தாலோசிக்க விரும்பவில்லை நானே அந்தப் பிரச்சினையை அப்பொழுதே தீர்க்க முயற்சி செய்தேன். மரணபயம் என்னிடத்தில் அகமுகச்சிந்தனையைத் தூண்டியது. "மரணம் இப்பொழுது வந்து விட்டது. மரணம் என்றால் என்ன? மரணமடைவது எது? இந்த உடல் மரிக்கிறது." என்று நானே எனக்குள் சொல்லிக் கொண்டேன். அந்த நிலைமையை உடனே நான் நடித்துப் பார்த்தேன். எனது உறுப்புகளை நான் விரைப்பாக நீட்டிப்படுத்தேன். செத்தவன் போல நடித்தேன். பிணம் எப்படி இருக்கும் என்பதை மனதினால் சிந்தித்தேன். என் மூச்சை அடக்கி நிறுத்தி இரண்டு உதடுகளையும் இறுக்க மூடினேன். "சரி இந்த உடல் செத்துவிட்டது. இது மயானத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டுஎரிக்கப்படும். சாம்பலாகும். இந்த உடலின் அழிவோடு நான் அழிந்து விடுகிறேனா? இந்த உடல்தான் நானா? உடல்பேசாது ஜடமாயிருக்கிறது. ஆனால் என்னுள் பூரண உணர்வு இருக்கிறது 'நான்'எனும் ஒலியை என்னுள் நான் உணர்கிறேன். அந்த 'நான்'என் உடலிலிருந்து வேறுபட்டது. பூத உடல் அழிகிறது. அதிலும் உயர்ந்த ஆன்மா மரணத்தால் பாதிக்கப்படாமல் உள்ளது. அந்த மரணமில்லாத ஆத்மாவே நான்," என்று நான் எனக்குள் மனத்துள் சொன்னேன். இது அனைத்தும் ஏதோவெறும் அறிவு பூர்வமானதொரு ஜாலமாயில்லாமல், எந்தவிதமான தர்க்கத்திற்கும் இடமின்றி உடனடியாக உணரக்கூடியதொரு உண்மையாக நான் உணர்ந்தேன். நான் ஒரு மெய்ப் பொருள், அந்த நிலைமையில் உள்ள ஒரே மெய்ப்பொருள், உடலுடன் தொடர்புடைய அனைத்து நிகழ்ச்சிகளும் அதை மையமாகக் கொண்டு நிகழ்ந்தன. 'நான்' அனைத்தையும் மிகுந்த ஆர்வத்துடன் கவனித்தேன். உடனே மரணபயம் என்னைவிட்டு நிரந்தரமாக நீங்கியது. அப்பொழுது முதல் இப்பொழுதுவரை நான் ஆன்மாவில் லயமாகிவிட்டேன்.

## மஹரிஷியின் தவம்

பாதாளலிங்கம், சுப்பிரமணியர் கோவில், மாமரத் தோட்டம், ஸத்குரு சுவாமிகுகை, கோரா குன்றுகள் மற்றும் ஆயிரங்கால் மண்டபத்தில் ரமணர் தவம் செய்தார். 1909முதல் 1916வரை அவர் வீரூபாட்சி குகையில் வசித்தார்.

அவரது தவ நாட்களில் போக்கிரிப் பையன்கள் அவர்மீது கற்களை வீசித் துன்புறுத்தினர். ஆனால் ரமணர் தமது தவம் மற்றும் தியானத்தின் வலிமையால் அவற்றை அமைதியுடன் ஏற்றார்.

திருவண்ணாமலையில் ரமணமஹரிஷி பிராம்மண சுவாமி என்று அழைக்கப்பட்டார். புகழ் பெற்ற சமஸ்கிருத அறிஞரான காவ்யகண்ட கணபதி சாஸ்திரிகள் 1908ல் ரமணாசிரமத்திற்கு வந்து மகரிஷியுடன் தங்கி ரமணகீதை யை எழுதினார்.

மஹரிஷியின் வாழ்க்கை ஆனந்த அனுபவமான ஒரு தொடர் தியானமாகும். தமக்குள்ளே அவர் அமைதியை நிலைநாட்டினார். உள்ளே இறைவனின் பேரொளியில் அவர் வாழ்ந்தார். அதை மற்றவர்களும் செய்ய அவர் தூண்டினார். அவருக்கு உலகம் முழுவதும் ஒன்றாகத் தென்பட்டது.

மஹரிஷி பெரும்பாலும் பேசவே மாட்டார், மிக மிகத் தேவை என்றாலொழிய அவர் சில வார்த்தைகளோடு நிறுத்திக் கொள்வார்.

## அவரது தெய்வீக போதனை

உபநிடத போதனைகளை வாழ்ந்து காட்டிய எடுத்துக்காட்டாக ரமணர் விளங்கினார். அவரது போதனை களின் சாரமாக அமைந்தது. அவர் மக்களின் இதயத்துடன் பேசினார்.

அந்த உயர்ந்த மகரிஷி தன்னைத் தன்னுள் கண்டு மாபெரும் எளிய போதனையான'உன்னை நீ அறி' என்ற தத்துவத்தைப் புகட்டினார்.

"உன்னை நீ அறி' மற்ற அனைத்தும் உனக்குத் தானாகவே தெரியவரும். அழியாத அமர ஆத்மனுக்கும் அழியும் நிலையில்லாத இந்தப் பிரபஞ்சம் மற்றும் உடலுக்குமிடையேயான வித்தியாசத்தைத் தெரிந்து கொள்ளுங்கள். நான் யார்? என்று விசாரம் செய்யுங்கள். மனதை அமைதியாக்குங்கள். ஆத்ம சிந்தனை அல்லாத மற்ற எல்லா சிந்தனைகளையும் வெறுத் தொதுக்குங்கள். உங்கள் இதய குகையினுள் மூழ்குங்கள். உண்மையான பூரண 'நானை' கண்டுபிடியுங்கள். அங்கே அமைதியுடன் தங்குங்கள். பரமாத்மனுடன் ஒன்றுபடுங்கள் இதுவே ரமண மகரிஷியின் போதனைகளின் சாரம்.

"உண்மையான ஆத்மனை அறியாததால்தான் உலகம் இவ்வளவு துக்கப்படுகிறது." மனிதனது நிஜ சொரூபம் ஆனந்தமே. ஆனந்தம் ஆத்மனில் இயற்கையிலேயே உள்ளது. மனிதனின் இன்ப நாட்டம் என்பது அவனது ஆன்ம நாட்டத்தின் வெளிப்பாடேயாகும். உண்மையான ஆத்மன் அழியாதது. எனவே அதை மனிதன் காணும் பொழுது முடிவற்ற ஆனந்தத்தை அனுபவிக்கிறான்.

"நான், நான் என்ற உணர்வுடன் ஒரே பரம் பொருள் இதயகுகையின் மத்தியில் யாண்டும் ஒளிர்ந்து கொண்டிருக் கிறது. அவனை அறிய உள் ஆராய்ச்சியாலோ, உள்ளே மூழ்குவதாலோ அல்லது மூச்சடக்கப் பயிற்சியாலோ ஒரு நிலைப்பட்ட மனத்துடன் அவனை அறியுங்கள். பரமாத் மனில் லயித்திருங்கள்."

ஸ்ரீரமணரின் 'நான் யார்?' உபதேசாரம், உள்ளது நாற்பது ஆகியவை தெளிவாக அமைந்த நேரடி ஞானத்தின் முத்துக்களாகும்.

அகில இந்திய சாயி சமாஜத்தின் காலம் சென்ற தலைவரான ஸ்ரீபி.வி. நரசிம்மசுவாமி 'ஆத்மானுபவம்' என்னும் தலைப்பில் அற்புதமான ரமணசரிதத்தை எழுதியுள்ளார். தமிழில் யோகி சுத்தானந்தபாரதி ரமணரின் வாழ்க்கையை எழுதியுள்ளார்.

ஆன்மஞானம் சமாதி என்பது எல்லாம் ஏதோ பழைய காலத்து விஷயம். இன்றைய விஞ்ஞான உலகில் அது சாத்தியமல்ல என்ற சில உலகாயதவாதிகளின் கூற்றை ரமணர் பொய்யாக்கினார். பரம்பொருளை உணர்வது சாத்தியம், அந்த உணர்வுடன் இவ்வுலகில் வாழ்வதும் முடியும் என்பதை அவர் தமது வாழ்நாள் முழுவதுமான சமாதி நிலையில் வாழ்ந்து காட்டினார்.

அன்பான சாதகர்களே! உறுதி கொள்ளுங்கள். துணிவை மேற்கொள்ளுங்கள். யோக சாதனையில் உங்களை ஈடுபடுத்துங்கள். விரைவில் நீங்கள் விதேக கைவல்யத்தை அடைந்து ஞானம் கைவரப் பெற்ற முனிவராகத் திகழ்வீர்கள்.

## முன்னிலும் அதிகமாக ஒளி பிரகாசிக்கிறது

பகவானது முழங்கையில் ஏற்பட்ட பிளவையால் அவர் வருந்திய பொழுது வட ஆற்காடு ஜில்லாவைச் சேர்ந்த லெப்டி கர்னல் பி.வி. கரம்சந்தானி, ஐஎம்எஸ், டிஎம்ஓ அவர்கள் அவருக்குச் சிகிச்சை அளித்தார். நான்கு முறை மஹரிஷிக்கு அறுவைச் சிகிச்சை செய்யப்பட்டது.

ஸ்ரீரமண மகரிஷி இப்பூதவுடலை விட்டு மகா சமாதி அடைந்த தினமான 1950 ஏப்ரல் 14ம் தேதியன்று இரவு 8.47க்கு ஒருவால் நட்சத்திரம் விண்ணை நோக்கிச் சென்றது.

பகவான் ரமணர் மூலம் பிரகாசித்த ஒளி அதனது யதார்த்த நிலையைச் சென்றடைந்தது. உபநிஷதங்களின்

வாழ்க்கை விளக்கமே மஹறிஷி ரமணராவார். பரம்பொருளின் நிருபணமாக அந்த தத்துவம் என்றும் நிலைத்து நிற்கும்.

மஹறிஷி இன்று நம்முடன் பூத உடலில் இல்லை. ஆனால் அவரது ஆன்ம ஒளி ஒவ்வொரு தனி நபர் மூலமாகவும் ஒளிர்கிறது. மஹறிஷி ரமணர் இன்று நமது இதயத்தில் இருக்கிறார். அவரது மறைவிற்காக நாம் வருந்தக்கூடாது. ஏனெனில் அவர் அவரது வாழ்வின் இலட்சியத்தைப் பூர்த்தி செய்துவிட்டார். ஆன்மபோதம் என்ற அரிய பெருநிலையை அவர் எய்திவிட்டார். எனவே வருத்தப்பட எதுவும் இல்லை வாழ்க்கையின் இலட்சியத்தை அடையாதவர்கள் மரணமடையும் பொழுதுதான் வருத்தப்படவேண்டும். மஹறிஷியின் ஆன்மப் பிரகாசம் முன்னிலும் பன்மடங்கு மேலாக இப்பொழுது ஒளிர்கிறது.

ரமணர் அனுபவித்த பேருண்மையை லட்சக்கணக்கான மக்கள் தாங்களே தேடிக் கண்டு கொள்ளும் வண்ணம் அவர்களை வழிநடத்தி ஊக்கப்படுத்தும் வண்ணம், மகரிஷி சமுதாயத்தினரின் இதயத்தில் என்றும் வாழ்வார்.

ரமணமகரிஷி புத்தக அறிவின் மூலம் அல்லாமல், நடைமுறை அனுபவத்தின் மூலம் வேதாந்த தத்துவத்தை மிக அற்புதமாக விளக்கினார். தெய்வீக அனுபவத்தில் உள்ள அரிய தத்துவங்களை மிக உயர்ந்த மோனத்தின் மூலம் அவர் உபதேசித்தார். ஒருவனிடம் உள்ளுறைந்துள்ள தெய்வீகத்தை உறுதி செய்தல், அழியாத ஆத்ம போதத்தில் வாழ முயற்சித்தல், வாழ்வின் சிக்கல்களுக்கிடையே அந்த மேலான மோனத்தில் வெறும் சாட்சியாக இருத்தல் போன்றவையே மகரிஷியின் அறை கூவலாகும். சமயச் சண்டைகளையும் கொள்கைகளையும் அவர் பொருள் படுத்தவேயில்லை. ஏனெனில் அவர் இந்த உலகாயத கட்டுப்பாடுகள் அனைத்திற்கும் அப்பாற்பட்டு விளங்கினார்.

அவருடன் ஆசார பிராம்மண புரோகிதர்களும், முஸ்லிம்களும் கிறிஸ்தவர்களும், 'தீண்டத்தகாதோர்' என்று சொல்லப்படுவர்களும் வசித்தனர். அனைவரும் அவருக்கு சமமாகவே தென்பட்டனர்.

அளக்க முடியாத அவரது மௌனத்தின் மூலம் புவியில் சோர்ந்து போன யாத்திரிகர்களை இலட்சியத்திற்கு அழைத்துச் சென்றார், அழைத்துச் செல்கிறார்.

அவரது போதனைகளின் படி வாழ்ந்து வளர்வதுவே நாம் அம் மகானுக்குச் செய்யும் சிறந்த அஞ்சலியாகும்.

எங்கும் அமைதி நிலவட்டும்!

## 30. மகான் குடிடி பாபா

சமீப காலத்தில் பாரத நாட்டில் வாழ்ந்த மிகச் சிறந்த சித்தர்களுள் மகான் குடிடிபாபா ஒருவர். பல இளைஞர்களை அவர் நாஸ்திகர்களாவதிலிருந்து தடுத்தார். அவர் தமது பல அரிய சித்துக்களால் ஆன்மீகப் புகழின் ஆற்றலை காட்டியுள்ளார். சாஸ்திரங்களை அவமதித்து எள்ளி நகையாடுவோரை அவர் அவை எவ்வளவு நம்பத் தகுந்தவை என்பதை தமது ஆன்மீக சக்தியால் நிரூபித்துக் காட்டினார். லோகாயதத்தின் பிடியிலிருந்து அவர் பல இளைஞர்களைக் காத்தார். அவர் ஒரு சித்த மகாத்மா. ஆயிரக் கணக்கான மைல்களுக்கப்பாலுள்ள பொருள்கள் அவர் கையில் வந்து நிற்கும். மூலிகை மருந்துகளைப் பற்றி அவருக்கு நிறைய ஞானம் இருந்தது. இப்பெரும் மகாத்மா சமீப காலம் வரை நமது பாரத நாட்டை ஆசீர்வதித்து வந்தார். 1951 மார்ச் 6ம் தேதியன்று அவர் தமது பூத உடலை உகுத்தார்.

முப்பது வருடங்களுக்கு முன் இம் மகான் ஒரே ஒரு 'குடிடி'யுடன் பில்குவா என்ற இடத்திற்கு வந்தார். குடிடி

என்பது உள்ளே பஞ்சுவைத்து தைக்கப்பட்ட ஒரு போர்வையாகும். அதில் பல வண்ணங்களில் இருந்த சிறுசிறு துணிகள் தைக்கப்பட்டிருந்தன. அம் மகானிடம் ஒரு சிறு பாத்திரமும் மூங்கில் குழாயும் இருந்தன. அதில் தான் அவர் தண்ணீரையோ பாலையோ குடிப்பார். தெய்வீக உணர்வு மிக்கவராக அவர் அதையே ஒரு இசைக் கருவியாகவும் பயன்படுத்தினார். அவரிடம் வேறு எந்த உடைமையும் கிடையாது. கபீர், துளசி, நானக் போன்றவர் களது பாடல்களை அவர் பாடுவார். அவரது இனிய கீர்த்தனையாலும், பஜனையாலும் அவர் கேட்பவர்களை பரவச நிலையில் ஆழ்த்திவிடுவார்.

அந்நாட்களில் பில்குவா ஆர்ய சமாஜத்தார் மற்றும் காங்கிரஸ்காரர்களின் மையமாக இருந்தது. ஒவ்வொரு வாரமும் அங்கே கூட்டம் நடக்கும். அதில் விக்கிரக வழிபாட்டையும் சனாதன தர்மத்தையும் இழித்துப் பேசுவர். சிரார்த்தம், தர்ப்பணம் மற்றும் பிராம்மணர்களை அவர்கள் பழிப்பர். பாபாஜி மௌனம் அனுஷ்டிப்பார். எனவே அவர் எவருடனும் பேசமாட்டார். ஆனால் சில சமயங்களில் அவர் உரத்த குரலில் சிரிப்பார், சில சமயங்களில் ஆனந்த நிலையில் பாடல்களைப் பாடுவார், மற்ற வேளைகளில் மௌனியாயிருப்பார். சில சமயங்களில் அவர் கிருஷ்ண பக்தியைப் பற்றியும் மற்ற வேளைகளில் கேவல அத்வைத வேதாந்தத்தைப் பற்றியும் பேசுவார்."இரண்டாவது நபர் எவரும் கிடையாது. இருப்பது நான் மட்டுமே. யார் யாருடன் பேசுவது? 'ந ஹம் ந தும் தர்பார் கம்'.

ஒரு சமயம் பாபாஜி சில ராஜபுதன சிறுவர்களை அவரிடம் அழைத்தார். அப்பொழுது அவர் ஒரு சிவன் கோவிலில் தங்கியிருந்தார். குழந்தைகள் அவரிடம் ஓடிவந்தன. பாபாஜி தமது குடிடியிலிருந்து சில நூல்களை எடுத்து குழந்தைகள் கையில் கொடுத்தார். அதன் பின்

கையை மூடிக் கொள்ளும்படி அவர் குழந்தைகளிடம் கூறினார். அவர்களும் அவ்வாறே கைகளை மூடினர். பிறகு கையைத் திறக்கும்படி சொன்னார். அவர்களது கையில் பாதாம்பருப்பு, உலர்ந்த திராட்சைப் பழங்கள், சர்க்கரை, முதலியவற்றைக் கண்டு அந்த குழந்தைகள் அதிசயித்தனர். அவற்றை அவர்கள் மிகுந்த ஆர்வத்துடன் சாப்பிட்டனர்.

அவரது பெயர், வயது, ஜாதி, இனம் முதலியவை பற்றி எவருக்குமே ஒன்றும் தெரியாது. அவரிடம் எப்பொழுதும் ஒரு குடிடி இருந்ததால் அவர் குடிடிபாபா என்று அழைக்கப்பட்டார். அவரது முகத்தில் எப்பொழுதும் பிரகாசம் தென்பட்டது. அது அவரை முப்பது வயது இளைஞராகவே காட்டியது. அவர் பில்குவாவுக்கு முதலில் வந்தபொழுதும் அப்படியே இருந்தார். பலர், அதிசயங்கள் பலவற்றை அவர் செய்து காட்டியதாகக் கூறினர். சிலர் அவருக்கு வயது நூறுக்கும் அதிகம் என்றார்கள். நகரத்திற்கு அவர் வந்த சமயத்தில் ஆயிரக்கணக்கானோர் தரிசனத்திற்காக அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். நாள் செல்லச் செல்ல நம்பிக்கையில்லாதவர்களும் கூட அவரைக் காணக் கூடினர். அவர் தன்னை ஷாஇன்ஷா என்று அழைத்தார். ஷாஇன்ஷா என்றால் சக்கரவர்த்தி என்று அர்த்தம். அவருக்கு ஆசை எதுவும் கிடையாது. அவருக்கு கவலை கிடையாது. எதற்கும் அவர் வருந்தியது கிடையாது. எவரிடமிருந்தும் அவர் எதையும் விரும்பியது கிடையாது. அவரிடம் வெறும் கோவணம் மட்டுமே இருந்தது. உப்பின்றி அவர் உணவு உட்கொண்டார். கடவுள் அவரிடமும் அவர் கடவுளிடமும் இருந்தனர். இத்தகைய முனிவர் ஒருவரின் முன் இந்திரனும் ஒரு பொருட்டன்று.

அவரது ஆன்மீகப் பெருநிலையில் குடிடிபாபா "ஞானக் துகிவா ஸப் ஸம்ஸாரா, ஸுகியா வஹி ஜோ நாம அதாரா என்று பாடுவார். இதன் பொருள்", உலகில் எல்லோரும்

துன்புறுகின்றனர். ஆனால் பகவான் நாமத்தை ஜபிப்பவன் மட்டுமே சந்தோஷமாயிருப்பான்'', என்பதாகும். பெரும்பாலும் அவர் கைகளை மேலே தூக்கிக் கொண்டிருப்பார். அவற்றில் திராட்சைப் பழங்கள் தோன்றும். அதை அனைவரும் உண்டு மகிழ்வர்.

சில நாஸ்திகர்கள் பாபாஜியை மந்திரவாதி என்று கருதினர். ''இவன் ஒரு போக்கிரி, மந்திரத்தால் மக்களை இவன் ஏமாற்றுகிறான்'', என்று அவர்கள் சொன்னார்கள். ஒரு சமயம் பாபாவைச் சுற்றிலும் பெரும் கூட்டம் கூடியிருந்தது. ஒரு சிஷ்யர் ஒரு டம்ளர் பாலைக் கொண்டு வந்து பாபாவின் திருவோட்டில் விட்டார். என்ன ஆச்சரியம்! அங்கே பாலைக் காணோம். அதற்குப் பதில் திராட்சைப் பழக் கொத்து இருந்தது. அவற்றில் சிலவற்றை பாபா பாலைக் கொண்டு வந்தவரிடம் கொடுத்தார். அவரை எதிர்த்தவர்கள் அனைவரும் இந்த அதிசய நிகழ்ச்சியைப் பார்த்து வாயடைத்து நின்றனர்.

ஒரு நாள் கூட்டத்தில் ஏராளமான அவ நம்பிக்கையாளர்கள் இருந்தனர். அவர்கள் கடவுளையும் கடவுள் சம்பந்தப்பட்டது அனைத்தையும் எதிர்த்தனர். அவர்களில் ஒருவரிடம் பாபாஜி ஒரு டம்பளர் பால் கொண்டு வருமாறு கூறினார். அதை மூங்கில் குவளையில் விட்டு பாபாஜி குடித்தார். பிறகு அவர் டம்ளரைத் திரும்பக் கொடுத்துவிட்டு, பாலைக் கொண்டுவந்தவனிடம் அந்த காலி டம்பளரைக் குலுக்கச் சொன்னார். அவனும் குலுக்கினான். அவன் கடவுளை நம்பாதவன். ஆனால் அவர் சொன்னதைச் செய்தான். அந்த டம்ளரை நான்கு ஐந்து தரம் குலுக்கினான். அதனுள் ஒரு ரூபாய் நாணயத்தின் ஒலி கேட்டது. பாபாஜி மீண்டும் அந்த டம்ளரைக் குலுக்கச் சொன்னார். மீண்டும் ஒரு ரூபாய் நாணயம் அதில் வந்தது. அதுபோல் ஐந்து முறை அவர் செய்யச் சொன்னார். ஐந்து

ரூபாய்க்கு நாணயம் வந்தது. "இதைக் கொண்டு போய் பால் வாங்கின காசைச் செலுத்து", என்றார் பாபாஜி. கூடியிருந்தோர் அதைக் கண்டு ஆச்சரியமடைந்தனர்.

ஒரு முறை குடிடிபாபா, மஹாம்மா ஆத்மாராம்ஜியுடன் அவரது குடீரில் தங்கினார். இது ஒரு பெரும் கூட்டத்தை அங்கே கூட்டியது. சோபாராம்ஜி, பி.ஏ., பி.டி., மற்றும் ஒரு நாஸ்திகர் அவரைக் காண வந்தனர். அவர்கள் பாபாஜியிடம் ஏதாவது அற்புதத்தைச் செய்து காட்டும்படி வேண்டினர். தனக்கு மக்கள் கருதுவது போல எதுவுமே தெரியாது என்று மிகுந்த பணிவுடன் பாபாஜி சொன்னார். திரும்பத் திரும்ப அவர்கள் வற்புறுத்தியதும் அவர்கள் பார்க்க விரும்புவது என்ன என்று கேட்டார். அவர்கள் காண்டகார் அன்னாசிப்பழத்தை அவரிடமிருந்து பெற விரும்புவதாகத் தெரிவித்தனர். அந்தப் பருவத்தில் அன்னாசிப்பழம் எங்குமே கிடைக்காததொன்றாகும். சில நிமிடங்களுக்குள் பாபாஜியின் கைகளில் இருந்த கைக்குட்டையில் ஒரு அன்னாசிப் பழம் தோன்றியது. அனைவரும் அதைக் கண்டு அதிசயித்தனர். எல்லாரும் அதை ருசித்துப் பார்த்து விட்டு அது மிகச் சிறந்த ரகம் என்று கூறினர். அத்தகைய பழம் காண்டஹாரில் மட்டுமே கிடைக்கும்.

மற்றொரு சமயம் சில குழந்தைகள் குடிடிபாபாவைச் சூழ்ந்து கொண்டு பாதாம் பருப்பு வேண்டுமென்று கேட்டனர். வினாடிப் பொழுதில் பாபா தமது கைகளை மேலே உயர்த்தி பாதாம் பருப்பை பெற்று அனைவருக்கும் விநியோகம் செய்தார். திடீரென்று அந்தச் சிறுவர்களில் ஒருவன் 'எனக்கு பாதாம்வேண்டாம் பால்பேடா தான் வேண்டும்' என்று கத்தினான். உடனே பாபாஜி தமது கைகளை உயர்த்தி அதைப் பெற்று அந்தப் பையனுக்குக் கொடுத்தார்.

மற்றொரு சமயம் கோர்ட் விஷயமாக லாலா ஜகன்னாத் காசியாபாத்துக்குப் போய்க் கொண்டிருந்தார். அப்பொழுது பாபாஜி அவரை அணுகி தமது ஸ்நானத்திற்காக கொஞ்சம் சோப்பும் எண்ணையும் வேண்டும் என்று கேட்டார். லாலாஜி தாம் ஒரு அவசர காரியமாகப் போய்க் கொண்டிருப்பதாகவும் தமக்கு அப்பொழுது நேரம் இல்லை என்றும் கூறினார். உடனே பாபாஜி அருகிலிருந்த கிணறு ஒன்றிற்குள் கையைவிட்டார். என்ன ஆச்சரியம்! ஒரு பெரிய சோப்புக் கட்டியும், எண்ணெய் நிரம்பியபாட்டிலும் வெளியே வந்தன. இதைப் பார்த்து அனைவரும் அதிசயித்தனர்.

ஒரு சமயம் பாபாஜி குர்ஜாவிற்குச் சென்றார். அங்கே அவருக்கு யாரையும் தெரியாது.அருகில் ஒரு சுடுகாடு இருந்தது. அங்கே தன் உடல் மீது சாம்பலைப் பூசிக் கொண்டு பாபாஜி வசித்தார். அந்தவழியாக சில கல்லூரி மாணவர்கள் செல்வதை அவர் பார்த்தார். அவர் தன் கைகளை மேலே தூக்கினார். நிறைய பாதாமும் அன்னாசிப் பழங்களும் வந்தன. அவற்றை அவர் அந்த மாணவர்களுக்கு அவற்றை விநியோகித்தார். அதைக் காண சிறிது நேரத்தில் பெருங்கூட்டம் அங்கே கூடியது.

குடிடி பாபாவிற்கு மருந்துகளைப் பற்றிய அறிவும் நிறைய இருந்தது. அவருக்கு ஏராளமான மருந்துகளைப் பற்றித் தெரியும். வியக்கத்தக்க விதத்தில் அவற்றால் அவர் மக்களைக் குணப்படுத்தினார். கந்தகத்திலிருந்து அவர் எண்ணை வடித்தார். மற்றொரு சமயம் கிராமத்தில் உள்ள மக்கள் கந்தகத்திலிருந்து எண்ணெய் எடுக்க முயன்றனர். ஆனால் அவர்களால் முடியவில்லை. அப்பொழுது அங்கே வந்த பாபாஜி அதற்கு அவர்களுக்கு உதவினார். அது எப்படி முடிந்தது என்று கேட்டபொழுது "நீங்கள் மந்திரம், தந்திரம், சிறந்த மருத்துவ மூலிகைகள் மூன்றையும் ஒன்றிணைக்க வேண்டும்", என்றார்.

பல சிக்கலான மருந்துகளைத் தயாரிப்பதில் பாபாஜி வைத்தியர்களுக்கு உதவினார். அவர் பாதரசத்தைக் கெட்டிப்படுத்தும் வித்தையை அறிந்திருந்தார். அதனால் வானத்தில் பறந்து இடத்துக்கு இடம் செல்ல வல்லவராயிருந்தார்.

ஒரு பக்தர் ஒரு சமயம் மகன் வேண்டி பாபாஜியிடம் வந்தார். அவருக்கு பாபாஜி தங்கபஸ்பத்தை அளித்தார். அவரும் மகப்பேறு பெற்றார். தங்களால் தீர்க்க முடியாத வியாதிகளை பாபாஜியால் குணப்படுத்த முடிந்ததைக் கண்டு டாக்டர்கள் அதிசயித்தனர்.

1951 பிப்ரவரியில் பாபாஜி பில்குவாவிற்கு வந்தார். "எனது உடல் தளர்ந்துவிட்டது. அதற்கு மாற்றம் தேவைப்படுகிறது. இந்த உடலில் நான் வெகுகாலம் வாழ்ந்துவிட்டேன். இப்பொழுது இந்த உடலை நான் விட்டுவிட வேண்டும். இந்த உடல் அழியக் கூடியது. இது நீண்ட நாள் இருக்காது", என்றார் பாபாஜி. பின்னர் பாபாஜி மிகவும் நோய்வாய்ப்பட்டார். அவர் மீரட்டிற்குக் கொண்டு செல்லப்பட்டார். அனைவரிடமும் தனது மரணம் பற்றி அவர் தெரிவித்தார். சில பக்தர்களிடம் எந்த நாளில் எந்த நேரத்தில் அவரது மரணம் நேரும் என்பதையும் அவர் தெரிவித்தார். அது அப்படியே நடந்தது. மீரட்டிற்குக் கொண்டு போகும் வழியில் அவர் காரிலேயே உடலை உகுத்தார். கர்முக்தேஸ்வரில் பாபாஜியின் உடல் கங்கையில் சமர்ப்பிக்கப்பட்டது.

## சுவாமி சிவானந்தா தமிழ் நூல்கள்

| | |
|---|---|
| இயற்கை மருத்துவம் | ... 45—00 |
| இதோ! உங்கள் கேள்விக்குப் பதில்! | ... 40—00 |
| இந்த உண்மைகளைச் சிந்தியுங்கள் | ... 40—00 |
| வாழ்விலும் ஆத்மானுபூதியிலும் வெற்றிக்கு நிச்சயமான வழிகள் | ... 30—00 |
| தியான யோகம் | ... 30—00 |
| ஆன்மீகக் கதைகள் | ... 30—00 |
| மரணத்திற்குப் பின் மனிதன் போவது எங்கே! | ... 30...00 |
| ஞானோபதேசம் | ... 30—00 |
| இந்து தர்மம் | ... 30—00 |
| ஞான யோகம் | ... 20—00 |
| ஹிந்து விரதங்களும் விழாக்களும் | ... 20—00 |
| சிவானந்தர் வாழ்க்கை வரலாறு | ... 20—00 |
| யோக சாரம் | ... 20—00 |
| சிவானந்தரின் நீதிக்கதைகள் | ... 20—00 |
| பகவத் கீதை (ஸ்லோகமும் அர்த்தமும்) | ... 20—00 |
| அறுபத்து மூன்று நாயன்மார்கள் வரலாறு | 20—00 |
| சிவானந்தரின் சித்தி விளையாடல்கள் | ... 20—00 |
| குண்டலினி யோகம் | ... 20—00 |
| சிறுவர் சிறுமியர்க்கு தெய்வீக வாழ்க்கை | 20—00 |
| ஜபயோகம் | ... 20—00 |
| பிரம்மச்சரியத்தின் இரகசியம் | ... 20—00 |
| யோக வாசிஷ்டம் | ... 20—00 |
| முக்கியமான 20 ஆன்மீகப் போதனைகள் | 15—00 |
| 100 ஆண்டுகள் வாழ்வது எப்படி? | ... 15—00 |
| ஆன்மீக வாழ்க்கையில் புதிய தொடக்கம் | 15—00 |
| ஓம் தியானமும் மாண்டூக்கிய உபநிடதமும் | ... 15—00 |
| வைராக்கியம் பெறுவது எப்படி? | ... 15—00 |
| சாதன சதுஷ்டயம் | ... 15-00 |
| ஆரம்ப வேதாந்தம் | ... 10—00 |
| ஒளி சக்தி ஞானம் | ... 10—00 |
| அன்னை பராசக்தி | ... 10—00 |
| யோகப் பயிற்சி வழிகாட்டி | ... 10—00 |
| பகவத்கீதை (அர்த்தம் மட்டும்) | ... 10—00 |
| சர்வரோக நிவாரணி (சுவாமி பூமானந்தா) | 8—00 |